மலர் - 1 இதழ் - 8



# தமிழணங்கு

(தமிழராய் இணைவோம்)

இலக்கியம், சமயம், பண்பாட்டு ஆய்விதழ்
பிப்ரவரி 2023

தனிச்சுற்றுக்கு மட்டும்

ஆசிரியர்: முனைவர் திருமதி செ. இராஜேஸ்வரி







அன்பளிப்பு உரூபாய்: 120/-




*மலர்-1* *பிப்ரவரி – 2023* *இதழ்-8*



***சிறப்பாசிரியர்***
*பொறிஞர் கவிஞர் முத்தமிழ் விரும்பி*

***நிறுவனர் & தலைமைப் பதிப்பாசிரியர்***
*முனைவர். திருமதி செ. இராஜேஸ்வரி*

***பொறுப்பாசிரியர்***
*முனைவர். சந்திரிகா சுப்பிரமணியன்*

***ஆசிரியர் குழு***
*கிங்ஸ்டன் ஜெகநாதன் (இந்தியா)*
*தேமொழி (அமெரிக்கா)*
*அன்பு ஜெயா (ஆஸ்திரேலியா)*
*மின்னச்சன் இங்கர்சால் (நோர்வே)*
*Dr. புதேரி தானப்பன் (டில்லி)*

***வடிவமைப்பு***
*C. சந்திர விமல் M.A., B.Ed*



*தனி இதழ் ............................................ ரூ 120*
*அரையாண்டு சந்தா ............................ ரூ 600*
*ஆண்டு சந்தா........................................ ரூ 1200*

Google Pay / Phone Pay *மூலம் செலுத்த*
*+91 7010997639*

**Thamizhanangu**

Printed & Published by
E. Satish Rajkumar (Advocate)
3/422, Thiruvalluvar Street,
Dinamani Nagar, Madurai,
Tamil Nadu 625 018.
Ph: +91 7871123226, +91 7010997639

*கட்டுரைகள் அனுப்புவோர்*
rajetamiljuly1@gmail.com
thamizhanangu1@gmail.com *க்கு அனுப்பவும்*



*இவ்விதழில் இடம்பெற்றுள்ள கருத்துக்கள் அனைத்தும் கட்டுரையாளர்களின் கருத்துகளே ஆகும். அந்த கருத்துக்களுக்கும் இதழாசிரியருக்கும் எந்தத் தொடர்பும் இல்லை.*

- *இதழ் ஆசிரியர்*




# தமிழின் சிறப்பு

யாமறிந்த மொழிகளிலே
தமிழ்மொழிபோல்
இனிதாவ தெங்குங் காணோம்
பாமரராய், விலங்குகளாய், உலகனைத்தும்
இகழ்ச்சிசொலப் பான்மை கெட்டு
நாமமது தமிழரெனக் கொண்டிங்கு
வாழ்ந்திடுதல் நன்றோ? சொல்லீர்
தேமதுரத் தமிழோசை உலகமெலாம்
பரவும் வகை செய்தல் வேண்டும.

யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல்,
வாள்ளுவர்போல், இளங்கோவைப் போல்
பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை
உண்மை, வெறும் புகழ்ச்சி யில்லை
ஊமையராய்ச் செவிடர்களாய்க்
குருடர்களாய்
வாழ்கின்§ம், ஒருசொற் கேளீர்
சேமமுற வேண்டுமெனில்
தெருவெல்லாம்
தமிழ் முழக்கம் செழிக்கச் செய்வீர்.

பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்
தமிழ் மொழியிற் பெயர்த்தல் வேண்டும்
இறவாத புகழுடைய புதுநூல்கள்
தமிழ்மொழியில் இயற்றல்வேண்டும்
மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள்
சொல்லுவதிலோர் மகிமை யில்லை
திறமான புலமையெனில் வெளிநாட்டோர்
அதை வணக்கஞ் செய்தல் வேண்டும்.

- மகாகவி சுப்பிரமணிய பாரதியார்

## உள்ளடக்கம்

# சங்கக் காலத்தில் - நீர், நிலம், பொருள் வளம்.

***அன்பு ஜெயா***, ***நிறுவனர்***,
*தமிழ் வளர்ச்சி மன்றம், சிட்னி*



***முன்னுரை:***

*தமிழர்களின் வாழ்க்கை வரலாற்றை மீளாய்வு செய்து நோக்கும்போது, பண்டைத் தமிழர்கள் எவ்வளவு சிறப்புடன் தம் வாழ்க்கையையும் வாழ்க்கைச் சூழலையும் அமைத்துக் கொண்டார்கள் என்று வியக்கத் தோன்றுகிறது! நாட்டு மக்களின் வாழ்க்கை சிறப்புடன் அமைய வேண்டுமானால் நாடு வளமுள்ளதாக இருக்க வேண்டும். அப்படித் தமிழர்கள் தங்கள் வாழ்க்கையை வடிவமைத்துக் கொண்ட முறைகளை நமக்கு எடுத்துக் காட்டுபவை சங்க இலக்கியங்கள்.*

*அந்த இலக்கியங்களைப் பாண்டிய மன்னர்கள் தலைச் சங்கம், இடைச் சங்கம், கடைச் சங்கம் என்று மூன்று சங்கங்களை அமைத்து வளர்த்தனர். அவர்கள் தமிழன்னைக்குப் பணி புரிந்த காலமே 'சங்கக் காலம்' என்று போற்றப்படுகிறது.*

*சங்கக் காலத்தில் தமிழிலக்கியங்கள் வளம் பெற்றிருந்ததைப் போலவே, தமிழ் மக்களின் வாழ்க்கையும் வளம் பெற்றிருந்தது. நீர் வளமும், நில வளமும், பொருள் வளமும் சிறப்பாக இருந்தன. சங்கத் தமிழரின் வாழ்வு, அற வாழ்வாக இருந்தது. இத்தகைய அற வாழ்விற்கு ஏற்ற சூழல் அவசியமாகும். அச்சூழலையும் சாதகமாக அமைத்துக்கொண்டு வாழ்வது என்பது மிக மிக இன்றியமையாதது. அவ்வகையில் சங்கத் தமிழர்களுக்கு அமைந்த நிலம் நீர் சார்ந்த சூழல் பற்றியும் அவற்றைப் பழந் தமிழர் தம்முடைய அறவாழ்விற்குச் சாதகமாக அமைத்துக்கொண்டு வாழ்ந்த வாழ்க்கையைப் பற்றியும் அறிவது என்பது இயற்கையையும் அற வாழ்வையும் பாதுகாக்கவேண்டியது தேவையாக உள்ள இன்றைய வாழ்வியலுக்கு மிகவும் அவசியமான ஒன்றாகும்.*

*நாட்டு மக்கள் வளம்பெற நாடு வளமுள்ளதாக இருக்கவேண்டும். சங்கக் காலத் தமிழர்களின் வளத்தை அறிய அவர்கள் வாழ்ந்தபோது இருந்த நாட்டின் வளங்களைப் பற்றி சற்று ஆராயவேண்டும். நீர் வளமும் நில வளமும் சேர்ந்திருந்தால்தான் ஒரு நாட்டின் பொருள் வளம் பெருகும் என்பது நாம் அறிந்த உண்மை. அதைச் சங்கக் காலத்திலேயே மக்கள் உணர்ந்திருந்தார்கள் என்பதைச் சங்க இலக்கியங்கள் படம் பிடித்துக் காட்டுகின்றன. அவற்றில் சிலவற்றை இங்கே உற்று நோக்கலாம்.*

***நீர் வளம்:***

*''------- குண கடல் கொண்டு குட கடல் முற்றி*

*இரவும் எல்லையும் இளிவு இடன் அறியாது*

*அவலும் மிசையும் நீர்த் திரள்பு ஈண்டி*

*------------------------------------------------------*

*குணகடற்கு இவர் தரும் குரூஉப் புனல் உந்தி*

*நிவந்து செல் நீத்தம் குளம் கொளச் சாற்றி,*

*- மதுரைக் காஞ்சி, 238-246.*




*என்று மாங்குடி மருதனார், கீழ்க்கடலில் நீரை மொண்ட மேகமானது, மேற்குத் திசையில் உள்ள மலைகளில் தங்கி, இரவு பகல் எது என்று தெரியாதபடி அடைமழையைப் பெய்விக்கும். அந்த மழை நீரானது மேட்டிலும் பள்ளத்திலும் பாய்ந்து, கிழக்குக் கடலை நோக்கி ஓடும். அப்படி ஓடுகின்ற நீரைக் குளங்களில் தேக்கிவைப்பர் என்று அக்காலத்தில் நீர் நிலைகளை எப்படிப் பாதுகாத்தனர் என்று கூறியுள்ளார்.*

*மேலும்,*

*''கல் காயும் கடு வேனிலொடு , இரு வானம் பெயல் ஒளிப்பினும்*
*வரும் வைகல் மீன் பிறழினும், வெள்ளம் மாறாது விளையுள் பெருக,*
*- மதுரைக் காஞ்சி, 106-109.*

*என்று, பாண்டிய நாட்டில், மலைகள் சூடேறிக் காய்ந்து போகும்படி வெப்பம் அதிகமாகி, மேகம் மழை பெய்யாது போனாலும், விடியற்காலை தோன்றும் வெள்ளி நட்சத்திரம் வடக்கே தோன்றுவதற்குப் பதிலாக தெற்கே தோன்றினாலும், ஆறுகள் வற்றாது நீர்ப் பெருக்கோடு ஓடுவதால், விளைச்சல் பெருகியிருக்கும் என்று பாண்டிய நாட்டின் வளத்தை விவரித்துள்ளார்.*

*சோழ நாட்டின் காவிரி நீர்வளம் பற்றி பட்டினப்பாலை'யில் கடியலூர் உருத்திரங் கண்ணனார்,*

*''வான் பொய்ப்பினும், தான் பொய்யா,*

*மலைத் தலைய கடல் காவிரி*

*புனல் பரந்து பொன் கொழிக்கும்.''*

*- பட்டினப்பாலை, 5-8.*

*என்று, மழை பெய்யாது போனாலும் தான் பொய்க்காது, நீர் சுமந்து வரும் காவிரி ஆறு பாயப் பொன்னாய் விளையும் கழனி வயல்கள் நிறைந்தது சோழநாடு என்று உரைக்கின்றார்.*

*இதைப் போலவே, சேர நாட்டிலுள்ள பேரியாற்றில் (பெரியாறு) வறண்ட காலத்திலும் வெள்ளம் பாய்ந்தோடியது என்பதை,*

*'குன்று வறம் கூரச் சுடர் சினம் திகழ,*

*அருவி அற்ற பெரு வறற் காலையும்,*

*அருஞ் செலல் பேர் ஆற்று இருங் கரை உடைத்து ------'*

*- பதிற்றுப்பத்து, 5: 3.13-15.*

*என்று காசறு செய்யுட் பரணர் கூறியுள்ளார்.*

*நாட்டின் நீர்வளத்தைப் பெருக்க மன்னர்கள் செய்தவை பற்றி,*

*''காடு கொன்று நாடாக்கிக்*

*குளம் தொட்டு வளம்பெருக்கி'*

*- பட்டினப்பாலை, 283-284.*

*என்று, அக்கால மன்னர்கள் ஆறுகளை வெட்டி, அவற்றின் வழியே மலைகளில் பெய்யும் மழை நீரை ஏரி, குளம், ஊருணி என்னும் நிலைகளில் பாய்ச்சி நாட்டை வளப்படுத்தியதையும், கரிகால் சோழன் காவிரிக்குக் கரை அமைத்து, அதன் நீர்*

*கால்வாய் வழி ஓடி நாடெங்கும் பயனளிக்க வழிசெய்தான் என்பதையும் பட்டினப்பாலைப் பாடல் உணர்த்துகிறது.*

*நீர் வளம் பற்றி நெடுநல்வாடையில்,*

*பெயல் உலந்து எழுந்த பொங்கல் வெண் மழை*

*அகல் இரு விசும்பில் துவலை கற்ப --------*

*-- நெடுநல்வாடை 19-20.*

*என வானம் அப்போதுதான் மழைத் தூவலைக் கற்றுக்கொள்வது போன்று தொடர்ந்து மழை பெய்தது என்றும்,*

*வையகம் பனிப்ப வலன் ஏர்பு வளைஇப்*

*பொய்யா வானம் புதுப் பெயல் பொழிந்தன -------*

*- நெடுநல்வாடை 1-2.*

*என்று பருவகாலத்தில் பொய்க்காமல், உலகமே குளிர்ந்திடும் வகையில்,*

*வானம் புதிய மழையைப் பெய்திட,*

*இருங் களி பரந்த ஈர வெண் மணல்*

*செவ்வரி நாரையொடு எவ் வாயும் கவர*

*கயல் அறல் எதிர கடும் புனல் சா அய் ------*

*- நெடுநல்வாடை 16-18.*

*என்று, வண்டலான மணற்பரப்பில் நின்று கொண்டு தம் இரைக்காக வாய் திறந்து காத்திருக்கும் கொக்குகளின் வாயில், நீர்ப்பெருக்குள்ள ஆற்றில் எதிர் நீச்சல் போட்டுத் துள்ளிக் குதிக்கும் மீன்கள் தானாக வந்து வீழ்கின்றனவாம். அவ்வாறு அந்நிலத்தில் நீர்ப் பெருக்கை வருணிக்கின்ற காட்சியினை நக்கீரர் விவரிக்கின்றார்.*

*பட்டினப்பாலையில், நீர் வழியாக மரக்கலங்களில் வந்த பொருட்களை இறக்குமதி செய்யவும், உள்நாட்டில் விளைந்தவற்றைக் கடல் வழி ஏற்றுமதி செய்யவும் நிலவளமும் நீர்வளமும் உதவும் காட்சியினை,*

*வான்முகந்தநீர் மலைப்பொழியவும்*

*மலைப்பொழிந்தநீர் கடற்பரப்பவும்*

*மாரிபெய்யும் பருவம்போல*

*நீரினின்று நிலத்துஏற்றவும்*

*நிலத்தினின்று நீர்பரப்பவும்*

*அளந்தறியாப் பலபண்டம்*

*வரம்புஅறியாமை வந்துஈண்டி*

*– பட்டினப்பாலை 126-132.*

*என்று உருத்திரங்கண்ணனார் சித்தரிக்கின்றார்.*

*உடலுக்கு உயிர் எப்படி முக்கியமோ அதைப்போல உணவும் முக்கியம். உணவு என்பது நிலத்தோடு சேர்ந்த நீராகும். அதுவே வேளாண்மைக்கு இன்றியமையாததாகும். அதனால்தான், நீர் வளத்தையும் நில வளத்தையும் பெருக்கி விளைச்சலுக்கு உதவியவர்கள், உயிரையும் உடலையும் காப்போர் என்று புகழப் படுகிறார்கள். அதனால், நீரினைத் தேக்கி நீர்நிலைகளை உண்டாக்கியவர்களே வானுலக இன்பங்களை நிலவுலகிலேயே பெற்று மகிழ்வார்கள் என்பதை,*

*நீரின்று அமையா யாக்கைக்கு எல்லாம்*

*உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே!*

*உண்டி முதற்றே உணவின் பிண்டம்;*

*உணவெனப் படுவது நிலத்தொடு நீரே!*

*நீரும் நிலனும் புணரியோர், ஈண்டு*

*உடம்பும் உயிரும் படைத்திசி னோரே!*

*- புறநானூறு – 18: 18-23.*

*என்று நீர்வளத்தின் முக்கியத்தை குடபுலவியனார் இந்தப் பாடலில் அறிவுறுத்துகின்றார்.*

***நில வளம்:***

*சேர, சோழ, பாண்டிய மன்னர்கள் பாரியின் மகளிரை மணக்க விரும்பி அவனுடன் போரிட்டு தோல்வி அடைந்தனர். அதைக் கண்ட புலவர் கபிலர் அவர்களிடம் பாரியுடைய பறம்பு நாட்டின் வளத்தை, சிறப்பை விவரிக்கும் முகமாக, .“நீங்கள் மூன்று பேரும் கூடி பறம்பு நாட்டை முற்றுகை இட்டாலும், அவனை வெல்ல முடியாது. ஏனென்றால், பறம்பு நாடு வளம் நிறைந்த நாடு. உழவர்கள் நிலத்தை உழாமல் நிறுத்தி வைத்திருந்தாலும் பல வித உணவுப் பொருள்கள் நிறைந்த நாடு. அங்கே, சிறிய இலைகளை உடைய மூங்கிலில் நெல்*

விளையும், இனிய சுளைகளையுடைய பலா பழுத்து மணம் வீசிக் கொண்டிருக்கும், வளமையான கொடிகளை உடைய வள்ளிக்கிழங்கு அளவிற்கதிகமாக விளைந்திருக்கும், முற்றிய தேன் நிறைந்து கிடக்கும் நாடு பறம்பு நாடு. அதனால், நீங்கள் மூவரும் அவன் நாட்டை முற்றுகை இட்டாலும், அவனுடைய மக்கள் எந்தப் பொருளுக்காகவும் வெளியே வர வேண்டிய அவசியமில்லை'', என்பதை,

*அளிதோ தானே, பாரியது பறம்பே;*

*நளிகொள் முரசின் மூவிரும் முற்றினும்*

*உழவர் உழாதன நான்குபயன் உடைத்தே;*

*ஒன்றே, சிறியிலை வெதிரின் நெல்விளை யும்மே;*

*இரண்டே, தீஞ்சுளைப் பலவின் பழம்ஊழ்க் கும்மே;*

*மூன்றே, கொழுங்கொடி வள்ளிக் கிழங்கு வீழ்க்கும்மே;*

*நான்கே, அணிநிற ஓரி பாய்தலின் மீதுஅழிந்து*

*திணிநெடுங் குன்றம் தேன்சொரி யும்மே.*

*வான்கண் அற்றுஅவன் மலையே;*

*- புறநானூறு – 109:1-9.*

என்ற பாடலில் கபிலர் எடுத்துரைக்கின்றார்.

நெடுநல்வாடையில்,

*அம் கண் அகல் வயல் ஆர் பெயல் கலித்த*

*வண் தோட்டு நெல்லின் வருகதிர் வணங்க*

*- நெடுநல்வாடை 21-22.*



என்று அழகிய வயல்வெளியில் மழை அதிகமாகப் பெய்ததனால் வளமாக வளர்ந்த நெற்பயிரின் கதிர்கள் சாய்ந்து, தலைவணங்குவது போல் கிடந்தனவாம்.

நெற்பயிர்கள் மட்டுமா.......

*முழு முதல் கமுகின் மணி உறழ் எருத்தின்*

*கொழு மடல் அவிழ்ந்த குழூஉக்கொள் பெருங்குலை,*

*- நெடுநல்வாடை 23-24.*

*அங்குள்ள கமுகு மரங்களில் செழித்து வளர்ந்துள்ள மடல் பகுதியில் இருந்து பெரிய காய்களை உடைய குலைகள் தொங்குகின்றன.*

*கமுகு மட்டுமா.....*

*நுண்நீர் தெவிள வீங்கிப் புடை திரண்டு*

*தெண் நீர்ப் பசுங்காய் சேறு கொள முற்ற*

*- நெடுநல்வாடை 25-26.*

*அங்கு, நீர் திரண்டு பருத்த காய்களை உடைய தென்னை மரங்களும் உள்ளன என்று நாட்டின் வளத்தை நக்கீரர் எடுத்துக் கூறுகின்றார்.*

*அதைப்போலவே, உருத்திரங்கண்ணனார், குலைக்காய்களுடன் உள்ள தென்னையும், குலைவாழைத் தாருடைய வாழையும், பசும் காயுடன் உள்ள பாக்கு மரமும், வாசமிகு மஞ்சளும், குலை தொங்கும் பனையும், சேம்பும், இஞ்சியும் வீடுகளின் முன்புறத்தில் விளைந்திருந்ததை,*

*கோள் தெங்கின் குலைவாழைக் காய்க்கமுகின் கமழ்மஞ்சள்*

*இனமாவின் அணர்ப்பெண்ணை முதற்சேம்பின் முளைஇஞ்சி*

*அகல்நகர் வியன்முற்றத்து.......*

*- பட்டினப்பாலை, 16-20.*

*என்று, நாட்டில் ஒவ்வொரு வீட்டின் வளம்பற்றிக் கூறுகின்றார்.*

*நக்கீரர், அழகிய மணம் மிக்க மலர்கள் பூத்துக் குலுங்கும் சோலைகளும் உள்ளன. குருத்துகளில் இருந்து சொட்டுகின்ற பனித் துளிகள், குளிரின் மிகுதியால் உறைந்து, குருத்துகளில் தொங்கிக் கொண்டிருக்கின்ற அழகிய காட்சிகளை உடைய ஊர் என்பதை,*

*நளிகொள் சிமைய விரவுமலர் வியன்கா*
*குளிர்கொள் சினைய குரூஉத் துளி தூங்க -----*
*- நெடுநல்வாடை 27-28.*

*என்றும், ஆறு ஓடுவது போன்ற நீண்டு கிடக்கும் தெருக்களை உடைய ஊர் அந்த மூதூர்'- என்பதை*

*---------- மல்லல் மூதூர்*

*ஆறு கடந்தன்ன அகல் நெடும் தெருவில் ------*

*- நெடுநல்வாடை 29-30.*

என்றும் அந்த ஊரின் வளத்தைச் சித்தரிக்கிறார் நக்கீரர்.

ஊரின் செழிப்பைப் போற்றிய உருத்திரங்கண்ணனாரும், பிரகாசமான நெற்றியுடன், அழகிய பார்வையையும், பொன் ஆபரணங்களையும் அணிந்துள்ள பெண்கள், வாசலில் உலர்த்துகின்ற நெல்மணிகளைத் தின்ன வரும் கோழிகளைத் தங்கள் காதுகளில் அணிந்துள்ள பொன்னாலான மகரக் குழையை எடுத்து அந்தக் கோழிகள் மீது வீசி அவற்றை ஓட்டுவார்களாம், அதை,

சுடர்நுதல் மடநோக்கின்

நேரிழை மகளிர் உணங்குணாக் கவரும்

கோழி எறிந்த கொடுங்கால் கனங்குழை,

- பட்டினப்பாலை, 21-23.

என்றும், அப்படி அந்தப் பெண்கள் தூக்கி எறிந்த மகரக் குழைகள் அங்கேயே கிடக்கின்றன. அந்த வீட்டின் முன் மூன்று சக்கரமுள்ள நடைவண்டியைச் சிறுவர்கள் தேர் போல உருட்டி விளையாடுவார்கள். அப்போது அந்த மகரக்குழைகள் அந்த வண்டிச் சக்கரங்களில் சிக்கி அந்த வண்டி ஓடாமல் தடை செய்யும். அப்படிப்பட்ட அந்தத் தேரின் சக்கரங்களை விலக்குகின்றப் பகையைத் தவிர அந்த ஊரில் விலங்குகளின் பகையோ, மற்ற கலங்க வைக்கும் பகையோ இல்லை என்பதை

------------ கொடுங்கால் கனங்குழை

பொங்காற் புதல்வர் புரவிஇன்று உருட்டும்

முக்காற் சிறுதேர் முன்வழி விலக்கும்

பொற்காற் புதல்வர் புரவிஇன்று உருட்டும்

முக்காற் சிறுதேர் முன்வழி விலக்கும்

விலங்குபகை அல்லது கலங்குபகை அறியா

கொழும்பல்குடி ------------------

- பட்டினப்பாலை, 23-28.

என்றும், அந்தக் கழனிகளில் எப்பொழுதும் விளைச்சல் இருந்துகொண்டே இருக்கும். அந்தக் கரும்பினைக் காய்ச்சும் கரும்பு ஆலைகளில் இருந்து வாசனை வீசிக்கொண்டு இருக்கும் என்பதை.

விளைவு அறா வியன் கழனிக்

கார்க்கரும்பின் கமழ் ஆலை --------

- பட்டினப்பாலை, 8-9.

என்றும் அந்த ஊரின் சிறப்பை மேலும் விவரிக்கின்றார் ஆசிரியர்.

**பொருள் வளம்:**

உள்நாட்டு வணிகமும் வெளிநாட்டு வணிகமும் –

ஐவகை நிலங்களுக்கிடையே மக்கள் பண்டமாற்று முறையில் மேற்கொண்ட வணிகம் உள்நாட்டு வணிகம் எனலாம். இதற்குத் தரைவழிப் போக்குவரத்து பயன்படுத்தப்பட்டது. பெரும்பாலும் அன்றாடத் தேவைக்கானப் பொருட்களே பண்டமாற்றுப் பொருள்களாக இருந்தன. நெல்லுக்கு உப்பும் கள்ளும், மீனுக்கு நெல்லும் பயிறு வகைகளும் கள்ளும் மாற்றிக் கொள்ளப்பட்டன.

இவற்றைக் குறித்து,

தேன் நெய்யொடு கிழங்கு மாறியோர்

மீன் செய்யொடு நறவு மறுகவும்

தீம் கரும்பொடு அவல் வகுத்தோர்

மான் குறையோடு மது மறுகவும்

குறிஞ்சி பரதவர் பாட நெய்தல்

நறும் பூங்கண்ணி குறவர் சூட

கானவர் மருதம் பாட-------

- பொருநராற்றுப் படை, 214-220.

என்ற பாடலில் முடத்தாமக்கண்ணியார், தேன், நெய், கிழங்குக்கு மீனும் கள்ளும் வாங்குவார்கள்; கரும்பு, அவல் விற்றவர்கள் மான் இறைச்சியும் கள்ளும் வாங்கிச் செல்வார்கள். நெய்தல் நிலத்துப் பரதவர் குறிஞ்சிப் பண்ணைப் பாடவும், முல்லை நிலத்து மக்கள் மருதப் பண்ணைப் பாடுவார்கள். இப்படி எல்லா வளங்களும் கொண்ட குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய நான்கு நிலப் பிரிவுகளையும் ஒரே குடையின் கீழ் அறத்துடனும் அன்புடனும் கரிகாலன் ஆண்ட ஊர் – என்று ஊரின் பெருமையை, வளத்தினைச் சித்தரிக்கின்றார்.

அதைப்போல, ஊர்த் தெருக்களில் உமணப்பெண் உப்பு விற்று நெல்லைப் பண்டமாற்றாகப் பெற்ற காட்சியை,

நெல்லும் உப்பும் நேரே ஊரீர்

கொள்ளிரோவெனச் சேரி தொறும் நூவலும்,

- அம்மூவனார் - அகநானூறு 390:8-9.

*என்று நெல்லும் உப்பும் ஒரே விலையாக இருந்ததையும்,*

*கதழ் கோல் உமணர் காதல் மடமகள்*

*சில் கோல் எல் வளை தெளிர்ப்ப வீசி,*

*'நெல்லின் நேரே வெண்கல உப்பு' எனச்*

*சேரி விலை மாறு கூறலின் ----------------*

*- அகநானூறு 140:5-8.*

*என்று நெல்லுக்குப் பண்டமாற்றாகக் கல் உப்பினை விலை கூறுவாள் என்று அம்மூவனாரும்,*

*நெய்க்கு மாறாகப் பொன் கட்டி வாங்க மாட்டாள், ஆனால், பசுவும், எருமைக் கன்றும் வாங்குவாள் என்று தொடர்ந்து தன் வருமானத்தைப் பெருக்கும் பொருள் வளம் சார்ந்த மனநிலை அவர்களிடம் இருந்ததை,*

*அளை விலை உணவின் கிளை உடன் அருத்தி*

*நெய் விலைக் கட்டிப் பசும்பொன் கொள்ளாள்,*

*எருமை, நல் ஆன் கரு நாகு, பெறூஉம் -------*

*- பெரும்பாணாற்றுப்படை - 163-165.*

*என்று உருத்திரங்கண்ணனாரும் சுட்டிக்காட்டியுள்ளனர்.*

*மதுரை மாநகரின் கடைவீதிகளைப் பற்றிக் கூறும்போது, மேகங்கள் மழைக்காகக் கடலிலிருந்து நீரைக் கொண்டுபோனாலும் கடல் நீர் வற்றுவதில்லை. அதே போல் ஆற்று நீர் தினமும் தன்னுடன் வந்து சேர்ந்தாலும், கடல் பொங்கி வழிந்துவிடாமல், கரையை உடைத்துக்கொண்டு வெளியேறாமல் இருக்கும். அதைப்போலவே, பலரும் வந்து பண்டங்களை வாங்கிப் போனாலும் குறையாமல், மேலும் மேலும் பண்டங்கள் வந்து கொண்டு இருந்தாலும் அளவுக்கு அதிகமாகி அவை தேங்கிவிடாமலும் இருக்கும்படி விற்பனை சிறந்திருக்கும் மதுரை அங்காடி என்பதை மாங்குடிமருதனார்,*

*மழை கொளக் குறையாது, புனல் புக மிகாது,*

*கரை பொருது இரங்கும் முந்நீர் போலக்,*

*கொளக் கொளக் குறையாது, தரத் தர மிகாது*

*கழுநீர் கொண்ட எழுநாள் அந்தி*

*ஆடுதுவன்று விழவின் நாடு ஆர்த்தன்றே*

*மாடம் பிறங்கிய மலி புகழ்க் கூடல்*

*நாள் அங்காடி --------------*

*- மதுரைக் காஞ்சி, 425-430.*

என்ற பாடலில் விவரித்துள்ளார்.

நாட்டின் வளத்தைப் பாட விழைந்த முடத்தாமக் கண்ணியார்,

*கருவி வானம் கடல் கோள் மறப்பவும்*
*பெரு வறனாகிப் பண்பு இல் காலையும்*
*நறையும் நரந்தமும் அகிலும் ஆரமும்*
*துறை துறை தோறும் பொறை உயிர்த்து ஒழுகி*
*நுறைத் தலைக் குரைப்புனல் வரைப்பு அகம் புகுதொறும்,*
*புனல் ஆடு மகளிர் கதுமெனக் குடைய*
*கூனிக் குயத்தின் வாய் நெல் அரிந்து*
*சூடு கோடாகப் பிறக்கி நாள் தொறும்*
*குன்று எனக் குலைஇய குன்றாக் குப்பை*
*கடுந் தெற்று மூடையின் இடம்கெடக் கிடக்கும்*
*சாலி நெல்லின் சிறை கொள் வேலி*
*ஆயிரம் விளையுட்டு ஆகக்*
*காவிரி புரக்கும் நாடு ---------------*

*- பொருநர் ஆற்றுப்படை, 236-248.*

என்ற பாடலில், கடல் நீரை மொண்டு சென்று மேகம் மழை பெய்யக்கூட மறக்கலாம். இவற்றால் பெரும் வறட்சியும், பஞ்சமும் உண்டாகும் காலங்களில் கூட, மகளிர் ஆற்று நீரிலும், குளங்களிலும், விழுந்து புரண்டு நீராடி மகிழ்வார்கள். வளைந்த கூரிய அரிவாளைக்கொண்டு, நெல்லை அறுத்துக் கதிர்களை மலைபோல அடுக்கி வைப்பார்கள். அப்படி, வேலி ஒன்றுக்கு, ஆயிரம் பொதியாகச் செந்நெல் விளையும் காவிரி பாயும் நாடு என்று கூறுகின்றார்.

அதேபோல் மலையனார் என்ற புலவர்,

*பிரசம் தூங்கப், பெரும்பழம் துணர*

*வரைவெள் அருவி, மாலையின் இழிதரக்,*

*கூலம் எல்லாம் புலம்புஉக, நாளும்*

*மல்லற்று அம்மஇம் மலை.....*

*- நற்றிணை 93:1-4.*

*என்ற பாடலில், பல கிளைகளிலும் தேன் கூடுகள் தொங்குகின்றன. பெரிய பழங்கள் குலை குலையாகப் பழுத்துக் காணப்படுகின்றன. மலையிலிருந்து அருவி மலை போல இறங்கி வருகிறது. மலைப்பக்கத்தில் நெல், வரகு, சாமை, கேழ்வரகு போன்ற 16 வகை தானியங்கள் விதைக்கப்பட்டுள்ள வளம் நிறைந்த மலைப்பகுதி இது என்று தானிய வளம் பற்றிக் கூறியுள்ளார். 'கூலம் எல்லாம்'' என்பதற்கு – நெல், வரகு, சாமை, தினை, தோரை, கேழ்வரகு போன்ற 16 வகை தானியங்கள் என்று பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் அவருடைய உரையில் கூறியுள்ளார்.*

*மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரர்,*

*நெல்லும் மலரும் தூஉய்க் கைதொழுது*

*மல்லல் ஆவணம் மாலை அயர,……*

*- நெடுநல்வாடை 43-44.*

*என்ற பாடலில், நெல் மணிகளையும் மலர்களையும் தூவி தெய்வத்தைத் தொழுகின்றனர் மக்கள். அப்படிப்பட்ட வளம் நிறைந்த மூதூரின் கடைத் தெருக்கள் எங்கும் விழாக்கோலம் பூண மாலைக் காலம் பிறந்தது என்று நாட்டின் வளம் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.*

*மாங்குடிமருதனார்,*

*பொன் மலிந்த விழுப் பண்டம்*
*நாடு ஆர நன்கு இழிதரும்*
*ஆடு இயல் பெரு நாவாய்*
*– மதுரைக்காஞ்சி: 81-83.*

*என தமிழகக் கப்பல்கள் பொருள்களை விற்றுப் பொன்னுடன் திரும்பியதை எடுத்துரைக்கின்றார்.*

*எருக்காட்டூர் தாயங்கண்ணனார்,*

*---------------------- சேரலர்*

*சுள்ளிஅம் பேரியாற்று வெண் நுரை கலங்க,*

*யவனர் தந்த வினை மாண் நன் கலம்*

*பொன்னொடு வந்து கறியொடு பெயரும்*

*வளம் கெழு முசிறி -----------------*

*- அகநானூறு, 149.*

*என்று யவனர் தங்கள் மரக்கலங்களில் முசிறித் துறைமுகத்திற்கு வந்து, பொன்னைக் கொடுத்து மிளகை {கறி} ஏற்றிக்கொண்டு சென்றதைப் பாடியுள்ளார்.*

*புகார் நகரின் வளத்தைப் பாடிய கடியலூர் உருத்திரங்கண்ணனார்,*

*நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்,*
*காலின் வந்த கருங்கறி மூடையும்,*
*வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்,*
*குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்,*
*தென்கடல் முத்தும் குணகடல்(#) துகிரும்,*
*கங்கை வாரியும் காவிரிப் பயனும்,*
*ஈழத்து உணவும் காழகத்து ஆக்கமும்,*
*அரியவும் பெரியவும் நெரிய ஈண்டி*
*வளந்தலை மயங்கிய*
*நனந்தலை மறுகின் --------------------*
*- பட்டினப்பாலை, 185-193.*

*என்ற பாடலில், வேற்று நாடுகளிலிருந்து கடல் வழி கொண்டுவரப்பட்ட குதிரைகளும், பக்கத்து ஊர்களிலிருந்து வண்டிகளில் வந்த மிளகு மூட்டைகளும்; வடக்கே மேரு மலையில் தோன்றிய பொன்னும், இரத்தின மணிகளும்; மேற்கு மலையில் விளைந்த சந்தனமும், அகிலும்; தெற்குக் கடலில் தோன்றிய முத்தும், கீழ்க் கடலில் வளர்ந்த பவழமும், கங்கைக் கரையில் இருந்து வந்த பொருட்களும், கடாரத்திலிருந்து வந்த நுகர் பொருள்களும்; மற்றும் சீனத்திலிருந்து தருவிக்கப்பட்ட கர்ப்பூரமும், பனிநீர், முதலான பல வகைப் பண்டங்களும், நிலத்தின் முதுகு நெளியும்படி குவித்து வைக்கப் பட்டிருந்த புகார் நகரம் என்று கூறியுள்ளார். (#குணகடல் துகிர் என்னும் பொழுது இன்றைய ஆஸ்திரேலியப் பகுதியின் பவழத்தைக் குறிக்கின்றது என்று கொள்வதில் பிழையில்லை.'' – பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தன்).*

*சங்கக் காலத் தமிழர்களின் வாணிகம் அனைத்துத் திசைகளிலும் பரவி இருந்தது என்பதை,*

*------------- பாற்கேழ்*
*வால் உளைப் புரவியொடு வடவளம் தரூஉம்*
*நாவாய் சூழ்ந்த நளிநீர்ப் படப்பை,*
*- பெரும்பாணாற்றுப்படை, 319-321.*

*என்ற பாடலில், பால் போன்ற நிறத்தினையுடைய குதிரைகளையும், வடதிசை நாட்டிலிருந்து கொண்டு வரும் மரக்கலங்கள் நிறைந்த பெருமை மிகுந்த*

*துறைமுகங்களையும் நீங்கள் செல்லும் வழியில் காணலாம் என்று எடுத்துரைக்கின்றார் உருத்திரங்கண்ணனார்.*

*நாட்டின் பல திசைகளிலும் சென்று வாணிபம் செய்ய, குறிப்பிட்ட காலத்தில் வீசும் காற்றின் உதவியால், அந்தப் பெரிய கடலின் ஊடாக மரக்கலத்தை ஓட்டுவது எளிதென்று அன்றே கரிகால் சோழனின் முன்னோர்கள் அறிந்திருந்து மரக்கலங்களைச் செலுத்தினார்கள் என்ற செய்தியை.*

*நளியிரு முந்நீர் நாவாய் ஓட்டி*

*வளி தொழில் ஆண்ட உரவோன் மருக!*

*களிஇயல் யானைக் கரிகால் வளவ!*

*- புறநானூறு, 66: 1-3.*

*என்ற பாடலில் சுட்டிக் காட்டுகின்றார் வெண்ணிக் குயத்தியார்.*

*நாட்டின் பொருள் வளத்தைப் பற்றி, மதுரைக் காஞ்சியில்,*

*நாள் மகிழ் இருக்கை காண்மார் பூணொடு*

*தெள்ளரிப் பொற்சிலம்பு ஒலிப்ப ஒள் அழல்*

*நா அற விளங்கிய வாய் பொன் அவிர் இழை*

*- மதுரைக்காஞ்சி - 443-445.*

*ஆய் பொன் அவிர் தொடிப் பாசிழை மகளிர்*

*- மதுரைக்காஞ்சி - 579.*

*என்ற பாடலில், பொன்னணிகள் புனைந்துகொண்டு, அதன் உள்ளே உள்ள மணிகள் ஒலியெழுப்ப, பொன்னால் செய்த சிலம்புகளைப் பூட்டிக்கொண்டும், பொன்னாலான கைவளைகளை அணிந்து கொண்டும் பெண்கள் வானுலகத் தேவதைபோல் தோன்றினர் என்று மாங்குடி மருதானாரும்,*

*பொன்தொடிப் புதல்வர் ஓடி ஆடவும்,*

*– பட்டினப்பாலை – 295.*

*என்று பொன்னாலான தொடியினை புதல்வர்கள் அணிந்து விளையாடினர் என உருத்திரங் கண்ணனாரும் குறிப்பிட்டுள்ளனர்.*

**கடல் வாணிகம் குறித்த செய்திகள்:**

தென்னிந்தியர் கடல் வாணிகத்தில் சிறந்திருந்தனர் என்று தாலமி, பிளைனி போன்ற அயல் நாட்டார் எழுதிவைத்த குறிப்புகளைக் கொண்டும் புதைபொருள் ஆராய்ச்சி கொண்டும் அறிஞர் கூறுகின்றனர் (1)

கி. மு. 10ஆம் நூற்றாண்டில் தமிழ்நாட்டிலிருந்து கப்பல்கள் மூலமாக மயில் தோகை, யானைத் தந்தம், மணப் பொருள்கள் முதலியன ஏற்றுமதியாகின. எருதுகள் பாரசீக வளைகுடாவிற்கும் ஆப்பிரிக்காவிற்கும் தமிழகத்திலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்டன. பொனீசியருடைய (Phonecia - சிரியாவின் கரையோரப் பகுதிகள்) கப்பல்களில் சேர நாட்டு மிளகு ஏற்றுமதி செய்யப்பட்டது (2).

கி. மு. ஐந்தாம் நூற்றாண்டிற்கு முன்பு பாபிலோன் நகரத்திற்குக் கடல் வழியாக அரிசி, மயில், சந்தனம் முதலியன அனுப்பப்பட்டன (3).

தமிழகத்திலிருந்து ரோமப் பேரரசுக்கு இரும்பு, விலங்குகளின் தோல்கள், ஆட்டுமயிர், நெய் முதலியன ஏற்றுமதி செய்யப்பட்டன. சேர நாட்டிலிருந்து யானைத் தந்தம், ஆமை ஓடுகள் அனுப்பப்பட்டன. மதுரை, உறையூர் இவற்றிலிருந்து முத்துக்கள் ஏற்றுமதி செய்யப்பட்டன (4).

முசிறித் துறைமுகத்திலிருந்து மிளகு யவனர் (#) நாட்டுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டதை புலவர் தாயங்கண்ணனார் பின்வரும் பாடலில் குறிப்பிடுகின்றார்,

> சுள்ளிஅம் பேரியாற்று வெண்நுரை கலங்க,
>
> யவனர் தந்த வினைமாண் நன்கலம்
>
> பொன்னொடு வந்து கறியொடு பெயரும்
>
> - அகநானூறு 149: 8-10.

(#) கிரேக்கர்கள், ரோமர்கள் இருவரையுமே சங்கக் காலத்தில் 'யவனர்' என்று அழைத்தனர் என்று ஒரு குறிப்பு கூறுகின்றது. இப்பொருள்களைப் பெற்றுக்கொண்டு இவற்றுக்கு மாற்றுப் பண்டங்களாக பொன் வெள்ளிக் காசுகள், உயர்ந்த மது வகைகள், பவழம், ஈயம், தகரம், எந்திரப் பொறிகள் முதலியவற்றை ரோமர்கள் தமிழ்நாட்டுக்கு ஏற்றுமதி செய்தார்கள் (5).

கி. பி. 60-ல் பெரிப்ளூஸ் (Periplus) என்னும் நூலில் அதன் ஆசிரியர் இந்தியத் துறைமுகங்களை நேரில் கண்டு சேர நாட்டில் தொண்டி, முசிறி, குமரி என்ற துறைமுகங்களையும், பாண்டிய நாட்டில் கொற்கைத் துறைமுகத்தையும், சோழ நாட்டில் காவிரிப்பூம் பட்டினத்தையும் பற்றிக் குறிப்பிட்டுள்ளார் (1).

மேற்குறிப்பிட்ட செய்திகளிலிருந்து, ஏறத்தாழ கி. மு. ஆயிரம் முதலே தமிழகம் கடல் வாணிகத்தில் சிறந்திருந்தது என்பது புலனாகின்றது. ஒரு நாட்டில் ஏற்றுமதி இறக்குமதி செய்யப்படும் பொருள்களின் அளவைப் பொறுத்தே அந்நாட்டின் பொருளாதார நிலை இருக்கும். அந்த முறையில் காணும் பொழுது, சங்கக் காலத்தில் தமிழர்கள் இறக்குமதி செய்ததைவிட ஏற்றுமதி செய்த பொருட்களே மிகுதியாக இருந்தன. சங்கக் காலத் தமிழர்களின் வாழ்க்கை வளமுடன் இருந்தமைக்கு இது ஒரு சான்றாக அமைகின்றது.

**முடிவுரை:**

பொருள் வளத்தைப் பெருக்குவதிலும் சங்கக் கால மக்கள் அறத்தினைக் கடைப்பிடித்தனர் என்பதைப் பெருங்கடுங்கோவின்,

’அறன் கடைப் படாஅ வாழ்க்கையும், என்றும்

பிறன் கடைச் செலாஅச் செல்வமும், இரண்டும்

பொருளின் ஆகும், புனைஇழை என்று, நம்

இருள் ஏர் ஐம்பால் நீவி யோரே,

- அகநானூறு – 155.

என்ற பாடல் மூலம் அறிய முடிகிறது.

அப்படி ஈட்டிய பொருளை இரந்தோர்க்குக் கொடுக்காமல் இருத்தல் இழிவு என்பதையும் சங்கக் கால மக்களின் வாழ்வில் கொண்டிருந்தனர் என்பதை பாலை பாடிய பெருங்கடுங்கோ,

“தொலைவு ஆகி, இரந்தோர்க்கு ஒன்று ஈயாமை இழிவு’’ என

மலை இறந்து செயல் சூழ்ந்த பொருள் பொருளாகுமோ

-----------------------------------------------------

‘இல் என இரந்தோர்க்கு ஒன்று ஈயாமை இழிவு’ என

கல் இறந்து செயல் சூழ்ந்த பொருள் பொருள் ஆகுமோ,

--- கலித்தொகை, பாலைக்கலி 1:11-16.

என்ற பாடலில் சுட்டிக் காட்டியுள்ளார்.

இதுவரை சுட்டிக்காட்டிய செய்திகளிலிருந்து, சங்கக் காலத்தில் நீர் வளமும், நில வளமும், பொருள் வளமும் பெருகி இருந்தது என்பதும், மக்கள் அறத்துடன் வாழ்ந்தார்கள் என்பதும் நன்கு புலப்படுகின்றது.

**சான்றுக் குறிப்புகள்:**

*1. தமிழ் இலக்கிய வரலாறு, பகுதி 6 - மா. இராசமாணிக்கனார்.*

*2. தமிழர் வரலாறு - புலவர் கா கோவிந்தன். மூலம்: P T S Ayyangar, History of the Tamils p 129-134.*

*3. தமிழ் இலக்கிய வரலாறு - பகுதி 6 - மா. இராசமாணிக்கனார். மூலம்: K A N Sastry, A History of India p 76-78.)*

*4. தமிழர் வரலாறு - புலவர் கா. கோவிந்தன். மூலம்: Ref: PTS Ayyangar, History of the Tamils p 301 - 304.*

*5. தமிழ் இலக்கிய வரலாறு - பகுதி 6 - மா. இராசமாணிக்கனார். மூலம்: Periplus of the Erithraean Sea - p 56.*

*6. அகமும் புறமும் - பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தன்.*

---

## திருக்குறள்

***இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்***
***பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு*** ***(குறள் எண்.5)***

***குறள் விளக்கம்:*** *கடவுளின் உண்மைப் புகழை விரும்பி அன்பு செலுத்துகின்றவரிடம் அறியாமையால் விளையும் இருவகை வினையும் சேர்வதில்லை.*

........

***பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க***
***நெறிநின்றார் நீடுவாழ் வார்*** ***(குறள் எண்.6)***

***குறள் விளக்கம்:*** *ஐம்பொறி வாயிலாக பிறக்கும் வேட்கைகளை அவித்த இறைவனுடைய பொய்யற்ற ஒழுக்க நெறியில் நின்றவர், நிலை பெற்ற நல்வாழ்க்கை வாழ்வர்...*

# இந்தியாவின் முதலை இனங்கள்

**முனைவர் தேமொழி**
*சான் ஃபிரான்சிஸ்கோ, அமெரிக்கா*



*இன்றிலிருந்து சற்றேறக்குறைய 3000 முதல் 1500 ஆண்டுகளுக்கு முற்பட்டது எனக் கணிக்கப்படும் தூத்துக்குடி மாவட்டம் - ஆதிச்சநல்லூர் பகுதி பழந்தமிழர் நாகரிகத்திற்குச் சான்றாக அகழாய்வில் கிடைத்துள்ள பெருங்கற்காலத்துத் தொல்லியல் தடயங்களுள் ஒன்று புடைப்பு உருவங்கள் உள்ள பானையோடு. அதில், ஒரு பெண்ணுருவமும், கொக்கு அமர்ந்துள்ள தாழை மரம் ஒன்று அவளுக்கு வலப்புறத்திலும், ஆண் மரைமான் ஒன்று அவளுக்கு இடப்புறத்திலும், அவளது காலருகில் முதலை ஒன்றும் இருக்கும் காட்சி ஒட்டுருவமாக (applique) பானையோட்டில் காணப்படுகின்றது[1].*

*இது போன்ற ஒரு காட்சி, இயற்கையையும் அது சார்ந்த செய்திகளையும் மிக நுணுக்கமாகப் பதிவு செய்யும் பழந்தொகை நூல்களில், குறிப்பாக நற்றிணை, குறுந்தொகை ஆகியவற்றில் இடம் பெறும் 'நெய்தல்' நிலக் காட்சியே. கருமையான கால்களைக் கொண்ட வெண்கொக்கு தாழை மரத்தில் அமர்ந்திருப்பதையும், கழிகளில் இருக்கும் முதலைகள் குறித்தும் பாடல் வரிகளில் இடம் பெறுவது வழக்கமே.*

> *"கொடும் தாள் முதலை கோள் வல் ஏற்றை*
>
> *வழி வழக்கு அறுக்கும் கானல் அம் பெரும் துறை"*
>
> *- குறுந்தொகை, நெய்தல், பாடல்: 324*

*வளைந்த கால்களையுடைய, கொல்லுதலில் வல்ல ஆண் முதலை வழியில் பிறர் செல்வதை இல்லாமற்செய்யும் கடற்கரைச் சோலையுள்ள அழகிய பெரிய துறை என்பது பாடல் விவரிக்கும் நெய்தல் நிலத்தின் கடற்கரை சோலை ஒன்றின் காட்சி.*

*முதலைகளை இடங்கர், கராம், முதலை என்று பல பெயர்களில் இலக்கியப் பாடல் வரிகள் குறிப்பிடுகின்றன. இந்தியாவில் தொன்று தொட்டுக் காணப்படும் முதலை வகைகள் மூன்றாகும். அவை முதலை, கராம் அல்லது கராஅம், இடங்கர் ஆகியன. முதலையைக் குறிக்கும் பல சொற்கள் (ஒருபொருட் பன்மொழி) என்ற புரிதலில் இருக்கும் ஒரு சொல்லுக்கு, அச்சொற்கள் அடுத்தடுத்து தொடர்ந்து ஒரு*

சொற்றொடரில் வருகையில் அவை வெவ்வேறு தனிச் சிறப்பு கொண்டவையாக இருக்கக்கூடும் என்பதை நாம் உணரலாம்.

"கொடும் தாள் முதலையும் இடங்கரும் கராமும்"

(குறிஞ்சிப்பாட்டு-257)

என்று வளைந்த கால் முதலைகளும், இடங்கர் இன முதலைகளும், கராம் இன முதலைகளும் என்று குறிஞ்சிப்பாட்டு தெளிவாகப் பிரித்துக் காட்டுகிறது. ஆகவே அனைத்தும் முதலை அல்ல. இன்று பொதுவாக முதலை என அறியப்பட்டாலும் இவை வெவ்வேறு முதலை இனத்தைக் குறிக்கும் கலைச்சொற்கள். எடுத்துக்காட்டாக, 'கராம்' என்றால் இது எங்கெங்கு காணப்படும் முதலைகள், அவற்றின் பண்புகள் என்ன, தோற்றம் எவ்வாறு இருக்கும் என்ற குறிப்புகளை கராம் என்ற சொல்லே தெளிவாக அறியத் தரும்.

புடைப்பு உருவங்கள் கொண்ட ஆதிச்சநல்லூர் பானையோடு



இவற்றுக்கான வேறுபாட்டைத் தெளிவு படுத்த விரும்பி பாவாணர் அவர்களும் தமது சொல்லாராய்ச்சிக் கட்டுரை ஒன்றில் முதலை — gavial/gharial, கராஅம் — alligator, இடங்கர் — crocodile என்று விளக்கியுள்ளார் [2]. முதல் பார்வையிலேயே இவ்விளக்கம் முற்றிலும் பிழையானது என்பது தெரிந்துவிடுகிறது.

அலிகேட்டர் (alligator) முதலை இனங்கள் இந்தியாவில் கிடையாது. இவ்வகை முதலை இனங்கள் பெரும்பான்மையும் அமெரிக்கப் பகுதியில் காணப்படுபவை. இடங்கர் என்பதும் குரோக்கோடைல் (crocodile) என அறியப்படுபவை அல்ல. ஆண் முதலையை கராம் என்று அழைத்ததாகவும் ஒரு தவறான குறிப்பும் இருக்கிறது. ஆகவே, இந்தியாவில் காணப்படும் முதலை வகைகளைத் தெளிவாக அறிந்து கொள்வதற்கும் அடையாளப்படுத்துவதற்குமான தேவை இருப்பது தெரிகிறது.

இலக்கியம் தரும் முதலை குறித்த தரவுகளை மீள் பார்வை செய்ததில், முதலை என்பதை பொதுவான சொல்லாக ஏற்கும் முறை காலம் செல்லச் செல்ல பிற்காலத்தில் அதிகரித்துள்ளது தெரிகிறது. கடற்கரையோரமும், கழிமுகப் பகுதிகளிலும் உப்புநீர் பகுதிகளில் வாழ்வனவற்றை முதலை என்றும்,

ஆறு குளம் போன்ற நன்னீர் பகுதிகளில் வாழ்வன கராம் அல்லது மகரம் இன முதலைகள் என்றும்,

நன்னீர் பகுதிகளில் வாழும் நீண்ட கூம்பு போன்ற முகம் கொண்ட முதலை இனம் இடங்கர் என்றும் குறிப்பிடும் வழக்கம் இருந்ததை இலக்கியம் மூலம் அறியலாம்.




**இந்தியாவின் முதலை இனங்கள்:**

*1. கராம் முதலை — Marsh or Mugger Crocodile (Crocodylus palustris)*

*2. முதலை — Estuarine or Saltwater Crocodile (Crocodylus porosus)*

*3. இடங்கர் — Gharial (Gavialis gangeticus)*

இந்தியாவில் இந்த மூன்று இன முதலைகள் மட்டுமே வாழ்கின்றன [3, 4].

***1. கராம் முதலை — Marsh or Mugger Crocodile (Crocodylus palustris):***

இந்தியாவின் முதலை என்று பொதுவாகக் குறிப்பிடப்பட்டால் அது சதுப்புநிலத்தில் (Wetlands/Marsh) வாழும் இந்த முதலைதான். இது இந்தியாவில் மட்டுமே அதிக எண்ணிக்கையில் காணப்படும் இனமும் கூட. இது நன்னீரில் வாழும் முதலை இனம். இந்தியாவில் சதுப்புநிலங்களும் அதிகம். இயற்கைக்கு அரணாக இருப்பதால் 'நகரங்களின் நுரையீரல்கள்' என்று சதுப்புநிலங்கள் அழைக்கப்படுகின்றன. கடல் மட்டத்தைவிடக் குறைவான ஆழம் கொண்ட நீர்நிலையாகக் காணப்படும் சதுப்புநிலங்களின் எண்ணிக்கை இந்தியாவில் 27,403 [5]. நாட்டிலேயே அதிக எண்ணிக்கையில் தமிழகத்தில்தான் சதுப்புநிலக் காடுகள் உள்ளன. ஆண்டு முழுவதும் ஈரப்பதத்துடன் இருக்கும் சதுப்புநிலப் பகுதிகள் தமிழ்நாட்டில் மன்னார் வளைகுடா பகுதி, இராமநாதபுரம், திருநெல்வேலி, கன்னியாகுமரி, திருவாரூர், நாகப்பட்டினம், ஈரோடு, செங்கல்பட்டு, கடலூர், சென்னை போன்ற மாவட்டங்களில் உள்ளன.

*தமிழகத்திற்கு அடுத்து, உத்தரப் பிரதேசம், ஒடிசா, ஜம்மு-காஷ்மீர், மத்தியப் பிரதேசம், மகாராஷ்டிரம் போன்ற மாநிலங்களிலும் சதுப்புநிலங்கள் அதிகம். தொடர்ந்து நடந்த சதுப்புநில வாழிடங்கள் அழிப்பினால் இந்த முதலை இனம் எண்ணிக்கையில் குறைவுற்று அழிவை நோக்கிச் செல்லும் இனம் (Vulnerable Species) என்று இன்றைய கவனிப்பில் உள்ளது.*




**இந்தியாவின் சதுப்பு நிலங்கள்**

*இந்த முதலை இனத்தை மகரம் என்று அழைப்பதால் இந்த முதலைக்கு Mugger Crocodile என்ற பெயர் ஏற்பட்டது. ஆனால் காலப்போக்கில் மகரம் என்றால் தொன்மக் கதையில் வரும் விலங்கினம் என்ற நிலை உருவானது மட்டுமின்றி, மகரம் என்பது மகர மீன் வகையைக் குறிப்பதாகவும் மாறிவிட்டது. மகரம் என்பது கராம் என்றோ அல்லது கராம் என்பது மகரம் என்றோ மாறியிருக்கலாம். இவை நன்னீரில் வாழும் என்பதால் கராம் இன முதலை பொய்கை, அகழி, ஏரி, குளம், ஆறு, மடு, குண்டு, வாவி, கடற்கரைப் பகுதி சதுப்புநிலங்கள், கழிகள் எனப் பல இடங்களில் வாழ்ந்ததாக இலக்கியப் பதிவுகளும் உள்ளன என்பது குறிப்பிடத்தக்கது. இவை பெரியதும் இன்றி சிறியதும் அன்றி இடைப்பட்ட அளவில் 4 அல்லது 5 மீட்டர் நீளம் கொண்டதாக இருக்கும். முதலை இனங்களிலேயே மிகவும் அகண்ட வாயமைப்பு உடையதாக இந்த முதலை அறியப் படுகிறது. இவற்றில் ஆண் பெண் என்று பாலினம் பிரித்து அறிவது கடினம். இவற்றின் மேல் தோல் சதுப்புநில சேற்றுடன் ஒத்துப் போக்கும் வகையில் அடர்த்தியான சாம்பல் கருப்பு நிறத்திலும் மரப்பட்டைகள் செடிகொடிகளுடன் மறைத்துவாழும் வகையில் தகவமைப்பைக் கொண்டிருக்கும்.*

*2.* ***முதலை — Estuarine or Saltwater Crocodile (Crocodylus porosus):***

*கடற்கரையை ஒட்டிய உப்புநீர்க் கழிகளில், கழிமுகப் பகுதிகளில் வாழ்பவைதான் முதலை என்று அழைக்கப் படுபவை. இவை உப்பு நீரில் மட்டும் வாழும் தகவமைப்பு கொண்டவை. இந்தியாவின் கிழக்குக் கரையோரங்களில் மேற்கு வங்கம், ஒரிசா, ஆந்திரா, தமிழ்நாடு கடற்கரைப் பகுதிகளில் அதிக அளவில் இந்த இன முதலைகள் வாழ்கின்றன, இவை அழியக் கூடும் என்ற எச்சரிக்கை இல்லாத நிலையிலும் உள்ளவை. ஊர்வனவற்றிலேயே உலக அளவில் மிகப் பெரிய விலங்காக இருப்பது உப்புநீரில் வாழும் முதலைதான், இதன் எடையும் அதிகம், உடலின் நீளமும் 7 மீட்டர் வரையிலும் கூட இருக்கும்.*

*இம்முதலைகள் கடல் நீரில் வாழும் சில உயிரினங்கள் போல உடலில் அதிக அளவில் சேரும் உப்பை வெளியேற்றும் சுரப்பிகள் கொண்டவை. இச்சுரப்பிகள் பெரும்பாலும் வாய்ப்ப குதியில் நாக்கின் அடியே இருப்பது வழக்கம். சில வகை முதலைகளுக்குக் கண்கள் பகுதியிலிருந்து சுரப்பி சுரக்கும் உப்பு நிறைந்த நீர் வெளியாகும். பொய் அழுகையை 'முதலைக் கண்ணீர்' (மெய்யான கண்ணீர் அல்ல) என்று குறிப்பிடக் காரணமும் இதுவே. ஆனால், முதலையைப் பொருத்தவரை அதிக அளவு உப்பைச் சுரப்பிகளின் மூலம் வெளியேற்றி, உடலின் உப்பு அளவை சீரான நிலையில் வைத்திருக்க உதவும் ஒரு தகவமைப்பு இது [6].*




*3.* ***இடங்கர் — Gharial (Gavialis gangeticus):***

*இந்திய முதலைகளில் மிக நீண்ட கூம்பு போன்ற முகம் கொண்ட முதலை இனம் இது. ஒருகாலத்தில் இந்திய நிலப்பரப்பில் பரவலாக வாழ்ந்தாலும் காலப்போக்கில் கங்கைச் சமவெளிப் பகுதியுடன் இடங்கர் இனத்தின் வாழ்விடம் குறுகிவிட்டதாகத் தெரிகிறது. இன்றைய நாட்களில் ஒரிசா*

மாநிலத்திற்கு தெற்கே, கோதாவரி ஆற்றுக்குத் தெற்கே இந்த இனத்தைப் பார்க்க இயலாது என்பது தெரிகிறது. இதில் ஆண் பெண் பாலின வேறுபாட்டைத் தெளிவாகக் காண இயலும், வளர்ந்த ஆண் முதலையின் முகத்தின் நுனிப்பக்கம் குடுவை போன்ற தோற்றத்தைக் கொண்டிருக்கும். இவ்வாறான அடியில் பருத்தும், இடுங்கிய அல்லது குறுகிய நீண்ட கழுத்து கொண்ட குடுவை போன்ற முக அமைப்பின் தோற்றத்தினால் இதற்கு 'காரியல்' (Gharial - ghara, an Indian word for pot because of a bulbous knob, ஜாடி வகை) என்ற பெயர் வந்தது. தமிழிலும் 'இடங்கர்' என்பதற்கு 'நீர்மிடா' என்ற பொருள் உண்டு. ஆக, இம்முதலைகளின் முகம் மற்றும் வாய் அமைப்பின் தோற்றம் காரணமாக இவை தமிழிலோ அல்லது வடமொழியிலோ அதற்கானப் பெயரைப் பெற்றுள்ளன என்பது தெரிகிறது. இடங்கர் இன முதலைகள் நன்னீரில் வாழ்வன. மீன்களை அதிகம் உண்ணும், வட இந்தியக் கங்கைச் சமவெளி முதலை இனம் இது, இதன் நீளம் 6 மீட்டர் வரை இருக்கும். இந்த இனம் அழிவை நோக்கி விரையும் இனம் என்பதால் பாதுகாக்கப் படவேண்டிய இனம் என்ற எச்சரிக்கை நிலையின் கீழ் உள்ளது.




**Figure 1.** A large, male saltwater crocodile (*Crocodylus porosus*) a) before, b) during, and c) after closing the outer eye-lids to secrete orbital fluid. Photos by Yusuke Fukuda and Nam Chul Jang.

எனவே, இந்தியாவில் காணப்படும் முதலை வகைகள் 'முதலை' எனப் பொதுவாகக் குறிப்பிடப்பட்டாலும், அவை கராம் (Crocodylus palustris), முதலை (Crocodylus porosus), இடங்கர் (Gavialis gangeticus) இனங்கள் என்பதையும், அத்துடன் தோற்றத்தாலும், வாழும் இடத்தாலும் வேறுபட்ட முதலை இனங்கள் என்பதையும் அறியலாம். கராம் இன முதலைகளை இடங்கர் வாழும் இடங்களிலும் முதலை வாழும் பகுதிகளிலும் காண இயலும். இன்றைய நாட்களில் இந்த மூன்று இன முதலைகளும் வாழ்வது ஒரிசா மாநிலத்தில் மட்டுமே. கராம், முதலை, இடங்கர் குறித்து இலக்கியம் வழியாக மேலும் தெளிவாக அறிய இயலும். ஆனால் சான்றுகளுடன் அவற்றை விரிக்கின் பெருகும் நிலை உள்ளதால் இலக்கிய ஆய்வு முடிவுகள் தனியாகக் காட்டப்படுதல் நலம்.

**IUCN Red List of threatened species status:**

Crocodylus palustris (mugger) vulnerable, Crocodylus porosus (saltwater crocodile) least concern and Gavialis gangeticus (Gharial) Critically Endangered as per IUCN Red List of threatened species.

***மேலதிகத் தகவலுக்கு:***

*[1] ஆதிச்சநல்லூர், தமிழிணையம் - தகவலாற்றுப்படை*
https://www.tagavalaatruppadai.in/excavations-details?id=jZY9lup2kZl6TuXGlZQdjZt6

*[2] பாவாணர்: சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள்: பக்கம் 38.*

*[3]* Types of Crocodiles & Differences Between Crocodiles and Alligators and Gharials – Bio Explorer.
https://www.bioexplorer.net/animals/reptiles/crocodiles/

*[4]* The Crocodiles Of India
https://www.natureinfocus.in/animals/the-crocodiles-of-india

*[5] சதுப்பு நிலங்களைக் காப்போம்! பாறப்புறத் இராதாகிருஷ்ணன், தினமணி, செப்டெம்பர் 2022.*
https://www.dinamani.com/editorial-articles/center-page-articles/2022/sep/02/lets-save-the-wetlands-3908920.html

*[6]* Crocodile tears: secretion of orbital fluid in a large, saltwater crocodile Crocodylus porosus Schneider, *1801*, Herpetology Notes, volume *11: 373-374 (2018) (*published online on *02* May *2018)*
https://www.biotaxa.org/hn/article/view/34573/3299

# பொங்கல்: பண்டைத் தமிழ் இலக்கியங்களில் ஓர் ஆய்வு

**ம. ஆச்சின்**

*முதுகலைப் பட்டயம், தொல்லியல் முதலாமாண்டு மாணவர்.*
*தமிழகத் தொல்லியல் துறை, சென்னை, எழும்பூர்.*
https://www.facebook.com/profile.php?id=100050636408560



*தைப் பொங்கலை இயற்கைக்கும் சூரியனுக்கும் உழவுக்கும் நன்றியினைத் தெரிவிக்கும் விதமாக இன்றுவரை நாம் கொண்டாடி வருகின்றோம். தமிழர் நாகரிகத்திற்கும் பண்பாட்டிற்கும் தைப் பெருந் திருநாள் பொங்கல் பண்டிகை விழா ஒரு சான்றாகத் திகழ்கிறது. இந்தப் பொங்கல் குறித்துச் சங்க இலக்கியங்களிலும் சிலப்பதிகாரத்திலும் இடம் பெறும் குறிப்புகளைப் பின்வருமாறு காணலாம்.*

> *"காவற் பூதத்துக் கடைகெழு பீடிகைப்*
> *புலுக்கலும் நோலையும் விழுக்குடை மடையும்*
> *பூவும் புகையும் பொங்கலுஞ் சொரிந்து ".*
>
> *( சிலம்பு: 5:67-69)*

**பொருள்:**

*காவிரிப்பூம் பட்டினத்திலுள்ள மறக்குடிப் பெண்டிர் நாளங்காடிப் பூதத்திற்குப் பூவும் பொங்கலும் சொரிந்து குரவையாடி அரசனை வாழ்த்துவதை இந்தச் சிலப்பதிகாரப் பாடலால் அறியலாம்.*

*இச் சிலப்பதிகாரப் பாடல் தமிழரிடம் பொங்கல் செய்து மடைபோடும் நடைமுறையிருந்ததை இலக்கியச் சான்றாக அறியத் தருகிறது.*

*சங்க இலக்கியங்களில் பொங்குவதைக் குறிக்கும் பொங்கல் என்ற சொல் இடம் பெறுகின்றது. இருப்பினும் அவை பொங்கல் நிகழ்ச்சியையோ உணவையோ குறிப்பதில்லை.*

> *"பெய்துபுலம் திறந்த பொங்கல் வெண்மழை*
> *எஃகுறு பஞ்சித் துய்ப்பட் டன்ன*
> *துவலை தூவல் கழிய... ".*
>
> *(அகநானூறு : 217:1-3)*

**பொருள்:**

முழுதும் பெய்துவிட்டதால் வானத்தை வெளியாகத் திறந்துவிட்ட, பொங்கிவரும் வெண் மேகங்கள் இருப்புக் கோலினால் கடையப்பட்ட பஞ்சு மென்மையாகித் துகள் பரந்து தோன்றினாற் போல.

"மந்திக் காதலன் முறிமேய் கடுவன்

றண்கமழ் நறைக்கொடி கொண்டு வியலறைப்

பொங்க லிளமழை புடைக்கு நாட...."

(ஐங்குறுநூறு 276:1-2)

**பொருள்:**

பெண் குரங்கின் காதலனான, இளந் தளிர்களை மேயும் ஆண் குரங்கு குளிர்ச்சியுள்ள மணங் கமழும் நறைக் கொடியினைக் கொண்டு அகன்ற பாறையில் படிந்திருக்கும் பொங்கிவரும் நுரை போன்ற வெண்மையான மேகத்தினை அடித்து விளையாடும் நாட்டினைச் சேர்ந்தவனே!

"பெய்துபுறந் தந்து பொங்க லாடி
விண்டுச் சேர்ந்த வெண்மழைபோல... "

(பதிற்றுப்பத்து 55:14-15)

**பொருள்:**

மழையைப் பெய்து உலகைக் காத்த பின்பு, பஞ்சுப் பிசிறுகளாய்ப் பொங்கி மேலெழுந்து, மலை உச்சியை அடையும் வெண் மேகத்தைப் போல.

ஆக, இந்த 3 பாடல்களிலும் பொங்கல் என்பது வெண் மேகம் பொங்கி வருவதைக் குறிக்கிறது.

சிலப்பதிகாரப் பாடலின் மூலம், தொல் தமிழர் வாழ்வியலில் பொங்கல் படையலிட்டதை அறிய முடிகின்றது. மனித அக வாழ்வும் புற வாழ்வும் அன்று அமைந்திருந்தவற்றை அறிய இன்று பண்டைய இலக்கியக் குறிப்புகள் உதவுகின்றன என்பது சிறப்பே.

பரந்து விரிந்த உலகில் வாழும் அனைத்துத் தமிழர்களுக்கும் இந்தத் தருணத்தில் இனிய தைப் பொங்கல் திருநாள் நல்வாழ்த்துகள் தெரிவித்துப் பதிவு செய்கிறேன்.

# தமிழர்கள் ஏன் பிறமொழிகளைக் கற்க வேண்டும்?



***முனைவர் ஆனந்த் அமலதாஸ் சே.ச.***
*மெய்யியலார், மொழிபெயர்ப்பாளர்*
*ஜெர்மனி.*

*வெளி நாட்டிலிருந்து தமிழகத்திற்கு வந்த மறைப்பணியாளர்கள் தமிழுக்குச் செய்த தொண்டு மிகப்பெரிது. சிறப்பாக தே நோபிலி, வீரமாமுனிவர், சீகன்பால்கு போன்றவர்கள் பண்பாட்டுப் பரிமாறலில் பெரிதும் பங்கெடுத்தவர்கள். தே நோபிலி தனது இலத்தீன் நூல்களில் இந்தியப் பண்பாட்டைப் பாராட்டி ஐரோப்பியர்களுக்கு இந்தியாவை அறிமுகம் செய்தார். அதோடு கிறித்தவ கோட்பாடுகளை – சிறப்பாக தாமஸ் அக்குவினாவை – "ஞான உபதேசம்" என்ற பெயரில் தமிழாக்கம் செய்தார். அதுபோல, வீரமாமுனிவர் திருக்குறளை இலத்தீனில் மொழி பெயர்த்து மேலை நாட்டவர் அறியச் செய்தார்.*

*சீகன்பால்கும் அவரது நண்பர்களும் விவிலியத்தைத் தமிழாக்கம் செய்தனர். பிறகு தமிழ்மரபில் உள்ள பண்பாடுகள் பற்றி "மலபார் கடவுளர்களின் வம்சாவளி" என்ற நூலை செர்மன் மொழியில் வெளியிட்டார். சோமெருஸ் மாணிக்கவாசகரை செர்மானியருக்கு அறிமுகம் செய்தார். ஆர்னோ லேமான் தாயுமானவர் பாடல்கள் அனைத்தையும் செர்மனில் மொழி பெயர்த்தார்.*

*இது கடந்த கால தமிழக வரலாறு. ஆனால் இப்பொழுது யாரும் வெளியிலிருந்து வந்து நமது மொழியைப் படித்து மொழி பெயர்ப்பார்கள் என எதிர்பார்க்க முடியாது. நாமே நமது சொத்தை மற்றவரிடம் எடுத்துச் செல்ல வேண்டும். அதனால் நாம் பிற மொழிகளைக் கற்க வேண்டும்.*

> *"தமிழர்க்குத் தமிழ் மொழியிற் சுவடிச்சாலை*
> *சர்வ கலா சாலையைப்போல் எங்கும் வேண்டும்*
> *தமிழிலாப் பிறமொழிநூல் அனைத்தும் நல்ல*
> *தமிழாக்கி வாசிக்கத் தருதல் வேண்டும்."*
>
> *(புத்தகசாலை: பாரதிதாசன்)*

***பண்பாட்டுப் பரிமாறலில் எனது பங்கு:***

*ஐரோப்பிய மொழிகளில் சிலவற்றைக் கற்க வாய்ப்புக் கிடைத்தது. அதுவும் சிறப்பாக ஆஸ்திரியாவின் தலைநகரான வியன்னாவில் உள்ள பல்கலைக் கழகத்தோடு ஏற்பட்ட தொடர்பு மிகவும் பயனுள்ளதாக இருந்தது. செர்மன்*

*மொழி பேசும் மாணவர்களுக்குப் பாடம் சொல்ல அழைப்பு வந்தது. அதன் விளைவுதான் எனது மொழிபெயர்ப்பின் தொடக்கம்.*

***என் கடவுள் ஒரு வஞ்சக்கள்வன்:***

*முதன் முறையாக நம்மாழ்வார் பாடல்களில் 100 பாடல்களைத் தேர்ந்தெடுத்து ஜெர்மனில் மொழி பெயர்த்தேன். வியன்னாவில் பாடம் சொல்லிக் கொடுக்க இந்நூலைப் பயன்படுத்தினேன். "என் கடவுள் ஒரு திருடன்" என்ற தலைப்பில் அதை வெளியிட்டேன் (முயூல்லர்-ஸ்பைசர் பதிப்பகம், சால்ஸ்புர்க், 2004). அதாவது, நம்மாழ்வார் சொல்லாடலையே தலைப்பாக வைத்தேன். "என் கண்ணன் என்னைத் தனதாக்கி, என்பாடல் வழியாகத் தன்னை வெளிக்காட்டுகிறான். அவன் ஒரு "வஞ்சக்கள்வன்" என்கிறார் நம்மாழ்வார். இது பக்திப்பாடல் பண்பாட்டின் எடுத்துக்காட்டு.*

*தென்கலை மரபின் தலைவரான பிள்ளை லோகாசாரி எழுதிய "தத்வ த்ரயம்" என்ற சூர்ணைகளையும் அதற்கு உரை எழுதிய மணவாள மாமுனியையும் சேர்த்து ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து வெளியிட்டேன். பிறகு மணவாளமாமுனி எழுதிய "ஆர்த்தி பிரபந்தம்" என்ற நூலையும் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தேன்.*



***நடனமாடும் கடவுள் சிவன்:***

*வியன்னா பல்கலைக் கழகத்தில் என்னுடைய பொது தலைப்பு "இந்திய மரபில் கடவுள் பற்றிய சிந்தனை" என்பது. ஒரு ஆண்டு வைணவத்தைப் பற்றியும், அடுத்த ஆண்டு சிவனைப் பற்றியும் அறிமுகம் செய்தேன்.*

*சிவனுடைய நாட்டியம் பற்றிய பாடல்களைத் தேர்ந்தெடுத்து செர்மனில் மொழி பெயர்த்தேன். தமிழ் படித்துவிட்டு வாருங்கள் என்றால் யாரும் என் வகுப்புக்கு வரமாட்டார்கள். அதனால் இந்தப் பாடல்களை மொழிபெயர்த்துக் கொடுத்து உரையாடல் நடத்தினேன்.*

அதாவது, திருமந்திரத்தில் ஒன்பதாவது அதிகாரம் சிவ நடனம் பற்றியது – சிவன் எங்கு நடனமாடுகிறார், ஏன் நடனமாடுகிறார், பார்ப்பவர் மத்தியில் நாட்டியத்தின் விளைவு என்ன என்ற கேள்விகளுக்குப் பதில் கொடுப்பது போல இந்தப்பாடல்கள் அமைந்துள்ளன.

அதோடு சமஸ்கிருதத்திலும் சிவ நடனம் பற்றிய ஒரு சில நூல்கள் உண்டு. ''குஞ்சித அங்கிர ஸ்தவ'' என்று பெயர் - அதிலும் சில பாடலை மொழிபெயர்த்து வெளியிட்டேன். (முயூல்லர்-ஸ்பைசர் பதிப்பகம், சால்ஸ்புர்க், 2004).

**சிவன் தென்னிந்தியாவில் நடனமாடுகிறார்:**

அதற்கு அடுத்த முறை - முருகன் பற்றி அருணகிரி நாதர் எழுதிய 'கந்தர் அனுபூதியையும்'' மொழி பெயர்த்து - வள்ளலாரின் சில பாடல்களையும், சித்தர் பாடல்களும் சேர்த்து ஒரு புத்தகமாக வெளியிட்டேன். ''சிவன் தென்னிந்தியாவில் நடனமாடுகிறார்'' -என்ற தலைப்பில் வெளிவந்தது (முயூல்லர்-ஸ்பைசர் பதிப்பகம், சால்ஸ்புர்க், 2009).



**அபிராமி அந்தாதி :**

ஓர் ஆண்டு பெண் தெய்வங்களைப் பற்றிய கருத்துக்களைத் தொகுத்து பாடம் தயாரித்தேன். உலகளவில் அது ஒரு பெரிய முயற்சியாக இன்னும் இருக்கிறது. அதனால் அது பற்றிய இந்திய மரபு நூல்களைத் தேடினேன். சமஸ்கிருதத்தில் ''தேவி மாகாத்மியம்'', ''சௌந்தரிய லகரி'' போன்ற பல நூல்கள் உள்ளன.

தமிழில் ''அபிராமி அந்தாதி'' என்ற பாடல் எனக்குப் பிடித்திருந்தது. அதையும் செர்மனில் மொழி பெயர்த்து ஓர் ஆண்டு பாடநூலாகப் பயன்படுத்தினேன் (முயூல்லர்-ஸ்பைசர் பதிப்பகம், சால்ஸ்புர்க், 2004).

**செர்மன் மொழி நூல்களைத் தமிழாக்கம் :**

*ஜெர்மன் மொழி பேசும் பகுதியான ஐரோப்பாவுடன்தான் எனக்கு அதிக தொடர்பு இருந்தது. அங்குப் பல்கலைக்கழக பேராசிரியர்களுடன் கொண்ட உறவு பெரிதும் உதவியது. அவர்களைச் சந்திக்கும் போது அன்பளிப்பாக அவர்கள் எழுதிய நூல்களைக் கொடுப்பது வழக்கம்.*




*ஒரு முறை பிராங்பர்ட் பல்கலைக்கழக பேராசிரியர் தனது நூல் ஒன்றைக் கொடுத்தார். அது அவர் எடுத்த சிறந்த முயற்சியின் பயன். பள்ளி அளவில் பாடம் சொல்லிக் கொடுக்கும் ஆசிரியர்களுக்கு பெரிய நூலக வசதி அதிகம் இருக்காது. பல்வேறு சமயங்களையோ அவர்களின் கோட்பாடுகளையோ எளிதில் கற்க வசதியும் இருக்காது. அவர்களுக்கு உதவியாக 80 பேராசிரியர்களை அழைத்து, பல்சமய பண்பாட்டுக் கருத்தியலைக் கொடுத்து - ஒவ்வொரு தலைப்பிலும் 2 பக்க அளவில் ஒரு கட்டுரை தயாரித்து வெளியிட்டார்கள். இந்து சமயம், பல்சமய உரையாடல், அரசியல், பாலின வேறுபாடு, மக்களாட்சி, இஸ்லாம், மானுடவியல், கன்பூசியனிசம் என்று 100 தலைப்புகள் அடங்கிய நூல்.*

*அதைப் பார்த்ததும் ஏன் அதைத் தமிழில் கொண்டு வரக்கூடாது என்று நினைத்து அதைத் தமிழாக்கம் செய்து வெளியிட்டேன். "பல் சமய பண்பாட்டுக் களஞ்சியம்" (அலைகள் மீடியா புக்ஸ், திருச்சி, 2016).*

**உலகெலாம் ஒரு கண்ணாடி:**

*கிறிஸ்தா கேஸ்னர் எழுதிய செர்மன் மொழி நூலை நண்பர் ஒருவர் எனக்கு அன்பளிப்பாகக் கொடுத்தார். அது மனவிடுதலை காண ஒரு வழிகாட்டியான நூல். அதையும் "உலகெலாம் ஒரு கண்ணாடி" என்ற தலைப்பில் 2009-இல் மொழி பெயர்த்தேன். சென்னையில் உள்ள கிளரேசியன் பதிப்பகம் அதை வெளியிட்டது. ஒரு முறை ஆசீவகக் கோட்பாடு பற்றிக் கருத்தரங்கு ஒன்றில் வியன்னாவில் உரையாற்றினேன். அதன் வழியாக பேராசிரியர் நெடுஞ்செழியன்*

*எழுதிய ஆசீவகம் சார்ந்த நூல்களை அறிமுகம் செய்தேன். மற்றொரு முறை வள்ளலாரைப் பற்றி உரையாற்றினேன். இவற்றை எல்லாம் வலைத்தளங்களில் பதிவு செய்து மற்றவர் கவனத்திற்குக் கொண்டு சேர்த்தேன்.*



பேராசிரியர் க.நெடுஞ்செழியன்

***இறுதியாக :***

*இன்றைய சூழ்நிலையில் எல்லாம் (சிறப்பாக சமயமும் மொழியும்) அரசியல் மயமாக்கப் படுவதை நாம் அறிவோம். அதே வேளையில் தமிழர்களைப் பற்றிய தவறான எண்ணமும் பரவியுள்ளது – தமிழர்கள் குறுகிய மனப்பான்மை கொண்டவர்கள். அதனால் இந்தியை எதிர்க்கிறார்கள். எதார்த்த நிலை அப்படியல்ல. கருத்தளவில் நமக்குத் தெளிவு இருக்க வேண்டும். அதுபோல சமஸ்கிருத மொழியைத் தமிழோடு ஒப்பிடுமுன், வடமொழியை எதிர்க்குமுன் அதற்கான தகுதி நமக்கு வேண்டும். சமஸ்கிருதம் கற்பது நமக்கு நல்லது. அதுபற்றி ஏதும் தெரியாமல் தெருவில் ஓலமிடுவது அறிவு சார்ந்த செயல்பாடு அல்ல. நமக்கு முன்பிருந்த பாவாணர் போன்ற தமிழ் அறிஞர்கள் வடமொழியும் கற்றிருந்தார்கள். அதனால் அவர்கள் வரலாற்றுத் தரவோடு தெளிவாகப் பேச முடிந்தது. பிறமொழியைக் கற்பதால் நமது தாய்மொழிப் பயிற்சிக்குப் பங்கம் வராது.*

# *பாரதியின் புதியபார்வை*

*-- டில்லி ஜனக்புரி எஸ் சீனிவாசன்*



*சுவைபுதிது, பொருள்புதிது, வளம்புதிது, சொல்புதிது சோதி மிக்க நவ கவிதை எந்நாளும் அழியாத மாகவிதை என்விதை என பாரதி தன் கவிதை குறித்துக் குறிப்பிடுகிறார்.*

*எளிய பதங்கள், எளிய நடை எளிதில் அறிந்து கொள்ளக்கூடிய சந்தம் பொதுஜனங்கள் விரும்பும் மெட்டு இவற்றையுடைய காவியமொன்று தற்காலத்தில் செய்து தருவோன் நமது தாய்மொழிக்குப் புதிய உயிர் தருவோனாகிறான் என்பது அவர்தம் இலக்கியக் கொள்கை. அகராதிச் சொற்களிலிருந்து செய்யுள் எழுதிக்கொண்டிருந்த நிலைமையிலிருந்து புதுமை கொண்டுவந்தான். தேசபக்தி, சமுதாய சீர்திருத்தம், தேசிய ஒருமைப்பாடு, பெண்விடுதலை இவையாவும் பாரதி எடுத்துக்கொண்ட இலக்கியப் புதுப் பொருள்கள் எனலாம்.*

*புரட்சி, பொதுவுடைமை, பிள்ளைக்கனியமுதே, பேசும் பொற்சித்திரமே, அக்கினிக்குஞ்சு, நெருப்புச்சுவை, நிலவூறித் ததும்பும் விழிகள், முத்துச் சுடர்போல முதலானவை பாரதி படைத்த புதிய சொற்கள்.*

*உவமைகளில் புதுமை:*

*சூரிய ஒளியை ,*
*தங்கம் உருக்கித் தழல் குறைத்துத் தேனாக்கி*
*எங்கும் பரப்பியதோர் இங்கிதம் எனப் புனைந்துரைக்கிறார்.*

*வசன கவிதை:*

*கவிதை வரலாற்றில் அவர் புகுத்திய புதுமை வசனகவிதை என்பர். பிற்காலத்தில் புதுக்கவிதை பிறப்பதற்குப் பிள்ளையார் சுழி போட்டவனன்றோ!*

*ஞாயிறு என்னும் தலைப்பில்...*

*ஒளி தருவது யாது?*
*தீராத இளமை யுடையது யாது*
*வெய்யவன் யாவன்?*
*என்றும்,*

*காற்று என்னும் தலைப்பில்...*

*காற்றே வா*
*மெதுவாக வா*
*ஜன்னல் கதவை*
*அடித்து நொறுக்கி விடாதே*
*பார்த்தாயா*
*இதோ உடைத்து விட்டாய்*

*இவ்வாறு பூச்சரமாய்த் தொடுத்த சொல்லோவியங்கள் புதுமைவிருந்து படைப்பனவாகும்.*

*புதிய ஆத்திசூடியில் சில இரத்தினங்கள்:*

*வளரும் குழந்தைகளுக்கு...*
*அச்சம் தவிர்*
*ஆண்மை தவறேல்*
*இளைத்தல் இகழ்ச்சி*
*ஈகைத் திறன்*
*ஊண்மிக விரும்பு*
*போர்த்தொழில் செய்*
*ரௌத்திரம் பழகு*
*குன்றென நிமிர்ந்து நில்*
*கூடித் தொழில் செய்*
*வேதம் புதுமை செய்*
*என்கிறான்.*



*அதுபோல இளைஞர் சமுதாயத்திற்குக் கூறும்போது...*
*சென்றிடுவீர் எட்டுத் திக்கும்*
*கலைச் செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்*
*பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்*
*நம்மொழியில் பெயர்த்தல் வேண்டும்*
*மறைவாக நமக்குள்ளே*
*பழங்கதைகள் சொல்வதிலோர் மகிமை இல்லை*
*திறமான புலமை யெனில்*
*வெளிநாட்டார் அதை வணங்கச் செய்தல் வேண்டும் " என அறிவுறுத்துகிறான்.*

***வேதம் புதுமை செய்:***

*பாரதியாரின் கவிதை வரிகள் சில மேலெழுந்தவாரியாகப் படித்துச் செல்லாமல் உணர்ந்து படிக்கத் தூண்டுவன.*

அத்தகைய சொற்களில் ஒன்று வேதம்.

"வேதங்கள் பாடுவார் காணீர்"

"வேதம் நிறைந்த தமிழ்நாடு"

வேத முடையதிந்த நாடு" இவை போன்ற சொற்களில் வேதம் என்பது பழம்பெரும் வேதங்களைக் குறிப்பிடுகிறார்.

"வேதங்கள் சொன்னபடிக்கு மனிதரை

மேன்மையுறச் செய்தல் வேண்டுமென்றே சக்தியைப் போற்றுகின்றோம்"

இதில் வேதம் என்னும் சொல் முன்னோர்கள் செய்த நூல்களைக் குறிப்பிடுவதைக் காணலாம்.

பெண்விடுதலைக்கும்மியில் வரும்

"வேதம் படைக்கவும் நீதி படைக்கவும்

வேண்டி வந்தோமென்று கும்மியடி"

இதில் வேதம் என்னும் சொல் புதிய படைப்பு என்னும் பொருளில் கையாளப் பட்டுள்ளமை புலப்படுகிறது.

அதைப்போன்றே ஸ்வதேச கீதங்கள் முன்னுரையில்...

" இதனால் துணிபு மிகுதியுறப் பெற்றோனாகி மறுபடியும் தாயின் பதமலர்க்குச் சில புதியமலர்கள் கொணர்ந்திருக்கிறேன். இவை மாதாவின் திருவுள்ளத்திற்கு மகிழ்ச்சியளிக்குமென்றே நினைக்கிறேன்" எனக்குறிப்பிடுகிறார்.

**கண்ணன் பாட்டு:**

கண்ணன் பாட்டு பாரதி படைத்த புதுமை. 23 தலைப்புகளில் கண்ணனைப் பாடுகிறார். வேதங்கள் என்று பெயர் படைத்தன யாவும் வேதகாலத்தில் தோன்றிய நான்மறைகள் மட்டும் என அவர் கருதவில்லை. அறிவுகொளுத்தும் நூல்கள் யாவுமே அவருக்கு வேதமாகத் தோன்றுகின்றன.

கண்ணன் என் தாய் என்னும் கவிதையில்...

"நான் வேடிக்கையுறக் கண்டு நகைப்பதற்கே
கோத்த பொய் வேதங்கள்"

எனப் பாடுகிறார்.

வேதங்கள் எனத் தொகுக்கப்பட்டவற்றுள்ளும் சிலவே உண்மையான வேதங்கள் என்கிறார்.

கண்ணன் என் தந்தை என்னும் தலைப்பில் வரும்

"வேதங்கள் கோத்து வைத்தான் அந்த
வேதங்கள் மனிதர்தம் மொழியிலில்லை
வேதங்கள் என்று புவியோர் சொல்லும்
வெறுங்கதைத் திறனில் அவ்வேதமில்லை
வேதங்கள் என்பவற்றுள்ளே அவன்
வேதத்திற் சிற்சில கலந்ததுண்டு
வேதங்களன்றி யொன்றில்லை இந்த
மேதினிமாந்தர் சொல்லும் வார்த்தைகளெல்லாம்"

நல்ல அறிவுள்ள மனிதர் எவர் பேசினும் அது வேதம் ஆகும் என்னும் அரிய கருத்தினை வழங்குகிறார்.



**புதிய உவமைகள்:**

பாரதி படைப்பில் சில புதிய உவமைகளும் காணக்கிடைக்கின்றன. புதியன விரும்பு எனக்கூறி அப்பன் தோண்டிய கிணறு என்பதற்காக உப்புநீரைக் குடிக்க மனமில்லாத பாரதி, பழமையை மூட நம்பிக்கையினை சாடுகின்றான். துரியோதனனுடன் சூதாட்டம் ஆட தருமர் மரபு எனச்சொல்லி இசைகிறார். அதை எழுதமுற்படும் பாரதிக்குக் கோபம் உண்டாகிறது.

"முன்பிருந்ததோர் காரணத்தாலே
மூடரே பொய்யை மெய்யெனலாமோ
முன்பெனச் சொல்லும் காலமதற்கு
மூடரே ஓர் வரையறை உண்டோ
முன்பெனச் சொல்லின் நேற்று முன்பேயாம்
மூன்று கோடி வருடமும் முன்பே!"

எனக் கொந்தளிக்கிறார்.

மாயச்சூதினில் நாட்டைப் பணயம் வைத்து இழந்தபோது பாரதி பொங்கியெழுகிறான். கனல் தெரிக்க நெருப்புமழை ஆவேசமாக வெளிவருகிறது. புதிய உவமைகள் பிறக்கின்றன.

"கோயிற் பூசை செய்வார் சிலையைக்
கொண்டு விற்றல் போலும்
வாயில் காத்து நிற்போன் வீட்டை
வைத்து இழத்தல் போலும்
ஆயிரங்களான நீதி
அவையுணர்ந்த தருமன்
தேயம் வைத்திழந்தான் சீச்சீ
சிறியர் செய்கை செய்தான்."

இதில் "சீச்சீ" என்னும் சொல்லில்தான் எத்தகைய இகழ்ச்சிக்குறிப்பு தொனிக்கிறது பாருங்கள்.

அறநெறியை முற்றிலும் உணர்ந்த தருமன், துரியோதனன், சகுனி விரித்த சூழ்ச்சி வலையில் அகப்பட்டுக் கொண்டான். இதைப் பாரதி புதிய உவமைமூலம் விளக்குகிறார்.

"நரி வகுத்த வலையினிலே தெரிந்து சிங்கம்
நழுவி விழும், சிற்றெறும்பால் யானை சாகும்
வரிவகுத்த உடற்புலியைப் புழுவுங் கொல்லும்
வருங்காலம் உணர்வோரும் மயங்கி நிற்பர்
கிரிவகுத்த ஓடையிலே மிதந்து செல்லும்
கீழ்மேலாம் மேல்கீழாம் கிழக்கு மேற்காம்
புரிவகுத்த முந்நூலார் புலையர் தம்மைப்
போற்றிடுவார் விதிவகுத்த போழ்தினன்றே,"

பாரதி கையாளும் புதிய உவமைகள் படித்து இன்புறத்தக்கன.

பழமை பழமையென்று பாவனை பேசலின்றி
பழமை இருந்த நிலை பாமரர் ஏதறிவார்

*சென்றதினி மீளாது மூடரே நீர்*
*சென்றதையே எப்போதும் சிந்தை செய்து*
*கொன்றொழிக்கும் கவலை யென்னுங் குழியில் வீழ்ந்து*
*குமையாதீர்"*

*எனப் பழமையில் பிடிவாதமாக நடந்து வழுக்கி விழுபவர்களைக் கடுமையாக எச்சரிக்கிறார்.*



*பாரதியார்*

*"மீதூண் விரும் பேல்" என்பது பழைய கருத்து. ஆனால், புதுமை விரும்பும் பாரதி "ஊண்மிக விரும்பு" என்கிறார் உடலினை உறுதி செய்ய ஊண்மிக விரும்புதல் அவசியம்தானே! அச்சம் மடம் நாணம் பயிர்ப்பு நான்கையும் மகளிர்க்குரிய நாற்படையாகக் கொண்டது பழமரபு! நாணமும் அச்சமும் நாய்களுக்கு வேண்டுமாம் என்பது புதுமை விரும்பும் கவிஞனின் புதுக்குரல்!*

*பாரதி பழமையைப் போற்றினாலும் கண்மூடித்தனமாக அனைத்தையும் ஏற்றுக் கொள்ளவில்லை. காலத்திற்கேற்ற புதிய கருத்துக்களைப் புது மொழியில், புதிய நடையில், புதுமைநலன் தோன்றக் கூறியுள்ளார்.*

*புதிய ஆத்திசூடி, புதுமைப்பெண் போன்ற தலைப்புகளும் புதியன விரும்பு என்னும் புத்துரையும் பாரதியார் புதுமைக்கவிஞர் என்பதைப் புலப்படுத்துகின்றன.*

*வாழ்க பாரதி! வாழ்க பாரதம்!*

# சிந்தாமணி எடுத்துரைக்கும் தத்துவ வித்தகம்

*முனைவர் ஆனைவாரி ஆனந்தன்*
*சேத்தியாத்தோப்பு தமிழ் சங்க நிறுவனர் – தலைவர்*




*ஐம்பெருங் காப்பியங்களுள் நனிசிறந்த காப்பியமான சீவக சிந்தாமணி சிற்றின்பத்தை விரித்துரைக்கும் நூல் என்றுதான் பலரும் அறிவர். இக் காப்பியத்தை தமிழ்ச் சுவையோடு காமச்சுவையும் சொட்டச் சொட்ட இயற்றியவர் ஒரு சமணத்துறவி. சமய நூல்கள் பலவற்றைக் கற்றுணர்ந்த ஞானி. வாழ்க்கையின் நிலையாமையை முற்றுணர்ந்த யோகி.*

*எனவே, வாழ்க்கை, உயிர், நிலையாமை, வீடுபேறு போன்றவற்றின் இயல்புகளையும் தத்துவங்களையும் சமண மதக்கோட்பாடுகளையும் ஓட்டமும் நடையுமாய் ஓடுகின்ற கதைப் போக்கின் ஊடே, ஊடே பல்வேறு கதாபாத்திரங்கள் வாயிலாக எடுத்துரைத்துச் செல்கின்றார், ஆசிரியர்.*

*முதல் இலம்பகமான, நாமகள் இலம்பகத்திலேயே தத்துவத்தின் தூறலை மன்னன் சச்சந்தன் கூற்றாகத் தெளிக்கின்றார், திருத்தக்க தேவர்.*

*விசையையின் அழகில் மயங்கி, அந்தப் புரத்திலேயே கிடந்த மன்னனுக்கு அமைச்சர்கள் அறிவுரை கூறுகின்றனர். ஆனால் மன்னனோ, அவர்களின் அறிவுரையை ஏற்க மறுத்து எல்லாம் வினைப்பயன்; விதிப்பயன் என்கின்றான்.*

*‘‘அவரவர் செய்த வினைக்கேற்பவே போகமும் புகழும் அமைந்துள்ளன. வாழ்நாட்களும் அவ்வாறே அளவிடப்பட்டுள்ளன. எனவே நிலையாமையைப் பற்றி என்னிடம் ஏதும் கூறவேண்டா’’ என்று கூறும் மன்னன் சச்சந்தனின் கூற்றாக, திருத்தக்க தேவர் வினை – வினைப்பயன் போன்ற தத்துவங்களை எடுத்துரைக்கின்றார்.*

*காந்தருவதத்தையார் இலம்பகத்தில் மன்னன் கலுழவேகன் வாயிலாகவும் ஊழ்வினைப் பயன் குறித்து நூலாசிரியர் பேசுகிறார். பொருள்கள் நம்மை நோக்கி வருவதும், அவை நம்மை விட்டுச் செல்வதும் ஊழ்வினைக் காரணத்தினாலேயேயன்றி வேறல்ல ஆகிவரவேண்டிய நன்மைகள் ஆகிவந்து நம்மையடைவதை யாராலும் தடுத்து விட முடியாது. அஃதே போல், நம் கையைவிட்டுப் போகவேண்டியவையும் போயே தீரும். அதையும் யாரும் தடுத்து நிறுத்திவிட முடியாது. எல்லாம்; ஊழின் பயன் என்கிறார்.*

*‘‘ஆம் பொருள்கள் ஆகுமது யார்க்கும் அழிக்கொண்ணாப் போம்பொருள்கள் போகும் அவை பொறியின் வகை வண்ணம்’’ ஆம்! எல்லாம் ஊழின்பயன்!*

*(இவ்வடிகள் வீடணனுக்குக் கும்பகருணன் கூற்றாக கம்பரால் அப்படியே எடுத்துக்கையாளப்பட்டுள்ளன.)*

*மண்மகள் இலம்பகத்தில் கட்டியங்காரனின் கூற்றாகவும் தத்துவ முத்துக்களை அள்ளி வீசுகின்றார் தேவர். நல்வினைப் பயனை உடையவர்கள், நஞ்சினை உண்டாலும் அது அமுதமாகிவிடும் என்கின்றார்.*

*“நல்வினையுடைய நீரார்*
*நஞ்சுணின் அமுதமாகும்*
*இல்லையேல் அமுதும் நஞ்சாம்*
*இன்னதால் வினையின் ஆக்கம்!”*

*இங்கேயும் வினைப்பயன் இத்தன்மையது என்று சுட்டிக் காட்டப்படுகிறது.*

*பெறற்கரியதான மானிடப் பிறவியைப் பெற்று வாழும் நாம், இப்பிறவியின் பயனை அறியாது வாழ்கின்றோம். மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகளின் வழியே நாமும் சென்று வாழ்நாளை வீணே கழிக்கின்றோம் என்கின்றார், திருத்தக்க தேவர்.*



*கூற்றுவன் கொடியவன்; நம்மைக் கொல்லுதற்குரிய பல வழிகளை ஆராய்ந்து நோய்களாகிய பல நீக்கமுடியாத அத்துயர் மிக்க வலைகளை நீக்கித் தாண்டிச் செல்லவேண்டுமானால் தவச் செயல்களைப் புரிவதால் மட்டுமே முடியும். ஆனால் நாமோ அதன் வழியறியாது தவிக்கும் அனுதாபத்திற்குரியவராக நிற்கின்றோம் என்று கூறும் நூலாசிரியர், வாழ்நாளை வீண் நாளாக்கி உயிர் போனபின், நம் உடலை நெருப்பு பற்றும் போது நாம் நினைத்தவற்றைச் சாதிக்க முடியுமா? என்று வினாவெழுப்புகின்றார்.*

*மனிதன் ஒரு பயிர் என்கின்றார் திருத்தக்க தேவர். இம் மனிதப் பயிரின்,*

| | |
|---|---|
| *விளைநிலம்* | *- பவழவாய்* |
| *வித்து* | *- முத்தம்* |
| *நாற்று* | *- குழந்தை* |
| *கதிர்* | *- காளைப்பருவம்* |

*இவ்வாறாக விளையும் மனிதப் பயிரை தீவினை, பிணி, மூப்பு ஆகிய விலங்குகள் மேய்ந்து அழித்து விடுகின்றன. இப்பயிரைக் காக்க வேண்டுமெனின் ஒழுக்கமாகிய உயர்வேலியை கட்டாயம் இட்டாக வேண்டும் என்கிறார்*

சிந்தாமணித் தேவர். மனித வாழ்க்கையை ஓர் மரத்திற்கு ஒப்புமையாக்கும் சிந்தாமணியாரின் சிந்தனை நினைந்து நினைந்து இன்புறுதற்குரியது. ஆம்!

அறியாமையை விதையாகவும்

ஆசைகளை வேர்களாகவும்

காதல் இன்பம் மகிழ்ச்சி

ஆகியவை கிளைகளாகவும்

வருத்தம் மலராகவும்

பெருந்துன்பம் காயாகவும்

கொண்டு, தீவினை மரமாக உள்ள இம்மனித உடலின் வாழ்க்கை மறையக் கூடியது என்கின்றார்.

காய்முதிர்ந்து பழமாகிக் கனிந்து வீழ்வதைப் போல இவ்வுடம்பும் ஒருநாள் முதிர்ந்து முதுமையால் கீழே சாயக் கூடியதுதான். அந்த நிலையினை எய்தும் முன்பே பெருமானை நினைந்து மெய்த்துவம் புரிந்து பேரின்ப வீட்டைப் பெற முயலுங்கள் என்று எச்சரிக்கின்றார், காப்பிய ஆசிரியர்.

உயிர் ஒன்றுதான்! ஆனால் அது அடையும் பிறவிகளோ பல. எனவே ஒருவன் ஒரு பிறவியில் செய்த வினையின் பயனை அப்பிறவியிலேயே அவன் அடையாமற் போனாலும் அடுத்து வரும் பிறவிகளில், நிச்சயம் தனது வினைப்பயனை அடைந்தே தீருவான் என்கிறார்.

நாம் இத்தனைப் பிறவி எடுத்துள்ளோம் என்று கணக்கிட முனைவோமானால், கடலின் மணலினும் அளவு அதிகமாகும். இவ்வாறான பிறவியில் நாம் கூடிவாழும் வாழ்க்கையும் இன்பமும் இரண்டு நாள் உறவைப் போன்றதே!

பிறத்தலும், பிறந்தபின் பிரிந்து சாதலும் இயற்கையானதாகும். இடையறாது தொடர்ந்து நடைபெறும் இந்த இயற்கை நியதியை எண்ணி, அழுவதும், கண்ணீர் விடுவதும், அறியாமையாகும்.

இளமையிலும் மூப்பு வரும்
செல்வமுள்ளபோதே வறுமையும் வரும்
கூடியிருக்கும் போதே பிரிவும் வரும்
நலமுள்ள போதே நோயும் வரும்!

எனவே இவற்றையெல்லாம் முன்னோக்கியறிந்து கவலை கொள்ளாது இருக்க வேண்டும் என்று அறிவுறுத்துகிறார், திருத்தக்க தேவர்.

காந்தருவதத்தையார் இலம்பகத்தில், முரசறைவோன் கூற்றாகவும் தத்துவக் கருத்துக்களை எடுத்துரைக்கும் நூலாசிரியரின் திறம் பாராட்டற்குரியதாகும்.

''ஐம்புலன்களை அடக்கி மெய்யறிவு பெற நோன்பிருக்கும் - தவமிருக்கும் மேலோரை வணங்குங்கள். அவர்கள் மகிழுமாறு வேண்டியவற்றை வழங்குங்கள். பயனற்ற செயல்களைச் செய்து உடலை விட்டு விடாமல் அவ்வுடம்பைக் கொண்டே நன்மை விளையும் வீட்டையடைய அருந்தவம் புரிய ஆயத்தமாகுங்கள் '' என்று கூறும் முரசறைவோனின் கூற்று நம் சிந்தனையைக் கிளறிவிடுகிறது.

வேடன் ஒருவனுக்கு அறிவுரை கூறும் சீவகன்,



''ஊனைத்தின்று ஊனைப்பெருக்குவது பாவம். (குறள்) காட்டில் வாழும் வேடனான நீ, காட்டில் கிடைக்கும் காய், கனி, கிழங்கு, நன்னீர் போன்றவற்றை உண்டுவாழ்ந்தால் தேவ வாழ்வு வாழலாம்||என்று கூறுகின்றான். இறைச்சியை உண்டுவாழும் வேடனுக்குக் கூறும் அறிவுரையில் சமண மதத் தத்துவங்களை எடுத்துரைக்கின்றார் நூலாசிரியர்.

புலாலையும், மதுவையும் வெறுப்பது சமணமதம். இதுபோன்ற சமண மதக் கருத்துகள் நூல் முழுவதும் ஆங்காங்கே விரவியுள்ளன என்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

சமணமதக் கோட்பாட்டின் படி முக்திக்குரிய வழிகள் மூன்றாகும். அவையாவன: ஞானம், காட்சி, சீலம் ஆகியவையாகும்.

ஞானமென்பது, உண்மையான- மெய்ப்பொருளை அறியும் அறிவு.

காட்சியென்பது, அறிந்த மெய்ப்பொருளைத் தேர்ந்து தெளிவது.

சீலம் என்பது, ஐம்புலன்களையும் அதனதன் வழியில் செல்லாது தடுத்து உயிர்பிழைத்து உய்யும் வழியில் நடத்தும் ஒழுக்கம்.

அறிவு, காட்சி, ஒழுக்கம் ஆகிய இம்மூன்றும்; மும்மணிகள் என்று போற்றப்படுகின்றன.

"மெய்வழிதெரிதல் ஞானம்
விளங்கிய பொருள்கள் தம்மைப்
பொய்வகையின்றித் தேறல் காட்சி!
ஐம்பொறிகளையும் வாட்டி
உய்வகை உயிரைத் தேயாது
ஒழுகலே ஒழுக்கம்! மூன்றும்
இவ்வகை நிறைந்த போழ்தே
இருவினை கழியும் என்னே!

ஆம்! இம் மும்மணிகளையும் அடையப் பெற்றவர் செய்த தீவினைகள் யாவும் அழிந்துபடும் என்கிறார் சிந்தாமணியார். ஒவ்வொருவருக்கும் நான்கு மனைவியர் இருக்க வேண்டும். அந்நான்கு மனைவியருக்கும் ஒரே ஒரு குழந்தை பிறக்க வேண்டும் என்கிறார், ஆசிரியர்.

ஆம்! அந்த நான்கு மனைவியர் யார் யார் ?




ஈகை, ஒழுக்கம், தவம், பூசை இந்த நான்கு மனைவியருக்குமான ஒரே மகன் நல்வினைப் பயன். இந்த நல்வினைப் பயன் என்ற காளையைப் பெற்றவரே பெற்றோர். மற்றவர் மகவும் பெற்றோராகார்.

ஈகையாவது: ஐம்பொறிகளையும் அடக்கி வென்றவர்கட்கு அளிப்பதாகும்.

ஒழுக்கமாவது: தீந்தேனும் தெளிகள்ளும் ஊனும் துறத்தலாகும்.

தவமாவது: சதுர்த்தசி –அட்டமி (அமாவாசை பௌர்ணமி) நாட்களில் தவறாது பட்டினி கிடந்து விரதம் மேற்கொள்வதாகும்.

பூசையாவது: இறைவன் திருவடிகளைப் பூவாலும் அகிற்புகை சந்தனம், சுண்ணம் போன்றவற்றாலும் அருச்சித்து அலங்கரித்து விளக்கேற்றி ஆராதனை செய்வதாகும்.

மேற்கண்ட ஈகை, ஒழுக்கம், தவம், பூசை ஆகிய நான்கையும் மனைவியராகக் கொண்டு அவற்றால் வரும் நல்வினைப்பயனை அன்புடைய மகனாகப் பெற்றவர்கள் விண்ணுலகையாளும் பேறுபெற்று பிறவித் துயரற்ற பேரின்ப வீட்டை அடைவது நிச்சயம் என எடுத்துரைக்கிறது சிந்தாமணி.

*“நாம் வெளியூருக்குப் பயணம் செல்லும்போது கட்டுச்சோறு கட்டி எடுத்துக் கொண்டு செல்வதைப் போல எமன் நமது உயிரைக் கவர்ந்து செல்ல வரும்போது நல்வினை என்னும் கட்டுச் சோற்றைக் கட்டிக் கொள்ள வேண்டும் என்பதை அறிய மாட்டீர்களே!” என்க கூறி வேதனைப்படும் திருத்தக்கதேவர், நமது உடம்பானது, என்பினை நரம்பில் பின்னி உதிரம் தோய்த்து பின்புறம் தோலைப் போர்த்து மயிர்புறம் பொலிய வேய்ந்திட்டு ஒன்பது வாயிலாக்கி ஊன்பயில் குரம்பை செய்தான்! இது வெறும் கூடுதானே!*

*இதுவெறும் கூடுதானேயன்றி வேறென்ன? என வினவுகின்றார்.*

*கருந்தலைகள் வெண்தலைகளாய்க் கழியும் முன்னே*
*அருந்தவமும் தானமும் ஆற்றுமினே கண்டீர்.*



*என்று, உடலை விட்டு உயிர் நீங்கும் முன்பே இல்லாதவர்க்குக் கொடுத்துதவுங்கள். நற்குணத்தைக் கொள்ளுங்கள்!” என்று கூறுமிடத்திலும்,*

*‘நிலையற்ற செல்வத்தை,*
*நமரங்காள் நினையன்மின்*
*செய்தவமே நினைமின் கண்டீர் ‘*

*என்று கூறுமிடத்திலும்,*

*“நம்பன்மின் செல்வம் நமரங்கள்*
*நல்லறமே நினைமின் கண்டீர்,”*
*நண்ணன்மின் செல்வம்;; நமரங்காள்*
*நல்லறமே நினைமின் கண்டீர்!*

*எனக் கூறுமிடங்களிலும், நிலையற்ற செல்வத்தை நம்பியிராமல், நல்லறம் செய்யுங்கள்; என்று கூறி செல்வத்தின் நிலையாமையை எடுத்துரைக்கின்றார் சிந்தாமணி ஆசிரியர்.*

*சமண சமயம் கூறும்,*
*ஐந்து அத்தியாயம்,*
*ஆறு திரவியம்*
*ஏழு தத்துவம்*
*ஒன்பது பதார்த்தம்*

*ஆகியவற்றை முத்தி இலம்பகத்தில் விவரிக்கின்றார் நூலாசிரியர்.*

*உயிரானது சம்சார உயிர், முக்தி உயிர் என இருவகைப்படுமெனவும், உயிரல்லது புத்தலம், தர்மம், அதர்மம், ஆகாயம், காலம் ஐவகைப்படுமெனவும், புண்ணியம், பாவம், ஊற்று, கட்டு(பந்தம்) ஆகியவை பற்றியும், எட்டு கர்மங்கள் மற்றும் அதன் 148 உட்பிரிவுகள் பற்றியும் முக்திக்குரிய வழிகள் பற்றியும் கூறி, தத்துவ வித்தகத்தைத் தமது நூலெங்கும் பரப்பி வைத்துள்ள சமணத்துறவி திருத்தக்க தேவரின் சிந்தாமணி... சமயவாதிகளின் நெஞ்சில் சிந்தாத மணியாக நின்று ஒளிவீசிக் கொண்டிருக்கிறது.*

*(புதுவை வானொலி உரை)*

---

## திருக்குறள்

***தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்***
***மனக்கவலை மாற்றல் அரிது*** ***(குறள் எண்.7)***

***குறள் விளக்கம்:*** *தனக்கு ஒப்புமை இல்லாத தலைவனுடைய திருவடிகளைப் பொருந்தி நினைக்கின்றவர் அல்லாமல், மற்றவர்க்கு மனக்கவலையை மாற்ற முடியாது.*

…………..

# என் மொழிபெயர்ப்பு அனுபவங்கள்

**சுப்ரபாரதிமணியன், எழுத்தாளர்,**
**திருப்பூர், தமிழ்நாடு,**



இந்தியா என்பது ஒற்றைக் கலாச்சாரத்தால் அமைக்கப்பட்டது என்பது போல சில சமயம் தோற்றமளித்தாலும், அப்படி சிலரால் கட்டமைக்கப்பட்டாலும் இந்தியா என்பது அப்படியல்ல பல்வேறு கலாச்சாரக் கூறுகளை உள்ளடக்கிய பல மடிப்புகளைக் கொண்டது. இந்த எண்ணங்கள் இந்தியாவின் பல்வேறு மொழி படைப்பாளிகளின் படைப்புகளை ஆங்கிலம் மூலம் மொழிபெயர்க்கும் போது நான் உணர்ந்தேன்

சாகித்திய அகாடமியின் ஆலோசனைக் குழு உறுப்பினராக 2008 முதல் 2012 வரை கவிஞர் சிற்பி பலசுப்பிரமணியம் அவர்களின் தலைமையிலான குழுவில் பணியாற்றினேன். அப்போது சாகித்திய அகாடமிக்காக இரண்டு நூல்களை ஆங்கிலத்திலிருந்து மொழிபெயர்க்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. பிராந்திய செயலாளராக இருந்த இளங்கோவன் அவர்கள் என்னை மொழிபெயர்ப்புப் பணியில் ஈடுபடுத்திக் கொள்ளச் சொன்னார். ஆலோசனைக் குழு உறுப்பினர் என்ற வகையில் பல்வேறு படைப்பாளிகளுக்கு மொழிபெயர்ப்புக்காகப் படைப்புகளை ஒதுக்கீடு செய்யும் பணியின் போது என்னையும் மொழிபெயர்ப்பு பணியில் ஈடுபடச் சொன்னார்.

அப்படி நான் சாகித்திய அகாடமிக்காக எடுத்துக் கொள்ள முதல் நூல் ஒடிய எழுத்தாளரான ஜே பி தாஸ் என்பவரின் " உயில் மற்றும் பிற கதைகள்". டெல்லியில் அப்போது இருந்த ஜே.பி. தாஸ் ஒரு ஐ.ஏ.எஸ். அதிகாரி. பணி ஓய்வு பெற்றவர். அவரின் ஒடியக் கதைகள் இந்தியக் கலாச்சாரத்தின் ஒரு பகுதியாக இருப்பதையும் ஒடியக் கலாச்சார அம்சங்களும், தொன்மங்களும், மக்களின் நம்பிக்கைகளும் அவை மூட நம்பிக்கையாக இருந்தாலும் சரி தனித்து விளங்குவதைக் கண்டேன். எனவே, அந்தக் கதைகளை மொழி பெயர்க்கிற போது அந்த கூறுகளை உள்வாங்கிக் கொண்டு மொழிபெயர்ப்பது என்பது சற்று சிரமமாகத்தான் இருந்தது. கடவுள் நம்பிக்கையோ, மூடநம்பிக்கையோ மக்கள் சார்ந்த தொன்மக்கதைகளோ எனப் பல பகுதிகளைப் பிரதிநிதித்துவப்படுத்தும் கதைகளாக அவை இருந்தால் கூட பல சமயங்களில் அவை ஒவ்வொன்றுக்குமான தனித்தன்மை இருப்பதை அந்த ஒடிய கதைகளை மொழிபெயர்க்கும் போது அறிந்து கொண்டேன்.

அதற்குப் பின்னால் நான் மொழி பெயர்த்தது சாகித்திய அகாடமி வெளியிட்ட ‘‘பூமியின் பாடல்கள்’’ என்ற நூல், இது வடகிழக்கு இந்திய எழுத்தாளர்களின் சிறுகதைகளி ன் தொகுப்பு . வடகிழக்கு இந்திய எழுத்தாளர்களுடைய கதைகளினுடைய அம்சங்களைக் கவனிக்கிற போது அவை பல சமயங்களில் இந்தியாவிலிருந்து துண்டிக்கப்பட்டதைப் போலத் தென்படும். மலைப்பகுதிகளும் இயற்கை வளங்களும் கொண்ட வடகிழக்கு இந்தியப் பகுதி சார்ந்த கதைகள் அவர்களின் பிரத்தியேக வாழ்க்கையைச் சொல்வதைக் கனிம வளங்களும் தேயிலைத் தோட்டங்களும் இயற்கை சம்பந்தமான இடங்களும் என்று உள் வாங்கினேன். அதனோடு மக்களுடைய வாழ்க்கையையும் கனிம வளங்களை கார்ப்பரேட்டுகள் கொள்ளை அடித்துக் கொண்டு போய் விடக்கூடாது என்ற அக்கறையில் அவற்றைப் பாதுகாக்கும் ஆதிவாசிகளும், பழங்குடி மக்களும் போராளி குழுக்களும் அவர்களுடைய பிரிவினைகளும் ஒற்றுமையும் பல சமயங்களில் ஆச்சரியப்படுத்தியது. பின்னால் வடகிழக்கு இந்தியப் பகுதிகளுக்கு நான் சென்றிருந்தபோது நான் மொழி பெயர்த்த அந்த கதைகள் சார்ந்த மனிதர்களை நேரில் பார்த்துப் பேசும் வாய்ப்பு கிடைத்தது. அப்போது அந்தக் கதைகளை நான் இன்னும் ஒரு முறை திரும்ப வாசித்த போது அவற்றின் தீவிர தன்மையும் உண்மைத் தன்மையும் அறிந்து கொள்ள முடிந்தது. இந்த இரண்டு நூல்கள் மொழிபெயர்ப்பிலும் நான் மூலப்படைப்பைப் போலப் பல சிக்கல்களை எதிர்கொண்டேன். ஆனாலும் எழுதி முடித்ததில் எனக்கு மகிழ்ச்சி ஏற்பட்டது.




எங்கள் திருப்பூர் என்பது 50 ஆயிரம் கோடி ரூபாய் அன்னிய செலாவணி தரும் நகரமாக இருக்கிறது. பின்னலாடை துறை மூலமாக இந்த 50,000 கோடி ரூபாய் அன்னிய செலாவணி கிடைக்கிறது. இந்த துறை சார்ந்து பல்வேறு ஆய்வுகள் உலகம் முழுதும் இருந்து வரும் கல்வித்துறை சார்ந்தவர்களாலும் ஜவுளித்துறை சார்ந்தவர்களாலும் செய்யப்படுகின்றன. அப்படிச் செய்யப்பட்ட ஒரு நூல் நெதர்லாந்து சார்ந்த சில ஆய்வாளர்கள் நடத்திய பின்னலாடை துறை சார்ந்த ஆய்வு ”நிட்டட் டுகெதர்” என்ற பெயரில் ஆங்கிலத்தில் வெளிவந்தது. அதை நான் ” பின்னலின் பின்னல்” என்ற பெயரில் தமிழில் மொழிபெயர்த்தேன். சுமார் 400 பக்கம் கொண்ட அந்த ஆய்வில் திருப்பூர் சார்ந்த தொழிலாளர்களின் நிலைமை, பெண்களுடைய வேலை அமைப்பு, சாயப்பட்டறை தொழில் மாசுபடுத்தி இருப்பது உட்படப் பல விஷயங்களைப் பற்றிய புள்ளி விவரங்களை நான் கண்டுகொண்டேன். அப்போதுதான் திருப்பூர் சார்ந்து

இயங்கும் தன்னார்வ குழுக்கள் மற்றும் திருப்பூர் மக்களின் வாழ்க்கையைப் போராட்டங்களில் மூலம் பதிவு செய்யும் தொழிற்சங்கங்கள் இவற்றினுடைய போக்குகளும் நடவடிக்கைகளும் சரியாக அறிந்து கொள்ள முடிந்தது.

விஜயவாடாவில் நடக்கும் கவிதை திருவிழாக்களில் பல ஆண்டுகள் நான் கலந்து கொண்டிருக்கிறேன். அவற்றை முன் நின்று நடத்தியவர் திருமதி பத்மாஜா ஐயங்கார் என்ற தமிழர். பாடி என்று அவரை செல்லமாக அழைப்பார்கள். அந்த பெயரில் தான் அவரும் ஆங்கிலத்தில் எழுதுவார். அவர் விஜயவாடாவில் அந்த கவிதை திருவிழாவை ஆண்டுதோறும் நடத்துவார். உலகம் முழுக்க இருந்து கவிஞர்கள் கலந்து கொள்வார்கள். அவற்றையெல்லாம் தொகுத்து 500 பக்கங்களுக்கு மேலாக ஆண்டுதோறும் புத்தகமாக வெளியிடுவார். அந்த புத்தகத்தில் அவரவர் மொழி சார்ந்த பிரதிகள் மட்டுமல்லாமல் ஆங்கிலம் ஹிந்தி மலையாளம் உட்படப் பல வெளிநாட்டு மொழிகளில் மொழிபெயர்ப்பு பிரதிகளையும் அதே நூலில் வைத்திருப்பார்கள். பெரிய முயற்சியாகப் பல ஆண்டுகள் அந்த திருவிழா நடந்து கொண்டிருக்கிறது.



சந்திரபாபு நாயுடு

ஓர் ஆண்டில் அப்போதைய ஆந்திராவின் முதலமைச்சராக இருந்த சந்திரபாபு நாயுடு அவர்கள் கலந்து கொண்டு தமிழ் தெலுங்கு கவிதை உலகம் பற்றியும் இந்தியக் கவிதையைப் பற்றியும் ஆற்றிய உரை மிகவும் முக்கியமானது. பல வெளிநாட்டுக் கவிஞர்களின் அரிய உரைகளையும் கேட்டிருக்கிறேன். அந்த கவிதை திருவிழாவில் நான் ஆண்டுதோறும் ஒடிய கவிஞர் சுப்ன பெஹரா என்பவரைச் சந்திக்கிற வழக்கம். அப்படித்தான் ஓராண்டில் அவரின் ஒரு கவிதைத் தொகுப்பைப் பெற்றிருந்தேன். அதை ”அகதி முகாமில் ஓர் இரவு” என்ற தலைப்பில் மொழிபெயர்த்து வெளியிட்டு இருந்தேன். அதேபோல இன்னொரு ஆண்டு அதே ஒடிய பிரதேசத்தைச் சார்ந்த சங்கரா ஜெனே என்பவருடைய ”கான்சிபூரின் நிலவு“ என்ற நூலைத் தமிழுக்கு மொழி பெயர்த்து இருந்தேன். ஒரு இரண்டுமே நல்ல அனுபவங்கள். அந்த விஜயவாடா கவிதைத் திருவிழா ஆகட்டும், சாகித்திய அகாடமி நிகழ்ச்சிக்காக வெவ்வேறு

ஊர்களுக்கு நான் செல்கிற போதும் ஆகட்டும், அங்குச் சந்திக்கிற கவிஞர்களின் படைப்புகளுடன் உறவாடுகிற போது அவற்றில் மூழ்கி இருக்கிற வாய்ப்புகளை ஏற்படுத்திக் கொண்டு பின்னால் பன்னாட்டுக் கவிதைகள் 2016/2017 என்ற தலைப்புகளில் மொழிபெயர்ப்பைக் கொண்டு வந்திருக்கிறேன்.

என்னுடைய படைப்புகளில் சுமார் 20 படைப்புகள் சுற்றுச்சூழல் சார்ந்தவை. சுற்றுச்சூழல் சார்ந்த என் படைப்புகளில் என் மூன்று நாவல்களும், 12 கட்டுரை நூல்களும் அடங்கும். ஆகவே தொடர்ந்து சுற்றுச்சூழல் சார்ந்த என் மனம் அது சார்ந்த பல பிரச்சனைகளைக் கொண்ட கட்டுரைகளையும் மொழிபெயர்க்கவும் செய்திருக்கிறது. அப்படித்தான் இன்றைக்கு உலகைக் கலக்கிக் கொண்டிருக்கும் உலக வெப்ப மயமாதல் உட்படப் பல்வேறு பிரச்சனைகள் சார்ந்து நான் மொழிபெயர்த்த கட்டுரைகளை ”போப் சூழலில் மற்றும் பிற கட்டுரைகள்”என்ற தலைப்பில் நான் ஒரு நூலாகக் கொண்டு வந்தேன்.

சார்ஜா புத்தகக் கண்காட்சிக்கு இரண்டு முறை சென்று வந்திருக்கிறேன். நான்கு ஆண்டுகளுக்கு முன்னால் முதல் முறை சென்ற போது அங்கு லாபியா அஞ்சும் என்ற ஒரு இளம் கல்லூரி மாணவி மற்றும் பெண் கவிஞரைச் சந்திக்க நேர்ந்தது. அவருடைய ஒரு கவிதைத் தொகுப்பை நான் மலையாள எழுத்தாளர் வெள்ளியோடன் அறையில் தங்கியிருந்த போது தினந்தோறும் ஒரு கவிதை என்ற வகையில் மொழிபெயர்க்க ஆரம்பித்து சார்ஜா புத்தகக் கண்காட்சி முடிகிற சமயத்தில் ஒரு தொகுப்பை முடித்து வைத்திருந்தேன். அதுதான் பின்னால் ” பேசாத.. “ என்ற தலைப்பில் திருப்பூர் கவிநிலா பதிப்பகம் ஒரு புத்தகமாகக் கொண்டு வந்தது. சென்றாண்டு 2021 இல் மீண்டும் சார்ஜா புத்தகக் கண்காட்சிக்குச் சென்றிருந்தேன். அப்போது துபாயில் தங்கி இருந்தபோது அந்த பகுதியைச் சேர்ந்த இஸ்மாயில் மெலடி என்பவர் ஒரு ஆங்கில கவிதைத் தொகுப்பை எனக்குப் பரிசளித்தார். அவர் ஒரு மலையாளக் கவிஞர் பத்திரிகையாளர். தினமும் கிடைத்த ஓய்வில் துபாய் கவிஞரின் அந்த கவிதைகளை மொழிபெயர்த்து முடித்தேன் “ புலம்பெயர் மணல் துகள்கள்” என்ற தலைப்பில் அந்த நூல் பின்னால் வெளிவந்தது. அந்த நூலில் இடம் பெயர்ந்து வாழும் இந்திய மக்களுடைய பிரச்சினைகள் பற்றியும் அவர்களுடைய உணர்வுகள் பற்றியும் கவிதைகளின் அனுபவங்களை மொழிபெயர்த்து இருந்தேன் .

சாகித்திய அகாடமியின் பல்வேறு இலக்கிய நிகழ்ச்சிகள் எனக்கு மிகுந்த உற்சாகம் தரக்கூடியவை. அப்போதெல்லாம் அங்குச் சந்திக்கின்ற கவிஞர்களின் கவிதைகளைப் பெற்று உடனே மொழிபெயர்க்கிற ஒரு வேலை தொடர்ந்து செய்து கொண்டு இருந்தேன். அந்த கவிதைகளை நான் “ அரசியல்வாதியும் புறாவும்” என்ற தலைப்பில் ஒரு தொகுப்பாக வெளியிட்டிருக்கிறேன் பல்வேறு அரசியல் கருத்துக்கள் சார்ந்த விஷயங்கள் நம் இந்தியச் சமூகத்தைப் பாதிப்பதை அந்த தொகுப்பில் நான் அடையாளம் கண்டு கொண்டேன்.

பெண்கள் உரிமைகள் சார்ந்தும், பாலின வேற்றுமை சார்ந்தும் பல்வேறு கருத்தரங்குகளில் நான் கலந்து கொண்டிருக்கிறேன் இந்தியாவில் நடைபெற்ற அந்த வகை கருத்தரங்குகளில் மட்டுமல்லாமல் பாலின வேறுபாடு சார்ந்த இரண்டு சர்வதேச கருத்துகளில் வங்காள தேசத்தின் டாக்காவில் நடைபெற்றவற்றில் நான் கலந்து கொண்டிருக்கிறேன். அந்த அனுபவங்களை பல்வேறு கட்டுரைகளாக எழுதி இருந்ததால் ஒருமுறை பெண்கள் உரிமை சார்ந்த ஒரு நூலை மொழிபெயர்க்கிற வாய்ப்பை ஒரு தன்னார்வக் குழு அமைப்பாளர் திலகா அவர்கள் அளித்தார். அது சர்வதேச தொழிலாளர் ஆணையம் வெளியிட்ட பெண் உரிமைகள் சம்பந்தமான ஒரு நூலாகும். அந்த நூலை" பெண்களும் தொழிற்சங்கங்களும்" என்ற தலைப்பில் மொழிபெயர்த்து நூலாக வெளியிட்டு இருக்கிறேன் அந்த நூலில் பாலின வேறுபாடு காரணமாகச் சுரண்டடப்படும் பெண்களும் அவர்களுக்கான நிலையும் உலக அளவில் எப்படி இருக்கிறது வெளிநாட்டுத் துறைகளில் எப்படி இருக்கிறது என்பதைச் சார்ந்த பல எண்ணங்களின் பிரதிபலிப்பாக அந்த நூல் வெளி வந்திருக்கிறது.

சர்வதேச திரைப்பட விழாக்களில் பல ஆண்டுகளாகக் கலந்து கொள்கிற வாய்ப்பின் போது அங்கு வாங்கும் பல நூல்களின் கட்டுரைகளை மொழிபெயர்த்திருக்கிறேன்

சமீபத்தில் வெளிவந்த என்னுடைய மொழிபெயர்ப்பு நூல் " பெயிண்டிங் பிரஸ் நம்பர் 000 ". பாலக்காட்டைச் சேர்ந்த அஞ்சு சஜித் அவர்கள் ஒரு பிரபலமான பதிப்பகத்தின் முக்கிய நிர்வாகியாக பணிபுரிகிறவர், அவர் மலையாளம் மற்றும் ஆங்கிலத்தில் எழுதுகிறவர். அவர் ஆங்கிலத்தில் எழுதின பல படைப்புகளைப் படித்து இருக்கிறேன். ஒருமுறை நானும் மதுரை காமராஜர் பல்கலைக்கழகத்தின் முன்னாள் துணைவேந்தருமான ப.கா. பொன்னுசாமியும் பாலக்காட்டிற்குச் சென்றிருந்தோம். பாலக்காட்டில் பிரபல எழுத்தாளர் அமரர் ஓ வி விஜயன் அவர்களுடைய நினைவு இல்லத்திற்குச் சென்று விட்டு அவருடைய படைப்புகள் பற்றி பல்வேறு பரிமாணங்களை உள்வாங்கிக் கொண்டு திரும்பிய போது பாலக்காட்டில் அஞ்சு சஜித் அவர்களைச் சந்தித்தேன்.

அவர் கொடுத்த அந்த நாவலின் ஆங்கில பதிப்பைப் பாலக்காட்டிலிருந்து நான் திருப்பூர் வருவதற்குள் படித்து முடித்து விட்டேன். அதை உடனே மொழிபெயர்க்க வேண்டும் என்று தோன்றியது. ஓவியர் ஒருவரின் உலகத்தைப் பற்றி அந்த நாவல் சொன்னது. நரபலிகள் மற்றும் மூடநம்பிக்கை சார்ந்து இயங்குகிற ஒரு சமூகத்தில் அதை தன்னுடைய படைப்புகள் மூலம் வெளிப்படுத்துகிற ஒரு ஓவியனுக்கு ஏற்படுகிற சிரமங்களும் அனுபவங்களும், பின்னால் அவர் காணாமல் போவதும், சென்னையில் அவர் வசித்த

பகுதிகளுக்குச் சென்று அவரைத் தேடி அவருடைய மகன் அலைவதுமான அனுபவங்களை அந்த நாவல் கொண்டிருந்தது.



அஞ்சு சஜித்

என் மொழிபெயர்ப்பு பணியில் என் படைப்பிலக்கியத்தின் அம்சங்கள் அவற்றை மொழி பெயர்க்க எனக்கு உதவி இருக்கின்றன. ஒரு படைப்பை உருவாக்குவது போலவே மொழிபெயர்ப்பையும் உருவாக்கும் தன்மையை நான் உள்வாங்கிக் கொண்டிருக்கிறேன். இந்திய மற்றும் சர்வதேச கலாச்சார அம்சங்களை உள்வாங்கிக் கொள்கிற ஒரு பணியாக மற்றும் ஆங்கில வழியில் அந்த மொழி சார்ந்த நுணுக்கங்களைப் பிரதிபலிக்கும் தன்மையை இந்த கவிதைகளின் மொழிபெயர்ப்பு படைப்புகளின் மொழியாக்கமும் என்னைத் தொடர்ந்து இந்த துறையில் இயங்கச் செய்து கொண்டிருக்கிறது.

---

## திருக்குறள்

***அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்***
***பிறவாழி நீந்தல் அரிது*** ***(குறள் எண்.8)***

***குறள் விளக்கம்:***

அறக்கடலாக விளங்கும் கடவுளின் திருவடிகளைப் பொருந்தி நினைக்கின்றவர் அல்லாமல், மற்றவர் பொருளும் இன்பமுமாகிய மற்ற கடல்களைக் கடக்க முடியாது.

*தொடர் – 3*

# *எளிய முறையில் யாப்பறிவோம்!*



**நெருப்பலையார் இராம. இளங்கோவன்,**
*பொருளாளர்,*
*பெங்களூரு தமிழ்ச் சங்கம்*

*பாடம்-3. சீர்:*

*தொடக்கத்தின் இரண்டு பாடங்களில் எழுத்துப் பற்றியும், அசை பற்றியும் அறிந்தோம். இப்பொழுது சீர் பற்றி அறிவோம்.*

***சீர்:***

*சீர்களில் நேரசைச் சீர் என்றும், நிரையசைச் சீர் என்றும் இரண்டு வகையுண்டு. தனித்தோ, இணைந்தோ தாள உறுதிப்படி முடிவது சீராகும். சீர் என்பதற்குத் தாளம் என்று பொருள்படும். சீராக அமைவதால் சீராயிற்று. சீரானது தன்னுள் அடங்கும் அசைகளின் எண்ணிக்கையை ஒட்டி ஓரசைச் சீர், ஈரசைச் சீர், மூவசைச் சீர், நான்கசைச் சீர் என்ற அடிப்படையில் சீர்கள் நான்கு வகைப்படும்.*

*ஓரசைச் சீர் வெண்பாவில் மட்டுமே பயன்படும். வெண்பாவில் கூட வெண்பாவின் இடையில் எங்கும் வராமல் வெண்பா முடியும் போது ஈற்றுச் சீராக*

*நாள், மலர் என்ற வாய்பாட்டில் அமையும். நான்கசைச்சீர் வஞ்சிப்பாவிற்கு உரியது. அதிகமாகக் கவிதையில் பயன்படுத்தி வருவது ஈரசைச் சீரும் மூவசைச் சீருந்தாம். ஆகவே ஈரசைச்சீர் பற்றியும், மூவசைச்சீர் பற்றியும் இப்பொழுது விரிவாகக் காண்போம்.*

***ஈரசைச் சீர்:***

*முதலில் ஈரசைச் சீரைப் பற்றி அறிவோம். நேரசையுடன் நேரசை இணைந்து வருவது ஒன்று; நிரையசையுடன் நேரசை இணைந்து வருவது இரண்டாவது, நிரையசையுடன் நிரையசை இணைந்து வருவது மூன்றாவது, நேரசையுடன் நிரையசை இணைந்து வருவது நான்காவது. ஆகவே, சீர்கள் ஈரசைகளில் வருவது நான்காகும். இதற்கு,*

***வாய்பாடு:***

*நேர் + நேர் = தேமா.*
*நிரை + நேர் = புளிமா.*
*நிரை + நிரை = கருவிளம்.*

*நேர் + நிரை = கூவிளம்.*
*இந்த ஈரசை கொண்ட நான்கு சீர்களையும் ஈரசைச் சீர் என்றும் இயற்சீர் வெண்டளை என்றும் விளிப்பர்.*

***ஈரசைச் சீரைப் பிரித்து வாய்பாடு அறிவோம்:***

*1. தேமா - தே - நேரசை; மா- நேரசை. இந்த இரண்டு அசைகளும் இணைந்து தேமா ஆகிறது.*

*2. புளிமா - புளி - நிரையசை; மா - நேரசை. இவ்விரண்டு அசைகளும் சேர்ந்து புளிமா ஆகிறது.*

*3. கருவிளம் - கரு - நிரையசை; விளம் - நிரையசை. இவ்விரண்டு அசைகளும் இணைந்து கருவிளம் ஆகிறது.*

*4. கூவிளம் - கூ - நேரசை; விளம் - நிரையசை. இவ்விரண்டு அசைகளும் இணைந்து கூவிளம் ஆகிறது.*

*இச்சீர்களைச் சுருக்கமாகத் தேமா, புளிமா ஆகிய இவ்விரண்டு சீர்களையும் மாச்சீர் என்றும், கருவிளம், கூவிளம் ஆகிய இவ்விரண்டு சீர்களையும் விளச்சீர் என்றும் அழைப்பர். எடுத்துக் காட்டாக இவை நான்கு சீருக்குரியதைப் பிரித்தறியும் சொற்களைப் பார்ப்போம்.*

***பாடல் வரி:***

*குன்றக் குறவன் சாயலள் மடமகள் என்பது ஒரு அடிப் பாடல் . இதைப் பிரித்தால்…………*

*1. குன் - நேர், றக் - நேர் = தேமா.*

*2. குற - நிரை, வன் - நேர் = புளிமா.*

*3. சா - நேர், யலள் - நிரை = கூவிளம்.*

*4. மட - நிரை, மகள் - நிரை = கருவிளம்*

*இப்படிச் சீர்களைப் பிரித்துப் பழகவும். இச்சீர்கள் ஈரசையால் ஆனது. அகவல் என்னும் ஆசிரியப் பாவுக்குரியது என்பதை கீழேயுள்ள செய்யுளை வாசித்தால் உணர்வீர்!*

*" ஈரசை நாற்சீர்களான*

*தேமா, புளிமா, கருவிளம், கூவிளம்*

*ஆகியவை அகவற்கே ஆம்."*

இனி மூவசைச் சீர்களைப் பார்ப்போம்! மூவசைச் சீர்கள் எட்டு வகை. அவை :

1. ஈரசைச் சீரின் இறுதியில் மூன்றாம் அசையாக நேரசைச் சேர்ந்தால் மூவசையாகும். சீரின் ஈற்றசை நேரில் வருவதால் காய்ச்சீர் என்பர். இந்தக் காய்ச்சீர்கள் நான்காகும்.

2. ஈரசைச் சீரின் இறுதியில் மூன்றாம் அசையாக நிரையசை வந்தால் கனிச் சீராகும். இந்தக் கனிச்சீர்கள் நான்காகும்.

காய்ச்சீர் நான்கும் கனிச்சீர் நான்கும் சேர்ந்து மொத்தம் எட்டு வகை ஆகிறது. இனி காய்ச் சீரைப் பிரித்தறிவோம்:

1. நேர் + நேர் + நேர் = தேமாங்காய்.

2. நிரை + நேர் + நேர் = புளிமாங்காய்.

3. நிரை + நிரை + நேர் = கருவிளங்காய்.

4. நேர் + நிரை + நேர் = கூவிளங்காய்.

இந்த நான்கு சீரும் வெண்பாவுக்குரிய வெண்சீர் வெண்டளையாகும். இந்த நான்கு சீரும் ஈற்றசை நேரசை வந்து நேரசையில் முடிந்து காய் என்னும் வாய்பாட்டில் முடிவதால் இவற்றைச் சுருக்கமாக காய்ச்சீர் என்பர். இந்த நான்கு சீர்களையும் பிரித்தறிவோமா? வாருங்கள் பிரிப்பது எப்படி என்பதை உற்று நோக்குவோம்!

1) கொம்பாகிக் என்பது ஒரு சீர். இதை……

கொம் - நேர், பா - நேர், கிக் - நேர் = தேமாங்காய்.

2) சுவையாகிக் என்பது வேறு ஒரு சீர். இதை..

சுவை - நிரை, யா - நேர், கிக் - நேர் = புளிமாங்காய்.

3) சுவைநடுவே - என்பது மற்றொரு சீர். இதை……….

சுவை - நிரை, நடு - நிரை, வே - நேர் = கருவிளங்காய்.

4) காட்டகத்தே - என்பது இன்னொரு சீர். இதை……….

காட் - நேர், டகத் - நிரை, தே - நேர் = கூவிளங்காய்.

மூவசைச் சீரை இப்படிப் பிரித்து வாய்பாடு அறிக.

இனி ஈரசையுடன் ஈற்றசை நிரையசையில் முடிந்தால் கனிச் சீராகும். என்பதை அறிவோம். கனிச் சீரைப் பிரித்தறிவோம்:

*1. நேர் + நேர் + நிரை = தேமாங்கனி.*

*2. நிரை + நேர் + நிரை = புளிமாங்கனி.*

*3. நிரை + நிரை + நிரை = கருவிளங்கனி.*

*4. நேர் + நிரை + நிரை = கூவிளங்கனி.*

*கனிச் சீர் வெண்பாவுக்குரிய(து) அல்ல! கனிச் சீருக்குரிய சீரினைப் பிரித்தறிவோம்:*

*1. பூந்தாமரை- பூந் - நேர், தா - நேர், மரை - நிரை = தேமாங்கனி.*

*2. வினைக்கம்பலை - வினைக் - நிரை, கம் - நேர், பலை - நிரை = புளிமாங்கனி.*

*3. மனைச்சிலம்பவும் - மனைச் - நிரை, சிலம் - நிரை, பவும் - நிரை = கருவிளங்கனி.*

*4.தேம்புனலிடை - தேம் - நேர், புன - நிரை, லிடை - நிரை = கூவிளங்கனி.*

*இப்படிச் சீர்களை பிரித்துப் பழகவும். நான்கு சீர் அசைகள் பற்றி இப்போதைக்குத் தேவையில்லை. பிறகு பார்ப்போம். அடுத்த பாடத்தைக் கற்க முனைப்போடு இருங்கள்.*

*இந்தப் பாடத்தை நன்கு மனப்பாடம் செய்து வினாக்களுக்குரிய விடைகளைப் பார்க்காமல் எழுதி, கொடுக்கப்பட்டுள்ள விடைகளை வைத்துச் சரி பாருங்கள்.*

*யாப்பிலக்கணம் வளரும்.*

---

## திருக்குறள்

***கோளில் பொறியின் குணமிலவே எண்குணத்தான்***

***தாளை வணங்காத் தலை*** ***(குறள் எண்.9)***

***குறள் விளக்கம்:*** *கேட்காதசெவி, பார்க்காத கண் போன்ற எண் குணங்களை உடைய கடவுளின் திருவடிகளை வணங்காதவரின் தலைகள் பயனற்றவைகளாம்..*

# அகர வீற்றுச் சொற்கள்-ஒரு பார்வை:2


**கு. இராமகிருட்டினன்**



*முன்னாள் தமிழ்ப் பேராசிரியர்,
தென்னிந்திய மொழிகள் துறைத்தலைவர்,
பஞ்சாபு பல்கலைக்கழகம், சண்டிகர்—160014.*


*தமிழில் அகரத்தில் முடியும் பெயர்ச்சொற்கள் இல்லை எனலாம். வினைகளான வினைமுற்று, வினையெச்சம், பெயரெச்சம் என்பனவும், உவமையும், இடைச்சொல்லும், உரிச்சொல்லும் அகரத்தில் முடியும். மகரத்தில் முடியும் பெயர் மவ்வீறு ஒழிந்தால் அகரத்தில் முடியும். ஆறாம் வேற்றுமைப் பன்மை உருபும் அகரத்தில் முடியும். நிலைமொழி அகரத்தில் முடியும்பொழுது வருஞ்சொல் வல்லினத்தில் தொடங்கினால் வல்லொற்று மிகுமா, மிகாதா எனவையம் தோன்றும். இக் கருத்தை ஆயலாம். பலர் செய்யும் தவறு மேலும் ஆயத் தூண்டியது.*

*அகரத்தில் முடியும் வினைமுற்றுக்கு எடுத்துக்காட்டு: வந்தன, சென்றன பாடின...*

*அகரத்தில் முடியும் வினையெச்சம்: பாட, ஆட, எழுத, செய்ய....*

*பெயரெச்சம்: உயர்ந்த, தாழ்ந்த, முதிய, இளைய, பெரிய சிறிய, கரிய.....*

*உவமை: போல, புரைய, ஒப்ப, உறழ, மான, கடுப்ப முதலிய 10வினையெச்சங்களும் சில பெயரெச்சங்களும், பிறவும்.*

*இடைச்சொல்: என, மற்ற...*

*உரிச்சொல்: சால, தவ, வய, குழ, மழ, துய, தட, கய*

*மவ்வீறு ஒழிந்த பெயர்கள்: பழ, மர, குள,வட்ட, நீள, அகல....*

*ஆறாம் வேற்றுமை உருபு: என மரங்கள்( என் மரங்கள்), என கைகள்.*

*இனி வல்லொற்று மிகுமா மிகாதா என ஆயலாம்; அகரத்தில் முடியும் வினைமுற்றுகள். வினைமுற்றுத்தொடரில் வரும்.*

*எ.டு: வந்தன பசுக்கள், சென்றன பறவைகள், பாடின குயில்கள். இவ்விடங்களில் வல்லொற்று மிகாது.*

*அகரத்தில் முடியும் வினையெச்சம் முன் வல்லெழுத்தில் தொடங்கும் சொல் வந்தால் அந்த வல்லொற்று மிகும்.*

*எ.டு: பாடப் போ, ஆடக் கூடம் போதாது, எழுதத் தாள் வேண்டும். செய்யச் சொன்னார்.*

*அகரவீற்றுப் பெயரெச்ச மொழிக்குமுன் வல்லொற்று வந்தால் அவ்வொற்று மிகாது.*

*எ.டு: உயர்ந்த கட்டடம், தாழ்ந்த செடி, முதிய பெற்றோர், இளைய தம்பி.*

*உவமஉருபுக்குமுன் வல்லொற்று வந்தால் அவ்வல்லொற்று மிகும்.*

*எ.டு: தாயைப்போலப் பிள்ளை, மான்புரையக் கண்கள், காலத்திற்கேற்பத் தேடு, தந்தையொப்பச் செல்வன்*

*ஆனால் உவமையில் வரும் பெயரெச்சங்களுக்குமுன் ஒற்று மிகாது.*

*எ.டு: தலைவன் அன்ன தொண்டன், இன்ன பிற செய்திகள்*

*சில இடைச்சொற்களுக்குமுன் வல்லொற்று மிகும்.*

*எ.டு: மகன் பிறந்தான் எனத் தந்தை மகிழ்ந்தான், மற்றச் செய்திகளைப் படி.*

*"பெரும்பான்மையும் செய்யுட்குரியவாய் வருதலி னுரிச்சொல் லாயிற்றென்பாருமுளர்."(சேனா)*

*அகரவீற்று உரிச்சொல்முன் வல்லொற்று வரின் அவ்வல்லொற்று மிகும்.*

*எ.டு: தடக்கை, உயிர் தவச் சிறிதே, வயப் புலி, குழக் கன்று.*

*சில வேறு புணர்ச்சி பெறும்.*

*எ.டு: கயந்தலை.*

*மகரத்தில் முடியும் சொற்களில் மவ்வீற்றொற்று ஒழிந்தால் அகரத்தில் முடியும். அப்போது வல்லொற்று வருமொழியில் வந்தால் அவ்வல்லொற்று மிகும்.*

*எ.டு: பழச்சாறு, மரக்கிளை, வட்டப் பாறை, நீளத் தோட்டம்.*

*ஆறாம் வேற்றுமை உருபாக ஒருமைக்கு அதுவும் ஆதுவும், பன்மைக்கு அ வும் வரும். பன்மை உருபுக்குமுன் வல்லொற்று வருமொழியில் வந்தால் ஒற்று மிகாது.*

*எ.டு: என கைகள், என தோட்டங்கள்*

*அகர வீற்றுச் சொற்கள்- ஒரு பார்வை*

***பெயரெச்சம், வினையெச்சம்:***

பெயரெச்சம் முக்காலத்திலும் வரும். எ.டு. செய்த, செய்கின்ற, செய்யும். எனும் வாய்பாட்டில் முடியும். தெரிநிலை, குறிப்பு எனவும், உடன்பாடு, எதிர்மறை எனவும் இருவகைப்படும். பால் காட்டாது. பெயரைக்கொண்டு முடியும். நன்னூல்.340.

வினையெச்சம் செய்து, செய்பு, செய்யா, முதலிய வாய்பாட்டில் அமையும். நன்.343. செயலும் காலமும் காட்டிப் பால் காட்டாது. தெரி நிலை, குறிப்பு எனவும், உடன்பாடு எதிர்மறை எனவும் இருவகைப்படும். வினையைக் கொண்டு முடியும்.

அகரத்தில் முடியும் பெயரெச்சம், வினையெச்சம் பற்றிக் காண்போம்; வந்த, வருகின்ற என்ற வாய்பாட்டில் வரும் பெயரெச்சம் பற்றியும் செய என்ற வாய்பாட்டில் வருகின்ற வினையெச்சம் பற்றியும் காண்போம். அகரத்தில் முடியும் பெயரெச்சத்தின்முன் வல்லினம் வந்தால் வல்லொற்று மிகாது. எ.டு. வந்த பையன், வருகிற, (வருகின்ற) பசு. வராத கன்று என்று, வந்த, வருகிற( வருகின்ற) வராத சொற்களின்முன் வல்லொற்று மிகாது.



செய என்ற வாய்பாட்டின்முன் வருகின்ற வினையெச்சத்தின்முன் வல்லினம் வந்தால் வல்லொற்று மிகும். எ.டு. வரப் போகிறான், படிக்கச் சொல்.

அகரத்தில் முடியும் ஓரெச்சம் பற்றி ஐயம் எழுந்தால் அடுத்து ஏதாவது ஒரு பெயரையோ, வினையையோ இடுங்கள். அவ்வெச்சத்தின்முன் பெயர் பொருந்துவதாக இருந்தால் அது பெயரெச்சம், இன்றேல் அது வினையெச்சம். அவ்வாறே ஓரெச்சத்தின்முன் ஒரு வினையை இடுங்கள். தொடர் பொருந்துவதாக இருந்தால் அது வினையெச்சம், இன்றேல் அது பெயரெச்சம். எ.டு. படித்த பையன்—தொடர் பொருத்தம். எனவே படித்த என்பது பெயரெச்சம். படித்த போனான் – இத்தொடர் பொருந்தவில்லை. எனவே படித்த வினையெச்சமன்று.

சில புலவர், பேராசிரியர்கள் உருபும் பயனும் 'உடன்தொக்கத் தொகை' என எழுதுகின்றனர். அது பற்றி அவர்களுக்கு நன்னூல் காண்டிகை உரை, ஆறுமுக நாவலரின் 'இலக்கணச் சுருக்கம்' முதலான நூல்களிலிருந்து எடுத்துக்காட்டுகள் தந்தேன். 'தொக்க' என்பது தொகுக்கப்பெற்ற, மறைந்துள்ள, இணைந்துள்ள என்ற பொருள்களில் வரும் பெயரெச்சம். எனவே ' தொக்க தொகை' என வரும், தொகை என்ற பெயரின்முன் வரும் 'தொக்க' என்பது பெயரெச்சம்; எனவே

வல்லொற்று மிகாது. படிக்க, ஓடிக்க என்ற வினையெச்சங்கள்போல் உள்ளதால் சிலருக்கு ஏற்படும் மயக்கத்தால் தொக்க முன் வல்லொற்று இடுகின்றனர்.

**பெயரெச்சம்:**

பெயருக்கு முன்பாக வந்து பெயரை விளக்குவது பெயரெச்சம் என்று அறிவோம். இது மூன்று காலங்களிலும் வெவ்வேறாக வரும் எ.டு.: வந்த ஆள், வருகின்ற ஆள், வரும் ஆள். பொதுவாக இறந்த காலத்திலும் நிகழ்காலத்திலும் பெயரெச்சம் அகரத்தில் முடியும் ஆனால் காலம் கரந்த பெயரெச்சமான வினைத்தொகை முக்காலத்துக்கும் பொதுவானது. எ.டு: செய் தொழில் (இது செய்த தொழில், செய்கின்ற தொழில்,செய்யும் தொழில் என்ற மூன்றுகாலத்துக்கும் பொது.), பெயரெச்சம் உடன்பாட்டுப் பெயரெச்சம், எதிர்மறைப் பெயரெச்சம் என்று இருவகைப்படும். எ.டு: செய்த தொழில்,-- செய்யாத தொழில்



பொதுவாகப் பெயரெச்சத்தை அடுத்து வல்லொற்று மிகாது. ஆனால்,ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சமாக இருந்தால் அதையடுத்து வரும் பெயர் வல்லொற்றில் தொடங்குமானால் அவ் வல்லொற்று மிகும். எ.டு: காணாக் காட்சி, உண்ணாச் சாப்பாடு, செய்யாத் தொழில், பாடாப் பாட்டு.

திருக்குறள் படிக்கும் பொழுது சில தொடர்கள் இவ்விலக்கணத்துக்கு வேறுபட்டு வருவதைக் கண்டேன். வேறு இலக்கியங்களிலும் இவ்வாறு வருவதைக்கண்டேன். பொதுவாகக் ‘கால்’, ‘கடை’, கண்’ வரும்பொழுது இவ்வேறுபாட்டைக் கண்டேன். அறிஞர் பெருமக்களோடு பகிர்ந்துகொள்ள விழைகிறேன். உற்றக்கால் (குறள் 1080), பெற்றக்கால்(1270), உக்கக்கால்( 1270), இயைந்தக்கால்(489), விட்டக்கால் (695), ஒலித்தக்கால் (763), நினைத்தக்கால் (296), உற்றக்கடை(372), நின்றக்கடை(1019), அறிந்தக் கடைத்தும் (637), எய்தியக்கண்ணும்(354),கொண்டக்கால்(கலித்தொகை).

ஆனால் ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம் வரும்போது இலக்கணத்துக்கு ஏற்ப வல்லொற்று மிகுவதைக் காண்கிறேன். எ.டு.:கொள்ளாக்கடை (1195), இலாக்கடை (1059),போற்றாக்கடை (315), அகலாக்கடை(478),ஆற்றாக்கடை,(469), கழாஅக்கால்( 840), இயையாக்கடை (230).

மேலும், இரண்டாம் வேற்றுமைத் தொகையில் வல்லொற்று மிகாது என்பர் அறிஞர்கள். ஆனால், திருக்குறளில் வேறுபடுவதைக் காண்கிறேன்.

*எ.டு.: உணர்வார்ப் பெறின் (334,709), பகைவர்ப் பெறின்(860), பெற்றிலார்ப் பேணிக்கொளல் (440), பிரிந்தார்ப் பொருத்தலும் (63).*

*பெயரெச்சத்தை அடுத்துக் கால், கடை, கண் என வருபவை பெயர்ச்சொற்கள் அல்ல, ஏழாம் வேற்றுமை உருபுகள் ஆகும், ஒரு சொல் நீர்மைத்து. ஆதலின் இரட்டித்தன என்று தெரிகிறோம். பெயரெச்சத்தை அடுத்துப் பெயர்ச்சொல் வந்தால் வல்லொற்று மிகாது என்பதுமறிகிறோம்.*

*''உணர்வார்ப் பெறின் போன்ற இடங்களில் ஒற்று மிகுந்து வருவதற்குக் காரணம் இரண்டாம் வேற்றுமைத் தொகையில் நிலைமொழி உயர்திணை யாயின் ஒற்று மிகும் என்பது சிறப்பு விதி.''-என்றோரறிஞர் கூறுகிறார்.*

*நன்னூலின் 255 ஆவது நூற்பா,இரண்டாம் வேற்றுமைப் புணர்ச்சிக்குச் சிறப்பு விதி கூறுகிறது. அதில், ''உயர்திணை யிடத்து விரிந்தும் தொக்கும்'''' என்றுங்கூறுகிறது. அதற்குக் காண்டிகை உரை, 'நம்பியைக் கொணர்ந்தான்--உயர்திணையிடத்து விரிந்தது, மகன்+பெற்றாள்=மகற் பெற்றாள்—உயர்திணை யிடத்துத் தொக்கது' என விளக்குகிறது. ஆனால், அவர் பார், அறிஞர் காண் என்பன இயல்பாயும், அவரைப் பார், என்றும் அறிஞரைக் காண் என்றும் விரிந்தும் வருதலைக் காணலாம்,*

***வினையெச்சம்-விளக்கம்.***

*வடவேங்கடம் தென் குமரி*

*ஆயிடைத்*

*தமிழ்கூறும் நல்லுலகத்து*

*வழக்குஞ் செய்யுளும் ஆயிரு முதலின்*

*எழுத்துஞ் சொல்லும் பொருளும் நாடிச்*

*செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு*

*முந்துநூல் கண்டு முறைப்பட வெண்ணித்*

*தொல்காப்பியர் முதல் பின் வந்த இலக்கண ஆசிரியர் யாவரும் தமிழ் இலக்கணம் யாத்தனர்.*

*முன்னோர் நூலின்*

*வழியே நன்னூற் பெயரின் வகுத்தனன்.*

***வினையெச்சம்:***

தொல்.சொல். 228: செய்து, செய்யூச், செய்பு, செய்தெனச், செய்யியர், செய்யிய, செயின், செயச், செயற்கென,

அவ்வகை யொன்பதும் வினையெஞ்சு கிளவி

உ, ஊ, பு, என, இயர், இய, இன், அ, கு என முடியும் ஒன்பது வாய்பாடுகளில் வருபவை வினையெஞ்சு கிளவி எனத் தொல்காப்பியர் குறிக்கிறார். இ, ய் என்னும் வாய்பாடுகளில் வருபவை உகரத்தில் அடங்கும் எனச் சேனாவரையர் தெளிவுபடுத்துகிறார்.

நன்னூல், 342: தொழிலுங் காலமும் தோன்றிப் பால்வினை

ஒழிய நிற்பது வினையெச் சம்மே ----

343. செய்து செய்பு செய்யாச் செய்யூச்

செய்தெனச் செயச்செயின் செய்யிய செய்யியர்

வான்பான் பாக்கின் வினையெச் சம்பிற

ஐந்தொன் றாறும் முக்காலமும் முறைதரும்—என்று நன்னூல் கூறுகிறது.

காண்டிகை உரையாசிரியர், இறந்த காலத்திற்கு இ, ய், உம் என்பனவும் எதிர் காலத்துக்கு மேலும் ஆறும், எதிர்மறைக்கும் குறிப்பு வினையெச்சத்திற்கும் மேலும் பல விகுதிகள் வரும் என்கிறார்.

இலக்கணச் சுருக்கம்: 270: வினையெச்சமாவது பால்காட்டும் முற்று விகுதி பெறாத குறைச் சொல்லாய் வினைச் சொல்லைக் கொண்டு முடியும் வினையாம் என்று நாவலர் தெரிவிக்கிறார். மேலும், இவ் வினையெச்சங்கொள்ளும் வினைச் சொற்களாவன உடன்பாடும் எதிர்மறையும் பற்றிவரும் தெரிநிலையுங் குறிப்புமாகிய வினைமுற்றும் பெயரெச்சமும், வினையெச்சமும், வினையாலணையும்பெயரும், தொழிற்பெயரும் ஆகிய ஐவகை வினைச்சொற்களுமாம் என்று ஆறுமுக நாவலர் விளக்குகிறார்.

வினையெச்சம் வினைகொண்டு முடியும் என்று கூறியவர் வினையில் வினையாலணையும்பெயரும்,தொழிற்பெயரும் அடங்கும் என்கிறார்.

இல.சுரு. 107: இ, ய், ஆ, ஊ, என, அ, எனும் விகுதிகளையுடைய தெரிநிலைவினை வினையெச்சங்களின் முன்னும் அ,றி என்னும் விகுதிகளையுடைய இவ்விருவகை வினையெச்சங்களின் முன்னும் வரும் வல்லினம் மிகும். எ.டு. தேடிக் கொண்டான், போய்க் கொண்டான், உண்ணாச் சென்றான், உண்ணூச் சென்றான், உண்டெனப் பசி தீர்ந்தது, உண்ணப் போனான், மெல்லப் பேசினான், நாளின்றிப் போனான், உண்டவழித் தருவான், உண்டக்கடைத் தருவான், அவனில்லாவழிச் செல்வான், அவனில்லாக்கடைச் செல்வான்.

சேனாவரையர், தம் உரையில், உண்டெனப் பசி கெட்டது, மருந்து தின்றெனப் பிணி நீங்கியது மழைபெய்யக் குளம் நிறைந்தது எனக் கூறுகிறார். காண்டிகை உரையில் உரையாசிரியர், சூரியன் உதிக்கச் சாத்தன் வந்தான் என்று எடுத்துக் காட்டுத் தருகிறார்.

இம் மூன்று உரைகள்வழி வினையெச்சத்தின்முன் பெயர் வந்தாலும் வல்லொற்று மிகும் என அறியலாம்.

மற்றொன்றிலும் கருத்தூன்ற வேண்டும். அஃது: இடைப்பிற வரல்.

தொல்.சேனா,237. தத்த மெச்சமொடு சிவணுங் குறிப்பி

னெச்சொல் லாயினு மிடைநிலை வரையார்.

தத்தமெச்சமாகிய வினையோடும் பெயரோடும் இயையுங் குறிப்புடைய எச்சொல்லாயினும் இவ்வெச்சத்திற்கும் அவற்றான் முடிவனவாகிய தமக்கும் இடை நிற்றல் வரையார்.

எ.டு. உழுது சாத்தன் வந்தான், உழுதேரோடு வந்தான், கொல்லுங்காட்டுள் யானை, உண்டு விருந்தோடு வந்தான், உழுதோடி வந்தான், கவளங்கொள்ளாக் களித்த யானை.

நன்னூல்: 356.: ‘உருபு முற்றீ ரெச்சங் கொள்ளும்

பெயர்வினை யிடைப்பிற வரலுமாம் ஏற்பன’.

எட்டு வேற்றுமை யுருபுகளும், வினைமுற்றுகளும், பெயரெச்சங்களும், வினையெச்சங்களுமாகிய இவற்றுக்கும்,இவை கொண்டுமுடிகிற பெயர்ச்சொற்களுக்கும் வினைச்சொற்களுக்கும் நடுவில் பொருந்துவனவாகிய வேறு சொற்கள் வருதலும் ஆகும்.

இலக்கணச் சுருக்கம் 365: வேற்றுமையுருபுகளும், வினைமுற்றுகளும், பெயரெச்சங்களும் கொண்டு முடியும் பெயர்க்கும் வினைக்கும் இடையே வருமொழியோடு இயையத்தக்க பிற சொற்கள் வரவும் பெறும்.

எ.டு. சாத்தன்( வயிறார) உண்டான், அறத்தை ( அழகு பெறச் ) செய்தான், வாளால் ( மாய ) வெட்டினான், தேவர்க்கு(ச் செல்வம் வேண்டிச்) சிறப்பெடுத்தான், வந்து சாத்தன் இன்று அவனூருக்குப் போயினான்.

எனவே வினையெச்சத்தை முடிக்குஞ்சொல் வினை. ஆனால் வினையெச்சத்துக்கும் வினைக்கும் இடையில் ஒன்றோ பலவோ பெயரோ, வேறு வினையெச்சமோ, பெயரெச்சமோ வருவது இலக்கணத்துக்குப் பொருந்தும் என்று உணரலாம். அவ்வாறே வினையெச்சத்தின்முன் வல்லொற்று மிகுதல் இலக்கணம் ஆகும்.

*நிறைய சம்பாதிக்கலாம்'' –என்று ஒருவர் எழுதினார்''. --அதற்கு,*

*''நிறைய'-வினையெச்சம்; வல்லொற்று மிகும்.''-- என்று யான் மறுமொழி எழுதினேன். அவர் அதை மறுத்து,*

*''சம்பாதிக்கலாம் வடசொல் வருமொழியானால் மிகாது''.-- என மறுமொழி தந்தார்.*



இதற்குக் கீழ் வருமாறு எழுதினேன்...

*வேற்றுமொழிக்காகத் தமிழிலக்கணத்தை மாற்றிக்கொள்ளத் தமிழ் இலக்கணம் கூறவில்லை. அதேபோன்று வேற்று மொழிக்காகத் தம் இலக்கணத்தை மாற்றிக்கொள்ளப் பிற வேற்றுமொழி இலக்கணங்களும் கூறவில்லை.* It is a Anna Statue *என்றும் கூறவியலாது. வடசொல்லுக்குத் தமிழ் இலக்கணம் மாறாது. 'வடசொற்கிளவி வடவெழுத்தொரீஇ ' மட்டும். தமிழ் இலக்கணம் மாறாது. வடசொல்லுக்கு மதிப்பளிக்க வேண்டுமா? தொல்காப்பியரே கூறவில்லை.*

*சம்பாதி என்ற சொல்லே தமிழ் என்கின்றன அகரமுதலிகள். சம்பாத்தியம் என்பது 'பொருளீட்டுதல். ''நெல்லை அறுவடை செய்தல் எனப் பொருள்படும் சம்பா அரித்தல் என்பது சம்பாரித்தல் என்றாகிப் பொருளீட்டுதலைக் குறித்தது'.' என்றும் சம்பாதி என்றால் தேடிப்பெறுதல் என்றும் செ.சொ. பேரகரமுதலி தெரிவிக்கின்றது. எனவே சம்பாதி என்பது வடமொழிச் சொல் அன்று. காண்க: செ சொ. பேரகரமுதலி. செ.ப.தமிழ்ப் பேரகராதி.*

# உலக வாழ்வியல் நெறிமுறைகளின் தொகுப்பான நீதி நூல்கள்

**கி. செயராமன் எம்.ஏ., எம்.எட்., எம்.ஃபில்.,**
*முதுநிலைத் தமிழ் மொழியாசிரியர் பணிநிறைவு.*
*கல்வியியல் தமிழ் உதவிப் பேராசிரியர்.*
*காஞ்சிபுரம்.*



*சமூக வாழ்வியல் என்பது காலத்திற்குக் காலம் ஆட்சியாளர்களுக்கு ஏற்ப மாற்றமடைந்து கொண்டே வந்திருக்கிறது. தமிழ் நாட்டின் தொன்மை முதல் இந்நாள்வரை வாழ்வியல் மாற்றங்கள் நிகழ்ந்து கொண்டிருப்பதை அறியலாம். தமிழ் இலக்கிய வரலாற்றுக் காலத்தில் நீதிநூல்கள் ஒருகாலத்தில் கோலோச்சி இருக்கின்றன. அது இந்நாள்வரை நம் வாழ்வில் கலந்து மிளிர்கின்றன. மனித அறிவின் ஆற்றலான இலக்கியம் வழி மக்களையும் ஆட்சியாளர்களையும் சென்றடைந்து மக்களின் மாண்புகளை நீதிநூல்கள் வளரச் செய்துள்ளன. தமிழ்நாட்டை நாம் அறிந்தவரை சங்ககாலத்தில் மூவேந்தர்கள் ஆட்சி செய்தனர். அவர்களை அடுத்துக் களப்பிரர்களும் பல்லவரும் சோழரும் பாண்டியரும் இசுலாமியரும் நாயக்கரும் மராட்டியரும் ஐரோப்பியரும் ஆண்டு வந்துள்ளனர். சமணம், பௌத்தம், வைணவம், சைவம், இசுலாம், கிறித்துவம் என்ற சமயங்களும் மக்களிடையே வாழ்ந்து கொண்டிருந்தன. ஆட்சி மாற்றங்கள் தமிழ் இலக்கிய வரலாற்றிலும் மாறுபட்ட கருத்துகளை மக்களிடையே வெளிப்படுத்தியுள்ளன.*

### *காலங்களின் வகைப்பாடு:*

*தமிழ் வரலாற்றுக் காலங்களைத் தொல்காப்பியர் காலம், சங்க இலக்கியக் காலம், சங்கம் மருவிய காலம் என்று வகைப்படுத்திக் கொள்ளலாம். ஏன் இத்தகைய வகைப்பாடு எனில் நம் தமிழிலக்கிய வரலாற்றில் தொல்காப்பியர் காலம்தான் நமக்குத் தொடக்கக் காலமாகக் கிடைத்திருக்கிறது. அது மட்டுமல்லாது நமக்குத் தேவையான நீதி நூல்களின் காலம் சங்க மருவிய காலத்தில் வருகிறது. இவ்விரண்டிற்கும் இடையே சங்கக் காலம் அமைந்துள்ளது. இவ்வாறு வகைப்படுத்திச் சற்று எண்ணிப் பார்த்து நம் தமிழினத்தின் பெருமைகளை ஆய்ந்து நோக்குவோம்.*

### *தொல்காப்பியக் காலம் (கி.மு. ஐந்தாம் நூற்றாண்டு):*

*நீண்ட நெடுங் காலத்திற்கு முன்பே உலகில் சிறந்த நாகரிகத்தையும் பண்பாட்டையும் படைத்தளித்த சிறப்பு, தமிழ்நாட்டிற்கு உண்டு. அயல் நாடுகளோடு கி.மு. 4000 ஆண்டுகளுக்கு முன்னரே சுமேரியா போன்ற*

நாடுகளோடு தமிழர் வணிக உறவு கொண்டிருந்துள்ளனர். கடல்வழிப் போக்குவரத்து அக்காலத்திலேயே மிகவும் சிறப்புற்றிருந்தது. வாசுகோடகாமாவுக்கு முன்னரே கடல் வழியில் கலம் செலுத்தி வாணிகம் செய்த பெருமை தமிழருக்கு உண்டு. தமிழின் தொன்மையையும் பழைமையையும் கொண்டது தொல்காப்பியம் எனும் இலக்கண நூலாகும். தொல்காப்பியம் கிமு ஐந்தாம் நூற்றாண்டு என்று வரலாற்று ஆய்வாளர்களால் அறுதியிடப்படுகிறது. இலக்கியங்கள் வழிதான் இலக்கணம் தோன்றியிருக்க வேண்டும் எனும்போது அதற்கு முன் உள்ள இலக்கியங்களை நம்மால் கண்டெடுக்க இயலவில்லை. தொல்காப்பியம் எழுத்து, சொல், பொருள் என்ற மூன்று அதிகாரங்களையும் ஒவ்வொன்றும் ஒன்பது இயல்கள் என இருபத்தேழு இயல்களையும் கொண்டது. இதில் எழுத்ததிகாரம் ஒலி எழுத்துகளை எடுத்தியம்புகிறது.


தொல்காப்பியர்

சொல்லதிகாரம், திணைப்பாகுபாடு உயர்திணை அஃறிணை அடிப்படையில் பெயர்கள் எழும் என்பதையும், மற்றும் வேற்றுமை உருபுகளின் இயக்கங்களையும் பெயர்வினை இடை உரிச் சொற்களின் இயல்பையும் வழங்கி நம் மொழியின் ஆற்றலை வெளிப்படுத்துகிறது. பொருளதிகாரம் வேறு எம்மொழியிலும் இல்லாத இலக்கணமாகும். வாழ்க்கை பொருளுடையதாக இருக்கவேண்டும் என்பதை வெளிப்படுத்துகிறது. இது அகம் புறம் என இருவகைப்படும். தமிழ் மக்களின் வாழ்வில் மனதில் எழும் அக உணர்வுகளை உளவியல் கோட்பாடுகளைச் சிறப்புற வெளிப்படுத்துகிறது. புறம் என்பது சமுதாய வாழ்க்கையாகும். இதில் வீரம் என்பது விளைநிலமாகவும் புலவர்களின் கூற்றுகள் வழிகாட்டுதல்களாகவும் சிறந்து மலர்கின்றன.

***சங்கக் காலம் (கி.பி. முதல் மூன்று நூற்றாண்டு):***

*தமிழரின் பொற்காலம் எனக் கருதப்படுவது சங்கக் காலமாகும். சங்கம் மூன்று என்பர். இதனை நமக்கு அறிமுகம் செய்வது இறையனார் களவியல் உரையாகும். இந்தச் சங்கக் காலம் என்பது கடைச் சங்கமாகும். இக்காலத்தில் எழுந்த இலக்கியம் உலகின் பழைமையான இலக்கியச் செல்வத்தின் ஒரு பகுதியாக அமைகிறது. சமயச் சார்பற்ற உயர்ந்த இலக்கியமாக இது போற்றப்படுகிறது. இக்காலத்தில் தனித் தனிச் செய்யுள்களை இயற்றுவதே வழக்கமாக இருந்துள்ளது. சங்க இலக்கியங்கள் அகம், புறம் என்ற இலக்கணக் கட்டுக்கோப்புடன் படைக்கப்பட்டவையாகத் திகழ்கிறது. இப்பாடல்கள் மன்னர்களின் முயற்சியாலும் புலவர்கள், அறிஞர்களின் உழைப்பாலும் தொகுத்துக் காக்கப்பட்டுள்ளன. பண்டைத் தமிழரின் அரசியல், சமூக, சமயப் பண்பாட்டு வரலாற்றினை அறிய விலைமதிப்பற்ற செல்வமாகச் சங்க இலக்கியங்கள் விளங்குகின்றன.*

*கடைச் சங்கக் காலத்தின் மேல் எல்லையைக் கி.மு.500 என்றும் கி.மு.300 என்றும் கூறுவோரும் உள்ளனர். மிகப் பெரும்பான்மையான இலக்கிய வரலாற்று ஆய்வாளர்கள் இக்காலத்தைக் கி.பி முதல் மூன்று நூற்றாண்டுகட்கு உரியதாகக் கொள்கின்றனர். எனவே, கி.பி.3 ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டதே சங்கக் காலம் என்பர். இதற்கு வலிமை சேர்க்க அகழ்வாராய்ச்சி முடிவுகளும், சங்க நூலில் இடம்பெறும் யவனர் பற்றிய குறிப்புகளும், தாலமி, பிளினி முதலானோர் எழுத்துகளும் உதவுகின்றன.*

*சங்க இலக்கியங்கள் பின்வந்த மன்னர்களாலும் புலவர்களாலும் அறிஞர்களாலும் தொகுக்கப்பட்டதால் தொகை நூல்களாயின. இத்தொகை நூல்கள் எட்டுத்தொகை என்றும் பத்துப்பாட்டு என்றும் நம்முன் நிற்கின்றன. இதன்வழி சங்கக் கால மக்களின் வாழ்வியல் நிலைகளை அறிவதற்குப் பெரிதும் துணை நிற்கின்றன. இவை அகம் புறம் எனத் தமிழரின் வாழ்வியல் நிலைகளை அழகுற எடுத்தியம்புகின்றன. அகம் என்பது காதலையும் புறம் என்பது வீரத்தையும் பெரிதாகக் கொண்டிருக்கின்றன. இக்காலச் சமுதாய அமைப்புகள் காதலையும் வீரத்தையும் அடிப்படை நிலையாகக் கொண்டிருப்பதை அறியமுடிகிறது. யாதும் ஊரே யாவரும் கேளிர், செல்வத்துப் பயனே ஈதல், ஈயென இரத்தல் இழிந்தன்று என்பன போலும் எண்ணற்ற வாழ்வியல் உண்மைகளுக்கு இருப்பிடமாக இவை விளங்குகின்றன.*

***சங்க மருவிய காலம் (கி.பி 300 முதல் கி.பி 600 வரை)***

*மூவேந்தர் ஆட்சி முடிவுற்றதால் பாண்டிய நாட்டைக் களப்பிரரும் தொண்டை நாட்டைப் பல்லவரும் பற்றிக்கொண்டனர். இடைப்பட்ட சோழநாடும் இவர்களுக்கு அடிமைப்பட்டுவிட்டது. கி.பி. ஐந்தாம் நூற்றாண்டு வரை*

தமிழகத்தில் இருள் சூழ்ந்தது. தமிழர் மொழியும், கலையும், பிற பண்பாட்டுக் கூறுகளும் பெரும் மாற்றத்துக்கு உள்ளாயின. பாலியும், பிராகிருதமும், வடமொழியும் செல்வாக்குப் பெற்றன. சமணமும் பௌத்தமும் பெருமை பெற்றன.



சடங்கு முறையினரான வைதிகர்களுக்கும், சமண பௌத்தர்களுக்கும் இடையே பூசல்கள் நிகழ்ந்தன. சமணமும் பௌத்தமும் கடவுள் இல்லை. வாழ்க்கை நெறிமுறைகளே கடவுளுக்கு நிகரானவை என்று ஒழுக்க முறைகளை மக்களிடையே விதைத்துப் பெருக்கின. வைதிகர்கள் கடவுள் கோட்பாடுகளை முன்வைத்துச் சடங்குளைச் செய்து வாழ்தல் சிறப்பு என்று அறிவுறுத்தினர். தமிழர்களுக்கு இவ்விரு கோட்பாடுகளும் புதியதாய் இருந்ததால் இரண்டையும் ஏற்கும் நிலைக்குத் தள்ளப்பட்டனர். இதனை அறிய இக்காலத்தில் உருவான பதினெட்டு நூல்களையே இலக்கிய வரலாற்றாசிரியர்கள் பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் என்கின்றனர். இவற்றுள் பெரும்பான்மையானவை நீதிநூல்கள். எனவே இக்காலப்பகுதியை நீதிநூல் காலம் அறநெறிக் காலம் என்பது பொருந்தும். இதே காலத்தில்தான் (கி.பி. 470) மதுரையில் வச்சிரநந்தி என்ற சமணப் பெரியவர் நான்காம் தமிழ்ச் சங்கத்தினை நிறுவினார் என்பர். இச்சங்கத்தில் பல நீதிநூல்கள் உருவாயின என்று தமிழ் இலக்கிய வரலாறு குறிப்பிடுகிறது.

**பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள்:**

பதினெண் கீழ்க்கணக்கில் அடங்கும் நூல்களின் பெயர்களை எளிதில் நினைவில் கொள்வதற்கு ஏதுவாக இடைக் காலத்துச் சான்றோர் ஒருவரால் எழுதப்பட்ட வெண்பா ஒன்று நம்மிடையே புழக்கத்தில் உள்ளது.

*நாலடி நான்மணி நானாற்பது ஐந்திணை முப்*
*பால் கடுகம் கோவை பழமொழி மா மூலம்*
*இன்னிலைய காஞ்சியுடன் ஏலாதி என்பவே*
*கைந்நிலைய ஆம்கீழ்க் கணக்கு.*

*இப்பாடல் வழங்கும் நூல்கள் 1) நாலடியார், 2) நான்மணிக்கடிகை, 3) இன்னா நாற்பது, 4) இனியவை நாற்பது, 5) கார் நாற்பது, 6) களவழி நாற்பது, 7) ஐந்திணை ஐம்பது, 8) ஐந்திணை எழுபது, 9) திணைமொழி ஐம்பது, 10)திணைமாலை நூற்று ஐம்பது, 11) திருக்குறள், 12) திரிகடுகம், 13) ஆசாரக்கோவை, 14) பழமொழி, 15) சிறுபஞ்சமூலம், 16) முதுமொழிக்காஞ்சி, 17) ஏலாதி, 18) கைந்நிலை என்பனவாகும். இவ்வெண்பாவில் ஒரு பாடவேறுபாட்டைப் புகுத்திக் கைந்நிலையின் இடத்தில் இன்னிலை என்ற நீதி நூலை வைத்து எண்ணுவோரும் உளர். எனினும் கைந்நிலையே பெரும்பாலோருக்கும் உடன்பாடானதாகக் கொள்ளப்படுகிறது.*

***பதினெண் கீழ்க்கணக்கு நூல்களின் வகைப்பாடு:***

*இப்பதினெட்டு நூல்களையும் மூன்றாக வகைப்படுத்தலாம். 1. நீதி உரைப்பவை (11 நூல்கள்), 2. காதலைச் சிறப்பிப்பவை (6 நூல்கள்), 3. போர் பற்றியது (ஒன்று) என மூன்று பிரிவுகளுள் அடக்கலாம்.*

***பதினெண் கீழ்க்கணக்கு நூல்களின் காலம்**:*

*பதினெண் கீழ்க்கணக்கு என்னும் தொகுதியில் அடங்கும் தனித்தனி நூல்களின் காலத்தை வரையறுப்பது எளிதன்று. எனினும், இவற்றை இருண்ட காலத்துக்கு உரியன என்று பொதுவாகச் சுட்டப்படுகிறது. கி.பி. 3ஆம் நூற்றாண்டின் இறுதி முதல் 6ஆம் நூற்றாண்டு வரை அமைந்துள்ள காலம் இருண்ட காலம் எனப்படுகிறது. இக்காலத்தில் தமிழகத்தில் சமயங்களின் ஆட்சியால் காதலும் வீரமும் காணாமல் போய் சமயங்களின் பிடியில் சிக்கி பண்பாட்டுச் சீரழிவுகளும் ஆண்டான் அடிமை முறைகளும் தோன்றியதால் ஏற்பட்ட குழப்பமே இருண்ட காலம் எனப்படுகிறது.*

***பதினெண் கீழ்க்கணக்கில் நிறைந்துள்ள நீதி நூல்கள்:***

*பதினெண் கீழ்க்கணக்குத் தொகுதியில் நீதி பற்றியனவே பெரும்பான்மை ஆகும். அவை 1) திருக்குறள், 2) நாலடியார், 3) பழமொழி நானூறு, 4) திரிகடுகம், 5) நான்மணிக்கடிகை, 6) சிறுபஞ்சமூலம், 7) ஏலாதி, 8) இன்னா நாற்பது, 9) இனியவை நாற்பது, 10) முதுமொழிக்காஞ்சி, 11) ஆசாரக்கோவை எனும் பதினொன்றாகும். இவை வழங்கும் வாழ்வியல் நீதிகளை அறிந்து நாம் அவற்றோடு எவ்வளவு ஒத்துப்போகிறோம் என்பதை அறிந்து கொள்ளவும் முயற்சி மேற்கொள்வோம்.*

உலக வாழ்வியலில் வாழ்க்கை அறம், பொருள், இன்பம், வீடு (இறப்பிற்குப் பின் உயிர் செல்லும் இடம்) ஆகிய நான்கு பயன்களை அடைய வேண்டியவை ஆகும். இவற்றில் அறம் என்பது நீதிநெறியோடு வாழும் முறையாகும்; பொருள் என்பது செல்வத்தையும் செல்வாக்கையும் குறிப்பிடுவதாகும்; இன்பம் என்பது இல்லற வாழ்வாகும்; வீடு என்பது வீடுபேறு மறு பிறவியில் அடையக் கூடியது என்பதையும் வெளிப்படுத்துகிறது. அறம் பொருள் இன்பம் என்பன உலக வாழ்வில் உடலுக்கான வாழ்வியல் நெறிமுறையாகவும் வீடு என்பது உயிருக்கான வாழ்வியல் நெறிமுறையாகவும் கொள்ளப்படுகிறது. இவ்வுலக வாழ்க்கையில் அடைய வேண்டிய அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்றையும் பற்றி எடுத்துரைக்கும் நூல்கள் நீதிசார்ந்த அறநூல்கள் அல்லது கீழ்க்கணக்கு என்ற பட்டியல் நூல்களாக விளங்குகின்றன. இலக்கண நூல்களாகிய தொல்காப்பியம், பன்னிரு பாட்டியல் போன்றன இவற்றுக்கான இலக்கணத்தைத் தருகின்றன.



பதினெண் கீழ்க்கணக்கு அற நூல்களுக்குத் தொல்காப்பியம் தரும் இலக்கணம்:

"வனப்பியல் தானே வகுக்குங் காலைச்
சின்மென் மொழியால் தூய பனுவலொடு
அம்மை தானே அடிநிமிர்பு இன்றே"

இதிலுள்ள `தூய பனுவலொடு என்ற அடிப்படையுடன் கூடிய பகுதி அறம் பொருள் இன்பமென்னும் மூன்றிற்கும் இலக்கணம் கூற வந்த நூல்களைப் பற்றியதாகும்.

வனப்பு அடிப்படை சார்ந்த அம்மை பற்றித் தொல்காப்பியர் வகுத்துக் கூறும் பொழுது, சிலவாகிய, மெல்லியவாகிய மொழியினால் தொகுக்கப்பெற்ற அடிகள் மிகுதியில்லாமல் வரும் செய்யுள்கள் அம்மையாகும் என்கிறார். தொல்காப்பியர் கூறும், `அம்மை' எனும் வனப்பில் பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் இடம்பெறுகின்றன. இவ்விலக்கணமே தொல்காப்பிய அடிப்படையில் நீதி நூல்களுக்கானது ஆகும். எனவே நீதி நூல்கள் அடி அளவில் மிகுதிப்படாமல் இருக்க வேண்டும் என்ற வடிவ வரையறை தொல்காப்பிய அடிப்படையில் கிடைத்ததாகும். இது கருதியே அடியளவில் சுருங்கியதாகவே நீதி நூல்களின் பாடல்கள் அமைந்திருப்பதைக் காண முடிகின்றது.



பதினெண் கீழ்க்கணக்கு அற நூல்களுக்குப் பன்னிரு பாட்டியல் தரும் இலக்கணம்:

அகவலும் கலிப்பாவும் பரிபாடலும்
பதிற்றைந்து ஆதி பதிற்றைம்பது ஈறாக
மிகத்துடன் தொகுப்பன மேற்கணக்கு எனவும்
வெள்ளைத் தொகையும் அவ்வகை எண் பெறின்
எள்ளறு கீழ்க்கணக்கு எனவும் கொளலே (346)

அடி நிமிர்வு இல்லாச் செய்யுள் தொகுதி
அறம் பொருள் இன்பம் அடுக்கி அவ்வத்
திறம்பட வருவது கீழ்க்கணக்கு ஆகும் (348)

மேற்கண்ட இரு நூற்பாக்களும் நீதிநூல்களுக்கான வடிவத்தை எடுத்துக் காட்டும் பன்னிரு பாட்டியல் என்னும் இலக்கண நூலின் கூற்றுகள் ஆகும்.

அறம், பொருள், இன்பம் என்னும் மூன்றையோ அல்லது அவற்றில் ஒன்றையோ ஐந்து அல்லது அதனினும் குறைந்த அடிகளில் வெண்பா யாப்பில் கூறுவன கீழ்க்கணக்கு நூல்களாகும். இவ்விலக்கணம் நீதி நூல்களுக்குப் பொருந்துவதாகும். இதன் காரணமாகவே வெண்பா யாப்பு நீதிநூல்களுக்கு உரியதானது.

பாடலின் அடி அளவில் ஓரடி, ஈரடி, நான்கடி என்று சுருங்கிய அளவில் நீதிக் கருத்துக்களை எடுத்துரைக்கும் போக்கு நீதி நூல்களில் காணப்படுகிறது. நீதி கூறுகையில் அது சுருங்கிய அளவில் இருக்க வேண்டும் என்று தமிழ்ப் படைப்பாளர்கள் எண்ணியுள்ளனர். மேலும் வாழ்க்கைக்குச் சட்டமாக அமையும் நீதி நூல்கள் விரிவான அடிவரையறை பெற்றனவாக இருந்தால் அதனுள் பல குழப்பங்கள் நேரும் என்பது கருதியும் இந்தச் சுருக்கமான அடி வரையறை நீதி நூல்கள் எழுதுபவர்களால் பின்பற்றப் பெற்றுள்ளது. தமிழ்ப் பரப்பில் தொடர்ந்து வந்த நீதி நூல்களிலும் இந்தச் சுருக்கமான அடிவரையறை என்ற கட்டமைப்பு பின்பற்றப் பெற்றுள்ளது. இதனால் நீதி நூல்கள் மக்களின் வாழ்க்கைக்குப் பயன்தரும் வகையில் அமைந்து இன்றளவும் மாறிப்போன தமிழரின் வாழ்முறையில் கோலோச்சி வருகின்றன. சமயங்களின் ஆட்சியும் அதனுள் நிறைந்து காணப்படுகின்றன. அதுமட்டுமல்லாது சமயங்களே இல்லையெனும் கோட்பாட்டினரும் வாழ்ந்து வருவதை அறியமுடிகிறது.

வாழ்வியலுக்குத் தேவையான அறநெறிகள் நம்முன் நிலைநிறுத்தப்படுகின்றன. இதில் மனிதன் என்பவனை இரண்டு நிலைகளில் பகுத்துப் பார்க்கின்றனர். ஒன்று உடல் தேவைகள், இரண்டு உயிர்த் தேவைகள் என்பனவாகும். உடல் நிலையில்லாதது. உயிர் நிலைபேறுடையது என்பன இங்குக் காட்சிப்படுத்தப்படுகிறது. உடலில்லாமல் உயிர் இல்லை; உயிர் இல்லாமல் உடல் இல்லை என்பதை முன்வைத்து அறநெறிகள் வகுக்கப்பட்டுள்ளன. நிலையாமையிலிருந்து நிலைத்த தன்மை என்னும் புகழை நோக்கிப் பயணிப்பதே அறநெறிகளின் வழியாக விளங்குகிறது. இனி ஒவ்வொரு நூலும் வாழ்வியலின் வழிகாட்டியாக விளங்குவதை அறிந்து அவ்வழியில் முடிந்தவரையில் பயணிப்போம்.

(தொடரும். . .)

# தமிழ்ச் சித்தரியலும் கிறிஸ்தியலும்

**பேரா. முனைவர் மோ. மைக்கேல் பாரடே**



*தமிழ்ச் சமய உலகிலும் இலக்கிய உலகிலும் ஏன் ஆய்வுலகிலும்கூட எல்லார் கவனத்தையும் ஈர்க்கின்ற ஒரு மந்திரச் சொல் "சித்தர்கள்" என்று சொல்லலாம். தமிழ்ச் சித்தர்கள் என்று சொன்னாலே, அவர்களைப் பற்றி அறிந்து கொள்ளவும், அவர்களது யோகம் முதலிய செயல்பாடுகளைப் பின்பற்றவும் மக்களிடம் அப்படி ஒரு ஆவல்! இன்னும் சித்தர்கள் கிறித்தவக் கோட்பாடுகளால் பாதிக்கப்பட்டவர்கள் - அவர்களில் பலர் கிறித்தவர்கள், ஏன் சில இசுலாமியர்களும் அவர்களில் உண்டு என்றெல்லாம் வேறு ஆய்வுலகிலும் கிறித்தவ நற்செய்தியாளர்களாலும் அடிக்கடி பேசப்படுவதால்; கிறித்தவ அன்பர்களுக்கும் சித்தர்கள் பாடல்கள் மற்றும் கருத்துக்கள் பற்றி அறிய ஒரு பெரிய நாட்டம் இருப்பது கண்கூடு. இது காலம் காலமாக, சமய உலகிலும், இலக்கிய உலகிலும் நடந்து வருகிற ஒரு தொடர் நிகழ்வாக இருந்தாலும், அண்மைக்காலங்களில் இந்த ஆர்வம் பல மடங்கு கூடியிருப்பதுபோல் தெரிகிறது. இதற்கு அண்மைக்காலமாகச் சித்தர்கள் பற்றி வெளிவரும் பல சிறிய, பெரிய நூல்களும் ஊடகப் பதிவுகளும் காரணம் என்று கூடச் சொல்லலாம். அதே நேரத்தில், இங்கு இன்னொரு நிதர்சனமான உண்மையையும் ஓர் ஆய்வாளனாகத் தெளிவுபடுத்த வேண்டியுள்ளது. எந்தப் பொருளிலும் மக்கள் ஆர்வம் மலிந்து விட்டால் (மிகுந்துவிட்டால்) அது பற்றிய உண்மை அறிவும் அதன் ஆழமும் குறைந்து விடுவது இயல்பு. பெருந்திரள் தயாரிப்பில் (mass production) தரம் (quality) குறைவது நாம் சந்தை உலகில் நாளும் காணும் காட்சிதானே? அப்படித்தான், சித்தர்களைப் பற்றிய தப்பெண்ணங்களும் அரைகுறைப் புரிதல்களும் மலிந்துவிட்டன. ஏன், சித்தர் பாடல்களில் கிறித்தவப் பொருள் காண்போரும் பல நேரம் முறையாக - முழுமையாக அவற்றை வெளிப்படுத்துவதில்லை. ஆர்வக் கோளாற்றாலும், கடினமான கருகலான சித்தர் இலக்கியங்களில் முறையான கல்வியும் ஆழமான புலமையும் இல்லாமையாலும் இவை நிகழ்கின்றன.*

**ஏன் இந்தத் தொடர்?**

*இத்தகைய நடப்பியல் சூழலில், சித்தர் இலக்கியங்களையும் கிறித்தவக் கோட்பாடுகளையும் ஒப்பிட்டு, ஓர் ஆய்வுத்தொடர் எழுத வேண்டுமென, தரமான ஆய்வுக் கட்டுரைகளைத் தவறாது - தளராது வெளியிட்டுவரும் "தமிழணங்கு" ஆய்விதழின் ஆசிரியரிடமிருந்து ஓர் அழைப்பு வந்தது. முப்பது*

*ஆண்டுகளாகச் சித்தர் இலக்கிய ஆய்வுகளிலேயே ஊறித் திளைத்துக் கண்டறிந்த உண்மைகளை மக்கள் மன்றிலும் ஆய்வரங்குகளிலும் பகிர்ந்து வருபவன் என்ற முறையில், சித்தர்களின் உண்மை முகத்தை (அகத்தையும்தான்) ஓரளவேனும் கற்போர்க்குக் காட்டவும் அவர்தம் கொள்கைகளும் கோட்பாடுகளும் கிறித்தவ இறைக் கோட்பாடுகளுக்கும் அறக்கோட்பாடுகளுக்கும் நெருங்கி வருவதை ஆதாரங்களோடு அறிவிக்கவும் இவ்வாய்ப்பு உதவிடும் என்ற நோக்கில், இப்பணியினை ஏற்றுக் கொண்டேன்.*



**எனது ஆய்வுப்பணிகள்:**

*1980களின் பிற்பகுதியில், தமிழுலகிலும் கிறித்தவ உலகிலும் சித்தர்களைப் பற்றிய ஆவலும், ஆர்வமும் பெருகி வந்த காலத்தில், பல கிறித்தவச் சான்றோர்களும் தமிழறிஞர்களும் ஊட்டிய ஊக்கத்தாலும், குடும்பச் சூழலாலும் வளர்ப்பாலும் இயல்பாகவே சித்தர்களைப் பற்றி அறியவும் ஆயவும் உள்ளத்தில் ஊறிய நாட்டத்தாலும் தமிழ்ச் சித்தர்களுக்கும் விவிலியத் திருமறைக்கும் (Bible) உள்ள தொடர்பை என் முனைவர் (பிஎச்.டி.) பட்ட ஆய்வுப் பொருளாகத் தேர்ந்து கொண்டு, சுமார் 8 ஆண்டுகள் கடினமாக உழைத்து, "தமிழ்ச் சித்தர் பாடல்களும் விவிலியமும் - கடவுட் கொள்கைகள் - ஒப்பாய்வு" என்ற பொருளில் உருவாக்கிய ஆய்வேட்டுக்காக, 1992 ஆம் ஆண்டு திருச்சி பாரதிதாசன் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்டம் பெற்றேன். சித்தர் இலக்கியங்கள் பற்றிய அடிப்படை பொதுநிலை ஆய்வுகளே அதிகம் வெளிவராத அந்நாட்களில், சித்தர் இலக்கியங்களை ஒப்பாய்வு செய்து வழங்கப்பட்ட ஆய்வேடு அது. அந்த ஆய்வேடு, 1999 இல் தென்னிந்தியத் திருச்சபை சென்னைப் பேராயத்தினரால், அன்றைய பேராயர் மாமறைத்திரு.மா. அசரியா அவர்கள் தந்த ஊக்கத்தினால் நூலாக வெளியிடப்பட்டது. அன்றைய கல்வி அமைச்சர்*

பேராசிரியர் க. அன்பழகன் அவர்கள் அந்நூலுக்கு விரிவான அணிந்துரை வழங்கியதோடு, தாமே வெளியீட்டு விழாவுக்கு வந்து நூலை வெளியிட்டும் சிறப்பித்தார். அந்நாளைய தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்களும் அந்நூலுக்கு வாழ்த்துரை வழங்கி ஊக்குவித்தார்கள்.

அந்நாள் தொடங்கி, இந்நாள்வரைக்கும் சித்தர் இலக்கியங்களைப் பல்கலைக் கழகங்கள், ஆய்வு அமைப்புகள், இலக்கிய நிகழ்வுகள், பயிற்சிப் பாசறைகள், கருத்தரங்குகள் முதலியவற்றில் உரை நிகழ்த்தியும் பல ஆய்வுக் கட்டுரைகள், நூல்களை வெளியிட்டும் பல வானொலி, தொலைக்காட்சி நிகழ்ச்சிகளில் சொற்பொழிவுகள் நிகழ்த்தியும் சித்தர் இலக்கியப் பரப்புப் பணிகளில் சுமார் 30 ஆண்டுகளுக்கும் மேலாக ஈடுபட்டு வருகிறேன். எனது மேற்பார்வையில் முனைவர் பட்ட ஆய்வு முடித்தவர்களில் மூவர் சித்தர் இலக்கியங்களையே தேர்ந்தனர். எனது முனைவர் பட்ட ஆய்வேட்டின் மறுபதிப்பும் எனது வேறு சில சித்தர் உரைத் தொகுப்பு நூல்களும் தயாராகி வருகின்றன. இது ஒரு சுருக்கமான சுய அறிமுகமே!

**சித்தர்கள் யார்?**

இனி, நமது ஆய்வுத்தொடரின் மையத் தலைப்புக்குள் நுழையும்முன், உண்மையில் சித்தர்கள் யார் என்று சுருக்கமாகத் தெளிவுபடுத்திக் கொள்ளத் தலைப்படுவோம். இன்று சிலர் தாடி வளர்த்தவர்கள் எல்லாம் சித்தர்கள் என்றும், கௌபீனம் தரித்த துறவியர் எல்லாம் சித்தர்கள் என்றும், காட்டில் இருக்கும் தவசிகள் எல்லாம் சித்தர்கள் என்றும், காது வலிக்கு மருந்து கொடுப்பவரெல்லாம் சித்தர்கள் என்றும் எண்ணிக் கொள்கிறார்கள். பட்டை பட்டையாக நெற்றியில் நீறு பூசிக்கொண்டு, புற்றுக்குள் சமாதி நிலையில் சித்தர்கள் இருப்பார்கள் என்றும் தாமே முடிவு கட்டி விடுகிறார்கள். இவை எல்லாம் ஏதோ ஒரு சில சித்தர்களுக்கு ஒன்றிரண்டு செய்திகள் பொருந்தினாலும், இவை சித்தர்கள் பற்றிய முழுமையான பார்வையைத் தருவன அல்ல. இன்னும் சொன்னால், பதினெண்சித்தர்கள் என்பார்களே, அதுகூடச் சரியில்லை. 18 என்ற ஒரு மங்கல எண்ணைப் பயன்படுத்தி, (பதினெண் புராணங்கள், பதினெண்கீழ்க்கணக்கு என்பதுபோல) ஒரு கணக்கு சொன்னார்களே தவிர, வெவ்வேறு நூல்களில் உள்ள வெவ்வேறு (சித்தர்கள் பெயர்ப்) பட்டியலைக் கூட்டினால், 18க்கும் மேலே போய்விடும். அதுபோல, எல்லாச் சித்தர்களும் ஒரே காலத்தில் ஒன்றுபோல் வாழ்ந்தவர்கள் என்றோ, அனைவரும்



ஒரே கொள்கையுடையவர்கள் என்றோ கருதுவதுகூட பிழையானது. இவற்றைப் பற்றி எல்லாம் இங்கு விரிவாக விளக்குவது, இக்கட்டுரையின் மூலத் தலைப்புக்குப் புறம்பாகவும், கட்டுரையின் அளவை நீட்டுவதாகவும் அமைந்துவிடும் எனக் கருதி, கடந்து செல்கிறேன்.

**பல்வகை - பல்நிலை விளக்கங்கள் :**

சித்தர்கள் யார் என்ற கேள்விக்குப் பல வகைகளில் விடை சொல்லலாம். டாக்டர் மு.வ., அறிஞர் தெ.பொ.மீ., அறிஞர் மு. அருணாசலம், டாக்டர் கைலாசபதி போன்ற பல அறிஞர்கள் பல விளக்கங்கள் தந்துள்ளனர். நம் மனதில் நிலைக்கக் கூடிய ஓர் அழகிய விளக்கத்தை அறிஞர் தெ.பொ. மீனாட்சிசுந்தரனார் கூறியுள்ளார். "கடவுளைக் காண முயல்பவன் பக்தன். கண்டு தெளிந்தவன் சித்தன்" என்பது அது. டாக்டர் மு. வரதராசனார் "சித்தர்கள் சாதி வேறுபாடுகளைக் கடந்தவர்கள். மூட நம்பிக்கைகளுக்கு இடமளிக்காதவர்கள். சடங்குகளோடு ஒட்டிய வழிபாடுகளைப் போற்றாதவர்கள். தத்துவ ஞானிகள், மெய்யுணர்வு பெற்றவர்கள்' எனத் தெளிவுபடுத்துகிறார். இவ்வாறே சித்து, சித்தி, சித்தம், சித்தன் போன்ற சொற்களை வைத்தும் விளக்கலாம். சித்தி நிலை எய்தியோர் · சித்தத்தை வென்றவர் என்றெல்லாம் அஃது விரியும். சித்தர்கள் தாமே தம்மைப் பற்றிச் சுய அறிமுகங்களாகச் சொல்லிக் கொண்டனவற்றையும் சுட்டலாம். "யோக சமாதி உகந்தவர் சித்தரே (திருமூலர்), "சாத்திரத்தைச் சுட்டெரிந்தால் அவனே சித்தன்" (அகத்தியர்), "சிந்தை தெளிந்திடுபவன்ஆர் அவனே சித்தன்" (வால்மீகர்), "ஏகாமல் வாசனையை அடித்தோன் சித்தர்" (சட்டைமுனி) என்பன அவற்றுள் சில.

**சித்தர் இயக்கத் தொடக்கம்:**

சித்தர்களைச் சுட்டுவதாகக் கருதக்கூடிய அறிவன், நிறை மொழி மாந்தர் போன்ற சொற்கள் சங்க இலக்கியங்களிலும் திருக்குறளிலும் ஏன் "சித்தன்" என்ற சொல்லே சிலப்பதிகாரத்திலும் பயின்று வந்தாலும், தமிழில் சித்தர் இயக்கம் என்பது உருப்பெற்றது. "திருமந்திரம்" என்ற அற்புதமான நூலைப் படைத்த திருமூலரிலிருந்துதான் என்பது பொதுவாக ஒப்புக் கொள்ளப்பட்ட உண்மை. திருமூலரைக் கி.பி. 5 (அ) 6 ஆம் நூற்றாண்டினராகக் கருதலாம். இவர்களைத் தொடர்ந்து வரும் சித்தர்களைக் காலக் கணக்கின்படி முற்காலச் சித்தர்கள், இடைக்காலச் சித்தர்கள், பிற்காலச் சித்தர்கள் எனப் பிரிப்பதுண்டு. இவர்தம் கொள்கைகளின் அடிப்படையில் சன்மார்க்க சித்தர்கள், யோக சித்தர்கள், ஞானச் சித்தர்கள், காய சித்தர்கள் என வகுப்பதுமுண்டு.

**சித்தர் இலக்கிய விளக்கம்:**

சித்தர்களைப் பற்றி நாம் அறிந்துணர்ந்து கொள்வதற்கு நமக்குக் கிடைக்கும் ஆதாரப்பூர்வமான ஒரே மூலம் அவர்களது இலக்கியங்களே. பதினெண்சித்தர்

ஞானக்கோவை போன்ற நூல்கள் வழி பிற கட்டுக்கதைகள், மரபு வழி நம்பிக்கைகள் மேல் நாம் சார்ந்து கொள்ள முடியாது. அவை ஆய்வுலகுக்கும் அறிவுலகுக்கும் அப்பாற்பட்ட நம்பிக்கைகளே. அறிவியல் ரீதியாக உறுதிப்படுத்தப்படவியலா அத்தகு செய்திகளை அடித்தளமாகக் கொண்டு ஒப்பாய்வு செய்தலும் பொருந்தாது.




***சித்தர் இலக்கிய உள்ளூறை:***

*சித்தர் இலக்கியங்களிலிருந்து அவர்கள் செயற்பாடுகளை ஐந்து வகையாகப் பகுக்கலாம். எனது ஆய்வுரைகளில் அதனால்தான் அவர்களது படைப்புகளை ஐம்பட்டை வைரம் எனக்குறிப்பதுண்டு. அவை மருத்துவம், யோகம், இரசவாதம், ஞானம் (இறைத்தத்துவங்கள்) சீர்திருத்தம் (புரட்சிச் சிந்தனைகள்) என்பனவாம். இந்த ஐந்து பொருண்மைகளும் அவர்கள் பாடல்களில் அப்படியே கலந்து குழைந்து பின்னிப்பிணைந்து இணைந்து கிடக்கும். அதுவும் குழூஉக்குறிகளாகக் குலவிக்கிடக்கும். இவற்றைப் பிரித்தறிந்து பொருள் காண்பது பயிற்சி பெற்ற ஆய்வாளர்களால்தான் முடியும். அதுவும் யோகம், மருத்துவம் முதலிய தனித்தனித் துறைகளில் ஆழங்கால்பட்டவர்க்கே ஆகும். விவரம் தெரியாமல் இக்கடலில் காலைவிட்டால் விபரீதமாகிவிடும்.*

**இத்தொடரின் நியாயம்:**

*இவ் ஆய்வுத் தொடரின் மையப்பொருளுக்குள் இன்னும் நுழையாமல், முன்னுரை விளக்கங்களாகவே சித்தர்கள் பற்றி இவ்வளவும் சொல்ல வேண்டியதாயிற்று. இன்னும் தெளிவு கருதி சொல்ல வேண்டிய செய்திகள் பலவுள, ஒன்றை மட்டும் சொல்லி, இம்முதற் கட்டுரையை நிறைவு செய்யலாம். கிறித்தவ இறைக் கோட்பாட்டோடு சித்தர்களின் பாடற் கருத்துகளை ஒப்பிடுவதற்குரிய (ஆய்வு) நியாயத்தைப் பல நிலைகளில் சொல்லலாம். தொடர்ந்து வரும் கட்டுரைகளில் அவற்றை ஒவ்வொன்றாகப் பார்க்கலாம்.*



ஒன்று மட்டும் பொதுவாகச் சொல்லித் தொடங்கலாம். பொது நிலையில், தமிழ்ச் சித்தர்களின் முக்கியக் கோட்பாடுகளாகிய சாதி மறுப்பு, உருவ வணக்க மறுப்பு, ஆகம வேத சாத்திர மறுப்பு, குரு வழியும் குருவாகவும் இறைவனை உணர்தல், பொய்க் குருக்களையும் பொய்ச் சமயங்களையும் கடிந்து இனம் காட்டல், அன்பு நெறியே இறை நெறி என உணர்தல் போன்றவை கிறித்தவத்தோடு முழுதும் பொருந்துவன. இனி, சிறப்பு நிலையில் கோட்பாடுகளாகவும் தனிப்பாடல்கள் நிலையிலும் ஒன்றுபடுவன பல உள. அவையே தொடரும் இயல்களில் விரிக்கப்படும்.

ஆக, சித்தர் இலக்கிய - விவிலியக் கோட்பாடுகளின் ஒப்பாய்வாக அமையும் இத்தொடரில், அறிமுக விளக்கங்களாக மேற்சுட்டியன அமைந்து, தொடரின் உள்ளுறை பற்றிய தெளிவான புரிதலுக்கு வழி வகுக்கும் என்பது எம் துணிபு.

தொடரும் . . .

---

## திருக்குறள்

***பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்***

***இறைவன் அடிசேரா தார்*** ***(குறள் எண்.10)***

***குறள் விளக்கம்:*** *இறைவனுடைய திருவடிகளை பொருந்தி நினைக்கின்றவர் பிறவியாகிய பெரிய கடலைக் கடக்க முடியும். மற்றவர் கடக்க முடியாது.*



# சேலம் மாவட்டத் தொல்லியல் தடயங்கள்

**ஆறகளூர் பொன்.வெங்கடேசன் M.A., Mphil., D.pharm**
*தலைவர், சேலம் வரலாற்று ஆய்வு மையம்*



*பழங்காலத்தில் மனிதன் காடுகளிலும் மலைப் பகுதிகளிலும் வாழ்ந்தபோது வேட்டையாடப் பல்வேறு கற்களால் ஆன கருவிகளைப் பயன்படுத்தினான். அவை பழைய கற்காலக் கருவிகள், புதிய கற்காலக் கருவிகள் என அழைக்கப்படுகின்றன. இந்தக் கருவிகள் மூலம் வரலாற்றுக்கு முற்பட்ட மனிதனின் வாழ்வியல் முறைகளை நாம் அறிந்து கொள்ள முடிகிறது. மனிதன் இறந்த பின் என்ன நடக்கும் என்ற கேள்வி மனிதனுள் ஆதிகாலம் முதலே எழுந்து வந்துள்ளது. ஆரம்பத்தில் இறந்த மனிதனை அதே இடத்தில் விட்டு விட்டு உணவைத் தேடி அடுத்தப் பகுதிக்கு இடம் பெயர்ந்தான். நிலையாக விவசாயம் செய்யத் துவங்கிய பின் ஒரே இடத்தில் தங்கி மனிதன் வாழத் துவங்கினான்.*

*மனிதன் ஒரே இடத்தில் தங்கி வாழத் துவங்கியபின் தன் கூட்டத்தில் இறந்த முக்கியமான தலைவனுக்கு நினைவுச் சின்னம் அமைக்கத் துவங்கினான். நால்வகை நிலங்களுக்கும் ஏற்ப நினைவுச் சின்னங்கள் அமைக்கப்பட்டன. மலைப் பகுதியிலும் நிலப் பகுதியிலும் வெவ்வேறு வகையில் அடையாளச் சின்னங்கள் அமைக்கப்பட்டன. இவை ஈமச் சின்னங்கள் என அழைக்கப்பட்டன. உலகம் முழுக்க இத்தகைய ஈமச் சின்னங்கள் காணப்படுகின்றன.*

*கல்பதுக்கை, கற்குவை, கற்திட்டை, ஈமப்பேழை, குத்துக்கல், முதுமக்கள்தாழி, தொப்பிக்கல், தாய்த்தெய்வம், நடுகற்கள் போன்றவை இத்தகைய ஈமச் சின்னங்களின் வகைகள் ஆகும். மலையும் மலை சார்ந்த பகுதிகளில் கல்பதுக்கை, கற்குவை, கல்திட்டை, குத்துக்கல் போன்ற ஈமச் சின்னங்கள் அமைக்கப்பட்டன. நிலப் பகுதியில் முதுமக்கள் தாழி, குத்துக்கல் போன்றவை அமைக்கப்பட்டன. இக் கட்டுரையில் சேலம் மாவட்டத்தில் உள்ள சில தொல்லியல் தடயங்களைக் காண்போம்.*

***மல்லூரர் பகுதி தொல்லியல் தடயங்கள்:***

*எருமைநாயக்கன் பாளையத்தில் உள்ள பொன்சொரி மலையில் சேலம் வரலாற்று ஆய்வு மையத்தினர் கள ஆய்வை மேற்கொண்டனர். அப்போது அம்மலையில் 2250 அடி உயரத்தில் தாமரைப்பாழி என்ற சுனைக்கு அருகே ஓர் கல்திட்டை கண்டுபிடிக்கப்பட்டது. இதன் காலம் 2,500 ஆண்டுகளுக்கு*

முற்பட்டதாகும். இது சங்கக் காலத்துக்கு முந்தைய பெருங் கற்காலத்தைச் சார்ந்ததாகும்.

அக்காலத்தில் இறந்தவர்களைப் பூமியில் குழிதோண்டிப் புதைத்துவிட்டு நான்கு புறமும் பலகை கற்கள் வைத்து மேற்புறமும் ஒரு பலகைக் கல்லால் மூடி புறாக் கூண்டு போன்ற முறையில் அமைத்துவிடுவர். அதில் அவர்கள் பயன்படுத்திய சில பொருட்களையும் வைத்து அடக்கம் செய்வர். இம்முறைக்கு கல்திட்டை என்று பெயர். இங்குக் காணப்படும் இந்தக் கல்திட்டை ஒரே பலகைக் கல்லால் அமைக்கப்படாமல் சிற்சிலத் துண்டுக் கற்களைக் கொண்டு அமைக்கப் பட்டுள்ளது. வடபுறம் உள்ள பக்கவாட்டுக் கல்லும் மூடும் கல்லும் சிதைக்கப் பட்டுள்ளது. மூடுகற்கள் ஐந்து துண்டு கற்களால் மூடப்பட்டுள்ளன.

பழங்காலத்தில் இறந்தவர்களைப் புதைக்க கல்பதுக்கை, கல்திட்டை, கல்வட்டம், ஈமப்பேழை, கல்குவை, முதுமக்கள்தாழி போன்ற முறைகளைப் பயன்படுத்தி உள்ளனர். இதே போன்ற கல்திட்டை ஒன்று சில ஆண்டுகளுக்கு முன் மேட்டூர் அணையின் நீர்த்தேக்கப் பகுதியில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.



அம்மன் மலையில் இப்போது கண்டுபிடிக்கப்பட்ட கல்திட்டைக்கு அருகே இருபது அடி தொலைவில் சிதைக்கப்பட்ட நிலையில் ஒரு கற்குவையும் கண்டுபிடிக்கப் பட்டுள்ளது. இப்பகுதியில் இருந்தவர்கள் இதன் அருமை தெரியாமல் இதைச் சிதைத்திருக்கக் கூடும். பெருங் கற்காலத்தில் இறந்தவர்களைப் பூமியில் புதைத்து மூடிவிட்டு அந்த இடத்தை அடையாளப்படுத்தக் கூம்பு வடிவில் கற்களை அடுக்கி வைப்பர். இந்த முறைக்குக் கற்குவை என்று பெயர். இதே போன்ற கற்குவை ஏற்காடு பகோடா பாயிண்ட் என்ற இடத்தில் காணப்படுகிறது.

*அம்மன் மலையின் அடிவாரத்திலிருந்து 150 அடி உயரத்தில் ஒரு சுனையின் அருகே மேற்புறமுள்ள பாறையில் திருக்குறளில் அதிகாரம் 26ல் கொல்லாமையை வலியுறுத்தும் திருக்குறள் ஒன்று 6 வரிகளில் வெட்டப்பட்டுள்ளது...*

*1.தன்னூன்*

*2.பெருக்கற்*

*3.குத் தான்பி*

*4.றி தூணுன்*

*5.பானெங்ங*

*6.ன மாளு மருள்*

*இந்த திருக்குறள் பொறிப்பின் காலம் 16 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாக இருக்கலாம்.*

***ஏற்காடு பகுதி தொல்லியல் எச்சங்கள்:***

*2,500 ஆண்டுகளுக்கு முன் மனிதன் தன் கூட்டத்தில் இறந்தவருக்காக அமைக்கப்பட்ட நினைவுச் சின்னம் கற்குவையாகும். இவை பிரமிடு வடிவில் ஒன்றின் மீது ஒன்றாய்ச் செவ்வக வடிவக் கற்களால் உருவாக்கப்பட்டுள்ளன. இவை எகிப்தில் உள்ள பிரமிடுகளைப் போன்று, ஆனால் அளவில் சிறியதாக உள்ளன. ஏற்காடு வெள்ளக்கடையிலிருந்து மோட்டூர் போகும் வழியில் மேலூர் கிராமத்தில் கல்திட்டையுடன் இணைந்த ஒரு கற்குவை கண்டறியப்பட்டது. மோட்டூர் கிராமம் சேட்டுப்பட்டி மலைப் பகுதியில் ஒரு கற்குவையும் குத்துக் கல்லும் உள்ளன. இந்தக் குத்துக் கல்லின் உயரம் 60 செ.மீ. மோட்டூர் கிராமத்தின் மலைப் பகுதியில் ராமர் கோயில் என்ற இடத்தில் பத்து கற்குவைகள் காணப்படுகின்றன. இவற்றில் 7 பெரிதாகவும் 3 சிறிதாகவும் உள்ளன.*

*மிகப் பெரிய கற்குவை ஒன்று கல்திட்டையுடன் இணைந்து இங்கு கண்டறியப்பட்டது. இதற்கு ஒரு வாயிலும் அதன் உள்ளே புதிய கற்காலக் கருவிகளும் காணப்படுகின்றன. இதன் உயரம் 300செ.மீ, அகலம் 200 செ.மீ, முன்புற வாயில் 100 செ.மீ ஆகும். இதை இங்குள்ள மக்கள் ராமர் கோயில் என அழைக்கின்றனர். ஆண்டுக்கு ஒருமுறை இங்கு வந்து பொங்கல் வைத்து வழிபடுகின்றனர். இந்த இடத்திலிருந்து மலை உச்சியில் 3 கி.மீ உயரத்தில் தங்கமலை என்ற இடத்தில் 7 கற்குவைகள் வரிசையாக அமைக்கப்பட்டுள்ளன. இவற்றின் உயரம் 150 செ.மீ.; சுற்றளவு 295 செ.மீ ஆகும்.*

**கல்திட்டைகள் :**

*இறந்தவர்களின் நினைவிடங்களில் கல்திட்டைகள் அமைக்கப்பட்டன. இவை மூன்று புறமும் பலகைக் கற்கள் வைக்கப்பட்டு மேலே ஒரு பலகைக் கல்லால் மூடப்பட்டு உள்ளன. இதற்கு முன்புறம் ஒரு வாசல் அமைக்கப்பட்டுள்ளது. இதன் உள்ளே புதிய கற்காலக் கருவிகள் உள்ளன. மக்கள் இதை வழிபடுகின்றனர். ஆத்தூர் வட்டம் கெராங்காடு, பெத்தநாயக்கன் பாளையம் வட்டம், சேவூர் கிராமங்களில் இந்த கல்திட்டைகள் பாண்டியன் வீடு, குள்ளபாண்டி வீடு, சின்ன பாண்டி வீடு என அழைக்கப்படுகிறன. ஆனால் ஏற்காடு பகுதியில் இவை ராமர் வீடு எனவும், திருவண்ணாமலைப் பகுதியில் பாண்டவர் வீடு எனவும் அந்தந்தப் பகுதி மக்களால் அழைக்கப்படுகிறன. பழங்காலத்தில் குள்ள மனிதர்கள் இதில் வசித்ததாகவும் இவர்கள் நம்புகின்றனர். ஏற்காடு பகுதியில் கல்திட்டைகள் கற்குவையுடன் இணைந்தே காணப்படுகிறன.*



**பெத்தநாயக்கன் பாளையம் தொல்லியல் எச்சங்கள்:**

*பெரிய கல்வராயன் மலையில் உள்ள ஆத்தூர் வட்டம், கீழ்நாடு ஊராட்சி கெராங்காடு கிராமம், பெத்தநாயக்கன் பாளையம் வட்டம், கீழ்நாடு ஊராட்சி அடியனூர், சேம்பூர், போன்ற கிராமங்களில் சேலம் வரலாற்று ஆய்வு மையம் மேற்புற கள ஆய்வை மேற்கொண்டது. அப்போது அக் கிராமங்களில் 21 கல்திட்டைகள், 10 கற்குவைகள், புதிய கற்காலக் கருவிகள் மற்றும் ஏராளமான குத்துக் கற்கள் கண்டுபிடிக்கப்பட்டன. இதில் 15 கல்திட்டைகள் ஓரளவு நல்ல*

*நிலையிலும் 6 கல்திட்டைகள் சிதைந்த நிலையிலும் காணப்படுகின்றன. கற்குவைகளில் 6 நல்ல நிலையிலும் 4 சிதைந்த நிலையிலும் காணப்படுகின்றன.*

***கல்திட்டைகள் :***

*இக் கிராமங்களில் காணப்படும் கல்திட்டைகள் மூன்று புறமும் துண்டுக் கற்களால் அடுக்கப்பட்டு மேற்புறம் ஒரு பலகைக் கல்லால் மூடப்பட்டுள்ளன. முன்புறம் மூடப்படாமல் உள்ளது. இதன் உயரம் நான்கரை அடி; நீளம் 12 அடி; அகலம் 6 அடியாகவும் உள்ளது. மக்கள் வசிப்பிடங்களில் உள்ள கல்திட்டைகளின் உள்ளே புதிய கற்காலக் கருவிகளும், அந்தக் கருவிகளை வழுவழுப்பாக்கப் பயன்பட்ட பந்து வடிவ உருண்டைக் கல்லும், கூர் தீட்டப் பயன்படுத்திய தேய்ப்புக் கல்லும் காணப்படுகிறன. கல்திட்டையின் உள்ளே விநாயகர் சிலையும் உள்ளது, இது பிற்காலத்தில் வைக்கப்பட்டு இருக்கலாம். மக்கள் வசிப்பிடம் இல்லாத மலைக் குன்றில் உள்ள கல்திட்டைகளில் புதிய கற்காலக் கருவிகளோ விநாயகர் உருவமோ காணப்படவில்லை.*

*புதிய கற்காலத்தில் வாழ்ந்த மக்கள் தங்கள் குழுவில் முக்கியமான தலைவர்கள், வீரர்கள் இறந்தபோது அவர்கள் நினைவாக இது போன்ற கல்திட்டைகள் அமைக்கப்பட்டன. அவை மாண்டவர் வீடு என அழைக்கப்பட்டன. அது பிற்காலத்தில் மருவி பாண்டவர் வீடு என அழைக்கப்பட்டன. இங்குள்ள மக்களால் இவை கல்பாண்டி வீடு, சின்ன பாண்டி வீடு, குள்ள பாண்டி வீடு என அழைக்கப்படுகிறன. இங்கு இரண்டடி உயரமுள்ள குள்ள மனிதர்கள் பழங்காலத்தில் வாழ்ந்ததாகவும் அவர்களின் வீடுதான் இது என இங்குள்ள மக்கள் நம்புகின்றனர்.*

***கற்குவை :***

*இறந்தவர்களை அடக்கம் செய்த இடத்துக்கு அருகே கற்குவைகள் அமைக்கப்பட்டன. இவை பிரமிடு போன்ற அமைப்பில் கூம்பு வடிவத்தில் காணப்படுகிறது. கொராங்காடு கிராமத்தின் அருகே உள்ள மலைக் குன்றில் அமைந்துள்ள பழமையான அவ்வையார் கோயில் அருகிலுள்ள பகுதிகளில் 10க்கும் மேற்பட்ட கற்குவைகள் காணப்படுகின்றன. செவ்வக வடிவமான நன்கு வெட்டப்பட்ட கற்கள் ஒன்றின் மீது ஒன்றாக வட்ட வடிவில் அடுக்கப்பட்டு கூம்பு வடிவில் அமைக்கப்பட்டுள்ளன. இவை சிறிய வடிவிலான பிரமிடுகளைப் போல் காட்சியளிக்கிறன. இதன் உச்சியில் செங்குத்தாய் ஒரு பலகைக்கல் வைக்கப்பட்டுள்ளது. இக் கற்குவையின் அடிப்பகுதியின் சுற்றளவு 12 அடி, நடுப்பகுதி 9 அடி, மேற்பகுதி 6 அடியாக உள்ளது. மேலே உள்ள தனிப் பலகைக் கல் முக்கால் அடியாக உள்ளது. இன்றும் கூட கிணறு வெட்டும் தொழில் செய்யும் போயர் சமூகத்தின் ஒரு பிரிவினர் இறந்தவர் நினைவிடங்களில் கற்குவை அமைக்கும் பழக்கத்தைக் கொண்டுள்ளனர்.*

**குத்துக் கற்கள் :**

இறந்தவர்கள் நினைவாகவும், அவர்களை அடக்கம் செய்த இடங்களை அடையாளப்படுத்தவும் குத்துக் கற்கள் வைக்கப்பட்டன. இவை ஒரே கல்லில் கூம்புக் கல்லாகவோ அல்லது பலகைக் கல்லாகவோ வைக்கப்பட்டன. கெராங்காடு கிராமத்திலிருந்து குன்றின் மீதுள்ள அவ்வையார் கோவிலுக்குச் செல்லும் மலைப் பாதையில் ஏராளமான குத்துக் கற்கள் காணப்படுகின்றன. இவை ஒரே ஒரு பலகைக் கல்லால் அமைக்கப்பட்டுள்ளன. இந்த மலைப் பாதையில் செருப்புப் போட்டுக்கொண்டு நடக்க ஊர் மக்கள் அனுமதிப்பதில்லை. அவர்கள் இந்தக் குன்றைப் புனிதமாகக் கருதுகின்றனர்.



**புதிய கற்காலக் கருவிகள் :**

கெராங்காடு, சேம்பூர், அடியனூர் போன்ற மலைக் கிராமங்களில் மக்கள் குடியிருப்புக்கு அருகே உள்ள கல்திட்டைகளின் உள்ளே புதிய கற்காலக் கருவிகள் காணப்படுகின்றன. இவை வேறு வேறு வடிவங்களில் அமைந்துள்ள கைக் கோடாரிகள் ஆகும். இதன் ஒரு முனை கூராகவும் மறுமுனை தட்டையாகவும் உள்ளது. கூரான முனை குத்திக் கிழிக்கவும் தட்டையான முனை வெட்டவும் பயன்பட்டுள்ளது. இந்தக் கருவிகள் எளிமைமையாய், பயன்படுத்துவதற்கு ஏற்ப, கைக்கு அடக்கமாய்ச் செய்யப்பட்டுள்ளன. ஒரு அடி உயரமுள்ள கற்கோடாரிகளும் இங்குக் காணப்படுவது சிறப்பான ஒன்றாகும்.

பழைய கற்காலக் கருவிகள் கரடு முரடாக இருக்கும். இந்தப் புதிய கற்காலக் கருவிகள் வழுவழுப்பாக உள்ளன. இதை வழுவழுப்பாக மாற்றப் பயன்பட்ட கல்பந்துகளும், கூராக்கப் பயன்பட்ட தேய்ப்புக் கல்லும் கல்திட்டையின் உள்ளே காணப்படுகின்றன.

**அவ்வையாரம்மன் கோயில் :**

பெரிய கல்வராயன் மலையில் கீழ்நாடு என இப்போது அழைக்கப்படும் பகுதி 15ஆம் நூற்றாண்டில் கள்ளர் நாடு என அழைக்கப்பட்டுள்ளது. கெராங்காடு என்ற ஊர் கருங்காடு என அழைக்கப்பட்டுள்ளது. இங்கு இரண்டு அவ்வையார் கோயில்கள் உள்ளன. கெராங்காடு ஊருக்கு அருகே புதிய கோயிலும் 2 கி.மீ . தொலைவில் உள்ள குன்றில் பாழடைந்த நிலை யில் 15 ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்ட சிதைந்த நிலையில் ஓர் அவ்வையார் கோயிலும் உள்ளன. பழைய கோயிலில் இப்போது அவ்வையார் சிலை இல்லை. பல வருடங்களுக்கு முன் இங்குள்ள சிலைகளைத் திருடர்கள் திருடிச் செல்ல முயன்றதால் ஊர் மக்கள் பாதுகாப்பான ஓர் இடத்தில் வைத்துள்ளனர். கார்த்திகை தீபம் அன்று மட்டும் அவ்வையார் சிலையை இங்குக் கொண்டு வந்து வைத்து வழிபடுகின்றனர். கார்த்திகை தீபம் அன்று மலை உச்சியில் உள்ள கொப்பரை மூலம் மகாதீபம் ஏற்றி வழிபடுகின்றனர். திருவண்ணாமலை தீபத்தைப் பார்த்த பின்னரே இங்கு தீபம் ஏற்றுவது நடைமுறையாக உள்ளது. சேலம் அருகே உத்தம சோழபுரம் என்ற ஊரில் உள்ள கரபுரநாதர் கோயிலில் பழமையான ஓர் அவ்வையார் சிலை உள்ளது. இந்த இரண்டு அவ்வையாருக்கும் ஏதேனும் தொடர்பு உண்டா என்பது ஆய்வுக்குரியது.



**இசைக் கற்கள் :**

மலைமீதுள்ள அவ்வையார் கோயிலில் உள்ள சிலைகளைத் திருடர்கள் திருட முயன்றபோது அவர்கள் பாறையாய் மாறிவிட்டதாய் ஊர்மக்கள் சொல்கிறார்கள். அந்தப் பாறைகளை ஆய்வு செய்தபோது அவை இசைக் கற்கள் எனத் தெரிய வந்தது. அந்தப் பாறைகளைத் தட்டும்போது உலோகத்தைத் தட்டுவது போல் ஒலி வருகிறது. சேலம் மாவட்டத்தில் தாரமங்கலம், பேளூர், அயோத்தியாப்பட்டினம் போன்ற ஊர்களில் உள்ள கோயில்களில் இசைத் தூண்கள் உள்ளன. அவற்றைத் தட்டினால் இனிமையான ஓசை வரும். அது போன்ற இசைத் தூண்களை உருவாக்க இது போன்ற பாறைகள் பயன்பட்டன.

**கல்வெட்டுகள்:**

*கொராங்காடு கிராமத்தில் இரண்டு கல்வெட்டுகள் காணப்படுகின்றன. மலைமீதுள்ள அவ்வையாரம்மன் கோயிலில் ஒன்று உள்ளது. அது படிக்க முடியாதபடி சிதைந்து காணப்படுகிறது. மற்றொன்று ஊரின் மத்தியில் உள்ள மாரியம்மன் கோயில் அருகே பலகைக் கல்லில் வெட்டப்பட்டுள்ளது. கல்வெட்டின் மேற்புறம் பெருமாளின் சின்னமான சங்கு, சக்கரம் காணப்படுகிறது. மொத்தம் 35 வரிகளில் கல்வெட்டு வெட்டப்பட்டுள்ளது.*

*இது 15 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகும். இதில் விய வருடம் வைகாசி மாதம் 27ந்தேதி முதல் அவ்வையாரம்மைக்குப் பூசைகள் செய்யக் கள்ளர் நாட்டை (கீழ்நாட்டை)ச் சேர்ந்த கருங்காடு (கொராங்காடு) என்ற பகுதியைக் கரையப்பக் கவுண்டர், அன்னியப்பக் கவுண்டர், ஆகிய இரு தலைவர்களும் நாலுகரை நாட்டாரும் சேர்ந்து பூதானமாகக் கொடுத்துள்ளனர். பூதானம் என்பது ஒரு கிராமத்தையே தானமாகக் கொடுப்பது ஆகும். இத்தானத்தை நயினா கவுண்ட நம்பி என்பவர் நடத்தி வரவேண்டும். மேலும் பூசையும் கட்டளையும் நடத்தி வருபவர்கள் உடல் நலமும் செல்வமும் பெறுவார்கள். இத் தானத்தைச் சூரியன் சந்திரன் உள்ள வரை நடத்தி வர வேண்டும். இத் தானத்துக்கு அழிவு செய்பவர்கள் கங்கைக் கரையிலே காராம் பசுவைக் கொன்ற பாவத்தை அடைவார்கள் எனவும் கல்வெட்டுக் குறிப்பிடுகிறது. இப் பகுதி கள்ளர் நாடு எனக் கல்வெட்டில் குறிப்பிடப்படுவதால் அருகே வணிக வழிப் பாதை ஒன்று இருந்திருக்க வேண்டும்.*

**வாழப்பாடி வட்டத் தொல்லியல் தடயங்கள்:**

*சேலம் மாவட்டம், வாழப்பாடி அடுத்த பெலாப்பாடி மலைக் கிராமத்தில் பழமையான கோவில் வளாகத்தில் அதிக அளவில், 6,000 ஆண்டுக் காலப் பழைமையான புதிய கற்காலக் கருவிகளை வைத்துப் பாதுகாத்து அப்பகுதி மக்கள் வழிபட்டு வருவதை சேலம் வரலாற்று ஆய்வு மையத்தினர் கண்டறிந்தனர்.*

*சேலம் மாவட்டம் வாழப்பாடி அடுத்த அருநூற்றுமலை மற்றும் கல்வராயன்மலைக் கிராமங்கள், 6,000 ஆண்டுகளுக்கு முன்னரே பழங்கால மக்களின் வாழிடமாக இருந்ததை அப் பகுதியில் கிடைத்து வரும் புதிய கற்காலக் கருவிகள் மற்றும் கல்வெட்டுகள், நடுகற்கள் ஆகியவை உறுதிப்படுத்தி வருகின்றன.*

*ஏற்கனவே, கல்வராயன்மலை, சேம்பூர், அத்திரிப்பட்டி, கிராங்காடு, குன்னூார் மற்றும் அருநூற்றுமலை பள்ளிக்காடு, சிறுமலை உள்ளிட்ட கிராமத்தில் புதிய கற்காலக் கருவிகளும், இறந்தவர்களின் நினைவாக அமைக்கப்படும் ஈமச்*

சின்னங்களான கற்திட்டைகள் மற்றும் கற்குவைகளும் சேலம் வரலாற்று ஆய்வு மையத்தினரால் கண்டறியப்பட்டன.

அந்தக் கிராமத்திலுள்ள பழமையான ஈஸ்வரன் கோவிலில், இரு நந்திச் சிலைகள், ஒரு பிள்ளையார் சிலை மற்றும் நூற்றுக்கும் அதிகமான கைக் கோடாரி வகையைச் சேர்ந்த புதிய கற்காலக் கருவிகளையும் வைத்துப் பாதுகாத்து வருவதுடன், அவற்றை இன்றளவிலும் வழிபட்டு வருகின்றனர்.

பழங்காலத்தில் நாடோடியாக வாழ்ந்த மனிதன் ஆற்றங்கரை மற்றும் நீர்நிலைகள் அருகில் உள்ள மலைப்பாங்கான இடங்களில் நிலையாகத் தங்க ஆரம்பித்தான். ஆரம்பக் கட்டத்தில் வேட்டையாடப் பயன்படுத்திய ஒழுங்கற்ற நிலையிலிருந்த கற்கருவிகளைத் தேய்த்து வழவழப்பாக மெருகூட்டிப் பயன்படுத்தினான். அக்காலமே புதிய கற்காலம் எனவும், அந்தக் காலகட்டத்தில் மனிதன் பயன்படுத்திய கருவிகளைப் புதிய கற்காலக் கருவிகள் எனவும் வரலாற்று அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர்.

சேலம் மாவட்டம் வாழப்பாடி அடுத்த அருநூற்றுமலை மற்றும் கல்வராயன் மலைப் பகுதியில் கி.மு.2000 ஆண்டு வரை புதிய கற்காலம் இருந்திருக்கலாம் எனத் தோன்றுகிறது. ஏராளமான கிராமங்களில் நீர்நிலைகளில் சிதறிக்கிடந்த பழங்கால மனிதர்கள் பயன்படுத்தி புதிய கற்கால கருவிகளைச் சேகரித்து கோவில்களில் வைத்து மக்கள் வழிபட்டு வருகின்றனர்.

வாழப்பாடி அடுத்த அருநூற்றுமலை ஆலடிப்பட்டி ஊராட்சிக்கு உட்பட்ட பெலாப்பாடி மலைக் கிராமத்தில் பழமையான ஈஸ்வரன் கோவிலில் வைத்து மக்கள் வழிபட்டு வரும் புதிய கற்காலக் கருவிகள் சிறிய கைக் கோடாரிகள் வகையைச் சேர்ந்ததாகும். ஒருபுறம் கூராகவும் மற்றொருபுறம் தட்டையாகவும் உள்ளது. கூரான முனை குத்திக் கிழிக்கவும் தட்டையான பகுதி வெட்டவும் பயன்படுத்தப்பட்டிருக்கலாம்.

**சிறுமலை கல்வெட்டு:**

சேலம் மாவட்டம் வாழப்பாடி வட்டம் அருநூற்று மலைப் பகுதியில் உள்ள சிறுமலை என்ற மலைக் கிராமத்தில் கி.பி.1202 ஆம் ஆண்டு, சோழர் கால நடுகல் (வீரக்கல்) மாரியம்மன் கோயில் அருகே உள்ள வயலிலிருந்து கண்டறியப்பட்டு சேலம் வரலாற்று ஆய்வு மையத்தால் ஆய்வு செய்யப்பட்டது.

கி.பி.1202 ஆம் ஆண்டு சோழ மன்னர் மூன்றாம் குலோத்துங்கனின் 24 ஆம் ஆட்சி ஆண்டில் இந்தக் கல்வெட்டு வெட்டப்பட்டுள்ளது. மொத்தம் 14 வரிகளில் எழுத்துக்கள் உள்ளன. கல்வெட்டில் காணப்படும் சிறுமலை என்ற பெயரிலேயே 814 ஆண்டுகள் கழித்தும் இந்த ஊர் சிறுமலை என்ற அதே பெயரில் இன்றும் அழைக்கப்படுகிறது.12 ஆம் நூற்றாண்டில் சோழர்களின் கீழ் ஒரு குறுநில நாடாக

ஆறகழூரைத் தலைநகராகக் கொண்டு மகதை நாடு இருந்தது. இந்த மகதை நாட்டின் எல்லைக்குள் சிறுமலை கிராமம் இருந்துள்ளது.



மகதை நாடாழ்வான் என்பவர் அப்போது மகதை நாட்டின் மன்னராக இருந்துள்ளார். இவரின் பிரதிநிதியாக சேலஞ்சுற்றி என்பவர் சேலம் பகுதிக்குப் பொறுப்பு வகித்துள்ளார். மகதை நாட்டுச் சிறுமலைப் பகுதியில் இருந்த தோட்டப் படப்பை என்ற பகுதியைச் சேர்ந்த அரணமுடையான் புயிலன் சேந்தனான கேசஞ் என்பவன் எதிரிகள் தன் நாட்டை அழிக்கப் படையெடுத்து வந்தபோது அந்த படையைத் தடுத்து நிறுத்தினான். அப்போரில் அவனும் இறந்து விட்டான். தன் நாட்டுக்காக உயிரைக் கொடுத்த அந்த வீரனுக்காக ஒரு நடுகல் வைக்கப்பட்டு அதில் இந்தச் செய்தி வெட்டப்பட்டுள்ளது. இந்தக் கல்வெட்டின் மேற்புறம் சற்றே சிதைந்துள்ளது. இதில் வீரனின் உருவம் ஏதும் காணப்படவில்லை. அவன் போரிட்ட எதிரி யார் என்றும் இதில் குறிப்பிடப்படவில்லை.

ஆறகழூர் பகுதியில் மகதை நாடாழ்வான் என அழைக்கப்படும் பொன்பரப்பிய வாணகோவரையனின் பல கல்வெட்டுக்கள் உள்ளன. சிறுமலையில் இந்த நடுகல் கண்டுபிடிக்கப்பட்டதின் மூலம் 12 ஆம் நூற்றாண்டில் மகதை நாட்டின் எல்லை கல்வராயன் மலை வரை பரவி இருந்ததை அறிய முடிகிறது. சிறுமலையில் உள்ள சிவன் கோயிலில் சில கல்வெட்டுகள் காணப்படுகின்றன. ஆனால் அவை கோயில் திருப்பணியின் போது கோயிலின் அடிப் பகுதியில் வைத்துக் கட்டப்பட்டு விட்டதால் சில வரிகள் மட்டுமே பூமிக்கு வெளியே தெரிகின்றன.

*இங்குள்ள பிள்ளையார் கோயிலில் சுமார் ஆராயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட பத்துக்கும் மேற்பட்ட புதிய கற்காலக் கருவிகள் கிடைத்துள்ளன. இதன் மூலம் 6 ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே புதிய கற்காலத்தில் இது மக்களின் வாழ்விடப் பகுதியாய் இருந்தது என்பது உறுதியாகிறது.*

***தலைவாசல் வட்டாரத் தொல்லியல் தடயங்கள்:***

*சேலம் வரலாற்று ஆய்வு மையத்தைச் சேர்ந்த ஆறகழூர் பொன். வெங்கடேசன், தலைவாசல் அருகே கல்வராயன் மலையில் உள்ள மேல்பாச்சேரி, தாழ்பாச்சேரி கிராமங்களில் ஆய்வுகள் மேற்கொண்டார். அப்போது அங்குள்ள சிறு விநாயகர் கோயிலில் 50க்கும் மேற்பட்ட புதிய கற்காலக் கருவிகள் கண்டறியப்பட்டன. இக் கருவிகள் மூலம் முன்பு அங்கு வாழ்ந்த மக்களின் வாழ்க்கை நிலையை அறிய முடிகிறது.*

***புதிய கற்கால மக்கள்:***

*ஆதிமனிதன் காடுகளில் வாழ்ந்தபோது வேட்டையாட, கற்களால் ஆன கருவிகளையும் உறுதியான மரக் குச்சிகளையும் பயன்படுத்தி வந்தான். தொல் பழங்காலமானது பழைய கற்காலம், நுண் கற்காலம், புதிய கற்காலம், பெருங் கற்காலம் என வகைப்படுத்தப்பட்டுள்ளது. இங்குக் கிடைத்த கற்கருவிகள் புதிய கற்கால வகையைச் சேர்ந்தது. புதிய கற்காலமானது ஆறாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டதாகக் கருதப்படுகிறது. பழைய கற்காலத்தில் வழக்கிலிருந்த கரடு முரடான கற்கருவிகளை விடுத்து நன்கு தேய்த்து வழவழப்பாக்கி மெருகேற்றிய கற்கருவிகளைப் பயன்படுத்திய காலத்தைப் புதிய கற்காலம் என அழைக்கின்றனர். இக்காலத்தில்தான் மனித இன வாழ்க்கையில் பல முன்னேற்றங்கள் ஏற்பட்டன. புதிய கற்கால மக்கள் தமக்கென ஒரு குடியிருப்புப் பகுதியை உருவாக்கிக்கொண்டு ஓரிடத்தில் நிலையாக வாழத் தலைப்பட்டனர்.*

*இவர்கள் குழி வீடுகளிலும் வட்டம் மற்றும் நீள்வட்ட வடிவிலான புல்வேய்ந்த கூரை வீடுகளிலும் வசித்தனர் என்பதைப் பையம் பள்ளி (வேலூர் மாவட்டம்) மற்றும் மயிலாடும்பாறை (கிருஷ்ணகிரி) அகழ்வாய்வுகள் தெளிவாக்குகின்றன. இவர்கள்தான் முதன் முதலில் வேளாண்மை செய்ய ஆரம்பித்தனர் எனக் கருதலாம். பையம் பள்ளி அகழ்வாய்வில் மக்கிய நிலையில் கொள்ளு, கேழ்வரகு, பச்சைப் பயிறு ஆகிய தானியங்கள் கிடைத்துள்ளன. வேட்டையில் நிறைய விலங்குகள் கிடைக்க வேண்டும் என்பதற்காகக் கற்காலக் கருவிகளை நட்டு வழிபட்டுள்ளனர். இந்த வழக்கம் இன்று வரை தொடர்கிறது. இக்கால மனிதர்கள்தான் முதன்முதலில் இறந்தவர்களைத் தன் வீடுகளுக்கு அருகே அடக்கம் செய்யும் முறையை ஆரம்பித்தனர். கல்வராயன் மலை அறுநூற்று மலையில் வாழும் மக்களிடம் இன்றும் இந்த வழக்கம் தொடர்கிறது. இறந்தவர்களை இவர்கள் தெய்வமாகவும் வணங்குகின்றனர்.*

**புதிய கற்காலக் கருவிகள்:**

*நன்கு வழவழப்பாகத் தேய்க்கப்பட்ட புதிய கற்காலக் கருவிகளை வேட்டையாடவும் கொட்டைகளை நசுக்கவும், தானியங்களை அரைக்கவும் பயன்படுத்தியுள்ளனர். கைக் கோடாரிகள், அம்மிக்கல், குழவிக்கல், கூர்முனைக் கருவிகள், கத்திகள், வெட்டுக் கருவிகள், கிழிப்பான்கள், தேய்ப்புக் கற்கள் போன்ற வடிவங்களில் இவை கிடைக்கின்றன.*

*மேல்பாச்சேரி கிராமத்தில் ஒரு விநாயகர் சிலை அருகே 18 புதிய கற்காலக் கருவிகள் காணப்படுகின்றன. இதில் 11 நல்ல நிலையிலும் 7 சற்றுச் சிதைந்த நிலையிலும் உள்ளன. இவற்றின் நீளம் 15 செ.மீ; அகலம் 10 செ.மீ ஆகும். 33 செ.மீ நீளமுடைய குழவிக்கல் ஒன்றும் காணப்படுகிறது. இக்கருவிகள் இன்றும் இக்கிராம மக்களின் வழிபாட்டில் உள்ளன.*

*வேட்டையாடும் வழக்கம் குறைந்து விட்டாலும் திருவிழாக் காலங்களில் இக் கருவிகளைச் சுத்தம் செய்து வழிபடுகிறார்கள். தாழ்பாச்சேரி கிராமத்தில் ஒரு மரத்தின் அடியில் உள்ள விநாயகர் சிலை அருகே முப்பதுக்கும் மேற்பட்ட புதிய கற்காலக் கருவிகள் உள்ளன. விநாயகர் சிலைகள் பிற்காலத்தில் இங்கு வைக்கப்பட்டிருக்கலாம். இக்கிராமங்களின் அருகே உள்ள ஓடைகளிலும் விளைநிலங்களிலும் கற்கருவிகள் கிடைப்பதாக கிராம மக்கள் கூறுகின்றனர். மேல்பாச்சேரி கிராமத்தில் பழமை வாய்ந்த துர்க்கை, காளி சிற்பங்கள் ஒரே பலகைக் கல்லில் புடைப்பாகச் செதுக்கப்பட்டு வழிபாட்டில் உள்ளன.*

---

## திருக்குறள்

**வான்நின்று உலகம் வழங்கி வருதலால்**

**தான்அமிழ்தம் என்றுணரற் பாற்று** **(குறள் எண்.11)**

**குறள் விளக்கம்:** *மழை பெய்ய உலகம் வாழ்ந்து வருவதால், மழையானது உலகத்து வாழும் உயிர்களுக்கு அமிழ்தம் என்று உணரத்தக்கதாகு.*

# தமிழ் வளர்ச்சி நிலைகள்



***துரை தனபாலன்***

*எழுத்தாளர், பட்டிவீரன்பட்டி*

***முன்னுரை:***

*'கல்தோன்றி மண் தோன்றாக் காலத்தே வாளொடு முன் தோன்றிய மூத்த குடி' என்ற பெருமைக்குரிய நம் இனமும், 'உலக முதன்மொழி' என்று புகழப்படும் நம் தமிழ் மொழியும் பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்பே சீரும் சிறப்புமாக இருந்தவை. ஆயினும் தொல்காப்பியர் காலத்திலேயே தமிழ் மொழியில் வடமொழிக் கலப்பு இருந்தது என்பதற்கு, 'வடசொற் கிளவி வடவெழுத்து ஒரீஇ எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே' என்ற தொல்காப்பிய வரிகளே சான்றாகும். அவ்வாறு பிறமொழிக் கலப்பால் காலந்தோறும் தமிழ் எவ்வாறு நலிவுறுகிறது என்பதை இக்கட்டுரையில் காண்போம்.*

***முற்கால நிலை:***

*ஆரியர்களின் சூழ்ச்சிகளால் தமிழ் மொழியில் ஏராளமான வட சொற்கள் காலப்போக்கில் கலந்து, 19ஆம் நூற்றாண்டில் தமிழும் சமற்கிருதமும் அதிகம் கலந்த மணிப்பிரவாள நடை என்றொரு வழக்கு மக்களிடையே ஓங்கியது. அந்த நிலை நீடித்திருந்தால், நம் அருந்தமிழ் மொழி முற்றிலும் சிதைந்து என்றோ மலையாளம் அல்லது தெலுங்கு போல வேறு ஒரு மொழியாக மாறியிருக்கும்.*

*ஆனால், தமிழ்த்தாய் செய்த தவப்பயனாய், காரிருளில் உதித்த கதிரவனாக அப்போது தோன்றிய 'தமிழ்க் கடல்' மறைமலையடிகள் அவர்கள் 'தனித்தமிழ் இயக்கம்' என ஓர் இயக்கம் தொடங்கி, வடசொற்களை அறவே தவிர்த்து, தனித்தமிழ்ச் சொற்களை மட்டுமே எழுதுதற்கும், பேசுதற்கும் பயன்படுத்த வேண்டும் என்று முழங்கி, மயங்கிக் கிடந்த தமிழர்களின் மருளை நீக்கித் தமிழுக்குப் புத்துயிர் ஊட்டினார். தேவநேயப் பாவாணர், பெருஞ்சித்திரனார், திரு.வி.க., பாரதிதாசன் போன்ற தமிழ்ச் சான்றோர்கள் அந்த இயக்கத்தின் விழுதுகளாக விளங்கி, மணிப்பிரவாள நடையை முற்றிலும் ஒழித்து, தனித்தமிழை மீட்டெடுத்தனர்.*

***இடைக்கால நிலை:***

*பின்பு காலமும் மாறி, காட்சிகளும் மாற, 1938, 1960களில் இந்திய ஒன்றிய ஆட்சியில் இருந்தோர் இந்தி மொழியை நம்மீது திணிக்க, தந்தை பெரியார்,*

பேரறிஞர் அண்ணா, சி.பா. ஆதித்தனார், ம.பொ.சி. போன்ற தலைவர்கள் முன்னின்று இந்தி எதிர்ப்புப் போரை வழிநடத்தி, மாணவர்களும் மக்கள் பலரும் தம் இன்னுயிரை ஈகை செய்து, இந்தித் திணிப்பைத் தடுத்து வெற்றிக்கொடி நாட்டினர்.

**தற்கால நிலை:**

இவ்வளவு பாடுபட்டு, காலகாலமாகக் காத்து வந்த நம் தாய்மொழியில் இப்போது ஆங்கிலம் ஆதிக்கம் செலுத்தி, தமிழை அழிவின் பாதைக்கு மறுபடியும் இழுத்துச் செல்கிறது. தமிழர்கள் தமிழையும் ஆங்கிலத்தையும் கலந்து 'தமிங்கிலம்' பேசித் திரிகிறார்கள். இருநூறு ஆண்டுகள் நம்மை அடிமைகளாக்கி வைத்திருந்தவர்களின் மொழி, இன்று நமது மொழிக்கு அடிமைத் தளை பூட்டி அழகு பார்க்கும் அவலநிலையே இங்கு நிலவுகிறது.

தமிழ்வழிக் கல்வி நடைமுறையில் இருந்த காலத்தில், தமிழர்கள் ஆங்கில மொழியை நன்கு கற்று, ஆங்கிலத்தில் அழகாகப் பேசும் ஆற்றல் பெற்றிருந்தார்கள். ஆனால், 'மெட்ரிகுலேசன் பள்ளி'களுக்கு, என்று அனுமதி அளித்தார்களோ, அன்றே தமிழின் நலிவும் ஆரம்பித்து விட்டது. அம்மா, அப்பா, அறம்செய விரும்பு என்று அழகாக, அறிவாகப் படித்த நம் பிள்ளைகள், 'A ஃபார் ஆப்பிள்' என்றும், 'ரெய்ன் கோ அவே' என்றும், நம் நில அமைப்புக்கு ஒவ்வாத பாடங்களையும், பாடல்களையும், பொருளறியாமல், இருள் மனனம் செய்யத் தொடங்கினார்கள். அதன் விளைவாக, ஆங்கிலவழிக் கல்வியில் பெரும்பான்மையான மாணவர்கள் படித்து, தாய்மொழியில் தவறின்றிப் பேசத் தெரியாமல், ஆங்கிலத்திலும் அரைகுறை அறிவோடு தடுமாறி, இரண்டுங்கெட்டானாக ஒரு தலைமுறையே இன்று உருவாகியுள்ளது.

மேலும், பெரும்பான்மையான தமிழாசிரியர்களே மாணவர்களுக்குச் சரியான தமிழ் உச்சரிப்புப் பயிற்சி அளிக்காமலும், பிழையின்றித் தமிழை எழுதும் பயிற்சி அளிக்காமலும் இருக்கிறார்கள். இத்தகைய சூழலில் கல்வி பயிலும் மாணவர்களின் திறன் எவ்வாறு வளரும்? ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையுமா?

மேலும், மக்களுடன் நெருங்கிய தொடர்பில் இருக்கும் ஊடகங்களான தொலைக்காட்சி, திரைப்படங்கள் எல்லாமே தமிங்கிலத்தைப் பரப்புகின்ற தரமற்ற நிலையிலேயே செயல்படுகின்றன. இவற்றின் விளைவாக, அனைத்துத் தரப்பு மக்களும் தமிழைத் தவறாக உச்சரித்துப் பிழையாகப் பேசி வருகிறார்கள். அவர்கள் தமிழில் எழுதும் பாங்கு அதனினும் கேடாக உள்ளது; ஏராளமான எழுத்துப் பிழைகள், சந்திப் பிழைகள், இலக்கணப் பிழைகள், என்று பிழைகள் மலிந்த தமிழில்தான் பலரும் எழுதுகிறார்கள்.

நிலைமை ஒருபுறம் இவ்வாறிருக்க, மறுபுறம் தமிழ்மொழியின் மீது பற்றுக் கொண்ட தகைமையாளர்கள் தமிழ்ப் பேரவைகளும், சங்கங்களும் அமைத்து எவ்வாறு செயல்படுகிறார்கள் என்பதைக் காண்போம்.

இம்மாதிரியான அரசியல் கலப்பற்ற தமிழ் அமைப்புகள் நாடெங்கும், உலகெங்கும் பரவியிருப்பது நமக்கு மகிழ்ச்சி அளிக்கக்கூடிய செய்தியே என்றாலும், ஒற்றுமையின் உயர்வினை அவற்றின் அமைப்பாளர்கள் எந்த அளவிற்கு உணர்ந்து செயல்படுகிறார்கள் என்பது கேள்விக்குறியே. உலகத் தமிழ்ச் சங்கம் என்ற பெயரிலேயே பல அமைப்புகள் உள்ளன; உலகத் தமிழ் என்று தொடங்கி, இன்னும் பல பெயர்களில் ஏராளமான அமைப்புகள் பரவிக் கிடக்கின்றன. இவர்கள் அனைவருமே தனித்தனியாகச் செயல்படுவதால், ஒருமித்த குரலாகத் தமிழரின் குரல் ஓங்கி ஒலிக்க இயலாமல் போய்விடுகின்றது என்ற ஆழ்ந்த உண்மையை, அதன் வன்மையை அவர்கள் இன்னும் அறியவில்லை என்பதே வருந்துதற்குரிய செய்தியாகும்.

**தமிழ் மொழியை மீட்டெடுத்தல்:**

தாழ்ந்து வரும் தாய்மொழியின் தகைமையினைத் தாங்கி நின்று, ஓங்கு புகழ் அடைவதற்கு ஒன்றல்ல பல வழிகள் காண்பது நம் கடனாகும்; காணாமை மடமாகும்.

• முதலில் ஆங்கிலவழிக் கல்வி முறையை அறவே அகற்றி விட்டு, தமிழ்வழிக் கல்வியைத் தமிழகமெங்கும் கொண்டு வர வேண்டும். முதலாம் வகுப்பில் இருந்து ஐந்தாம் வகுப்பு வரை தமிழிலேயே அனைத்துப் பாடங்களும் கற்பிக்கப்பட வேண்டும். ஐந்தாம் வகுப்பில் ஆங்கிலம் ஒரு மொழிப்பாடமாக மட்டும் அறிமுகப்படுத்தப்பட வேண்டும். (அறிஞர் அண்ணா முதல் அப்துல் கலாம் ஐயா வரை எத்தனையோ மேதைகள் அவ்வாறு படித்து வந்தவர்கள்தான்.) அதன்பின் கல்லூரியில், ஆங்கில வழியில் அறிவியல் பாடங்களைக் கற்பிக்கலாம். அதுவுமே, அறிவியல் நூல்கள் அத்தனையும் தமிழில் மொழிபெயர்க்கப்படும் வரையே. இளங்கலைப் பட்டம் வாங்கும் வரை, தமிழ் கட்டாயமாக ஒரு பாடமாக இருக்க வேண்டும். இப்போது போல, தமிழே படிக்காமல் எந்த மாணவரும் பட்டம் பெறலாம் என்ற இழிநிலை ஒழிக்கப்பட வேண்டும்.

- பிரெஞ்சு மொழியை அவர்கள் அரசாங்கமே பிறமொழிக் கலப்பிலிருந்து மீட்டெடுத்தது போல, நாமும் முதலில் தமிழில் கலந்துள்ள பிறமொழிச் சொற்களைச் சேகரித்து ஒரு விரிவான பட்டியல் இட வேண்டும். பின்பு அவற்றிற்கு மாற்றான, ஈடான நற்றமிழ்ச் சொற்களைத் தேர்ந்தெடுத்து, நடைமுறைக்குக் கொண்டுவர வேண்டும். எழுதப்படும் எல்லா நூல்களையும் தனித்தமிழ் ஆய்வுக்குழு ஒன்றின் தணிக்கைக்குப் பின்பே அச்சேற்ற அனுமதிக்க வேண்டும். அதன் பின்னும் பிறமொழி கலந்து எழுதுவோர்க்குத் தண்டத் தொகை விதிக்க வேண்டும்.

- மக்கள் தொடர்பில் உள்ள ஊடகங்கள் அத்தனையும் தனித்தமிழ்த் தணிக்கைக்கு உட்பட வேண்டும். விதிமுறைகளை மீறுவோர் மீது தண்டத் தொகை விதிப்பது உள்ளிட்ட பலவிதமான நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும்.

- தமிழ் ஆசிரியர்களுக்குச் சிறப்புப் பயிற்சிகள் அளிக்கப்பட வேண்டும். ஆரம்பப் பள்ளியில் இருந்தே மாணவர்களின் தமிழ் உச்சரிப்பில் தனிக் கவனம் செலுத்தப்பட வேண்டும்.

- உலகெங்கும் உள்ள தமிழ் அமைப்புகளுக்கு இடையே ஓர் ஒருங்கிணைப்பும், ஒரு தலைமை அமைப்பும் உருவாக்கி, அதன் கீழ் உலகத் தமிழர்கள் அனைவரும் ஒற்றுமையாகச் செயல்பட வேண்டும்.

- வாடிகன் என்ற ஊரில் இருந்து கொண்டு, எப்படிப் போப் ஆண்டவர் உலகிலுள்ள கத்தோலிக்கக் கிறித்துவர்கள் அனைவரையும் வழிநடத்துகிறாரோ, அதைப்போல, தமிழாய்ந்த சான்றோர் ஒருவரின் தலைமையில் உலகத்தமிழர்கள் அனைவரும் ஒன்றுபட வேண்டும். அவ்வாறு ஒன்றுபட்டால்தான், உலக அளவில் தமிழர்களின் ஆற்றல் அளப்பரியதாகி, தமிழர்க்கு எதிராக நடக்கும் எல்லா அவலங்களையும் நாம் தடுத்திடலாம்.

- இவற்றையெல்லாம் நாம் சீருறத் திட்டமிட்டுச் செய்து முடிப்பின், நம் தமிழ்மொழியின் புகழ் உலகெங்கும் ஓங்கி, உலகப் பொதுமறை கண்ட நம் மொழி, உலகப் பொதுமொழியாகவும் உயர்வு பெறும் நிலையை அடையும் என்பது உறுதி.

ஒருங்கிணைந்து தமிழ் வளர்ப்போம்! உலகை வெல்வோம்!

# சமணமும் பழங்குடி வணிகர்களும்

**திவ்யகுமாரி கண்ணம்மா**

*ஐயை உலகத் தமிழ் மகளிர் மன்றம்.*



*சங்க காலம் தொட்டே தமிழகப் பழங்குடிகள் கடல் தாண்டி வணிகம் செய்து வந்துள்ளனர் என்பதனை எவராலும் மறுக்க இயலாது. இதனை ஆழமாகப் பார்க்கும் முன் சங்க கால தமிழகம் எப்படி இருந்தது என்பதை நாம் அறிந்துகொள்வோம்.*

*பண்டைக் காலத்தில் பாண்டிய நாட்டின் வடபகுதியில் வழங்கப்பட்ட தமிழைச் செந்தமிழ் எனவும் அந்நிலம் தவிர்த்து ஏனைய பன்னிரு நிலங்களில் வழங்கப்பட்டுவந்த தமிழைக் கொடுந்தமிழ் (வட்டார மொழி) என்றும் வகைப்படுத்தினர். அப்பன்னிரு நிலங்களும் கொடுந்தமிழ் நாடு என்றழைக்கப்பட்டன.*

*"தென்பாண்டி, குட்டம், குடம், கற்கா, வேண், பூழி, பன்றி, அருவா, அதன் வடக்கு, நன்றாய*

*சீதம், மலாடு, புனல் நாடு, செந்தமிழ்சேர்*

*ஏதம் இல் பன்னிரு நாட்டு எண்''*

*- என்று தொல்காப்பியத்திற்கு உரையெழுதிய*

*இளம்பூரணர், அப்பன்னிரு நாடுகளை இவ்வாறு குறிப்பிடுகிறார்.*

*1. தென்பாண்டி நாடு*

*2. குட்ட நாடு*

*3. குட நாடு*

*4. கற்கா நாடு*

*5. வேணாடு*

*6. பூழி நாடு*

*7. பன்றி நாடு*

*8. அருவா நாடு*

*9. அருவாவடதலை நாடு*

*10. சீத நாடு*

*11. மலையமான் நாடு*

*12. புனல் நாடு*

*இதில் அருவாளர் வாழ்ந்த நாடு அருவா நாடு. கேரளத்தில் தமிழர்களை பாண்டி என்று நையாண்டி செய்வது போல் தெலுங்கர் அருவர் அல்லது அரவர்கள் என்று தமிழர்களை அழைப்பதுண்டு. காரணம் வட ஆற்காடு செங்கல்பட்டு ஆகிய இடங்கள் அடங்கியது அருவா நாடு. அதற்கும் வடக்கே இருந்தது அருவாவடதலை நாடு அதற்கும் வடக்கே தெலுங்கர் நாடு. அவர்களுக்குத் தெரிந்த தமிழர்கள் என்றால் அரவர்கள் (அருவா நாடு) .*

*இந்நாடுகளே பிற்காலத்தில் தொண்டை நாடாக மாறியது.*



*சங்க காலம் தொட்டு தமிழ்நாடு முழுவதும் உள் நாட்டு வணிகம் நடைபெற்றுள்ளது. காசு கொடுத்து பொருள் வாங்கும் காலத்திற்கு முன்பே பொருள் கொடுத்து பொருள் வாங்கும் மரபை உலகிற்கு அறிமுகப்படுத்தியவர்கள் தமிழர்களே.*

*இன்றும் கூட நாம் மாத சம்பளம் என்று குறிப்பிடுவதுண்டு. முற்காலத்தில் நாற்று நடுவதற்கோ களை பறிப்பதற்கோ அல்லது ஏதேனும் செயல் செய்வதற்கு எதிர்பார்ப்பாகவோ காசு புழக்கத்தில் இல்லாத காலம் ஆதலால் " அரிசியும் உப்பையும் " ஊதியமாக வாங்கி செல்வார்கள்.*

*சம்பா என்றால் அரிசி , அளம் என்றால் உப்பு.*

சம்பா+அளம் , இதுவே சம்பளம் என மாறியது.

அரிசியும் உப்பும் எந்த அளவுக்கு முக்கியமான ஒரு பொருளாக அக்காலத்தில் கருதப்பட்டது என்பதனை,

"குறும்பல்லூர் நெடுஞ்சோணாட்டு
வெள்ளை உப்பின் கொள்ளை சாற்றி,
நெல்லொடு வந்த வல்வாய்ப் பஃறி" என்று பட்டினப்பாலை (30)

கூறுகிறது.

குறும்பலூரில் சோழ நாட்டில், உப்பங்கழியின் கரையில் வெள்ளை உப்பின் விலையைக் கூறி பண்டமாற்றாகப் பெற்ற நெல்லுடன் வந்த வலிய படகுகள், என காவிரிப்பூம்பட்டினத்தின் செழிப்பையும் வணிகம் நடைபெற்ற நடைமுறை பற்றியும் பட்டினப்பாலை ஆவணப்படுத்துகிறது.

மிகப் பழங்காலம் தொட்டே சீனம், யவனர்கள் (கிரேக்கர்கள் ரோமர்கள்), சுமேரியா தாய்லாந்து பாபிலோனிய எகிப்து பாலஸ்தீனம் கிழக்கிந்தியத் தீவுகள் போன்ற பல இடங்களுக்குத் தமிழர்கள் வணிகம் செய்தவர்களாகவே இருந்திருக்கின்றன.

காஞ்சிபுரம் என்றாலே இன்றும் கூட பட்டு தான். சீனாவிலிருந்த பட்டு காஞ்சிபுரம் வந்த பிறகு பல இடங்களுக்குப் பிரிந்து சென்று இருக்க வேண்டும். தமிழ்நாடு உலகின் பல்வேறு இடங்களுக்குச் சரக்குகளைப் பிரித்து அனுப்பும் இடமாக அதாவது விநியோக மையமாகச் செயல்பட்டு இருக்கிறது.

"சுள்ளியம் பேரியாற்று வெண்ணுரை கலங்க
யவனர் தந்த வினைமாண் நன்கலம்
பொன்னொடு வந்து கறியொடு பெயரும்
வளம்கெழு முசிறி''
என்று குறிப்பிடுகிறது.

யவனர்கள் தொழிலால் மாட்சிமைப்பட்ட நல்ல கப்பல்களிலே, பொன்னுடன் வந்து மிளகுப்பொதிகளுடன் திரும்பிச் செல்வார்கள் என்று இப்பாட்டுக் குறிக்கிறது.

இவ்வாறு மேலை நாடுகளின் பொன்னோடு ஒப்பிடும் அளவிற்கு நம் நாட்டு மிளகும் அரிசியும் விலைமதிப்பானதாக இருந்தது. இதற்கு முக்கிய காரணம் வகுத்தவர்கள் நகரத்தார்கள்.

நகரத்தார் வரலாற்றோடு பின்னிப்பிணைந்தது வணிகத்தில் மட்டுமல்ல தெய்வ தொண்டிலும் தான். செட்டியார்கள் பல கோயில்களுக்கும் பல மடங்களுக்கும்

கொடை தந்து பல காலமாகத் தொண்டாற்றி வந்தவர்கள். இவர்களது தெய்வத்தொண்டிற்கு அளவுகோல் என்பதே இல்லை.

இன்றளவும் நாம் பார்க்கும் பல கோயில்கள் தேவாலயங்கள் இவர்களது கைங்கரியம் இல்லாமல் இருக்காது.

உலகமெங்கும் சென்ற இவர்கள் தன் தடங்களை ஆங்காங்கே விட்டும் பல உலக எச்சங்களைத் தமிழ்நாட்டுக்கும் கொண்டுவந்தவர்களாகவே இருக்கின்றனர். ஒருவேளை செல்வம் ஈட்ட கடல் கடந்து செல்லும் தமிழர்கள் தன் குடும்பத்தோடும் தன் மனைவியரோடும் சென்றிருந்தால் உலகம் எங்கும் தமிழர்களே இன்று உலகக் குடிகளாக இருப்பார்கள்.




அயல் நாட்டுக்குச் செல்லும் பொழுது பெண்களை அழைத்துச் செல்லும் பழக்கம் இல்லாமல் இருந்ததை, பொருள் தேடிச் சென்ற தலைவன் பிரிவை எண்ணி வருந்தும் தலைவி எனப் பல அகநானூறு பாடல்கள் மூலம் நம்மால் புரிந்து கொள்ள முடிகிறது.

சைவ சித்தாந்த மலர்ச்சிக்கு முன்பு தமிழகத்தில் ஓங்கி வளர்ந்த மதங்களான ஆசீவகமும் சமணமும் தமிழ்நாடு எங்கும் தழைத்தோங்கி இருந்தது. இந்த காலத்தில் நகரத்தார்கள் சமணர்களாகவும் ஆசீர்வகவர்களாகவும் இருந்தனர்.

எடுத்துக்காட்டாக இன்றும் கூட பல செட்டியார்களின் வீட்டில் தோரண வாசலில் கஜலட்சுமியையும் காண முடியும். ஆதிகாலம் தொட்டே யானை என்பது ஆசீவகத்தின் சின்னமாகும்.இது ஞானத்தையும் செழிப்பையும் குறிக்கும்.

இரண்டு யானைக்கும் நடுவில் இருக்கும் பெண் தெய்வம் சக்தி நிலையைக் குறிக்கும். தாய் தெய்வ வழிபாட்டின் தோன்றலாகவும் இது இருக்கலாம். பல காலங்களாகப் பரிணமித்த உருவமே இன்று இருக்கும் கஜலட்சுமி ஆகும் ( காலத்தால் பழைய சின்னத்தில் யானையின் தும்பிக்கையில் இருக்கும் கும்பத்திலிருந்து தண்ணீர் விழுவது போல இருக்கும் இன்று வரும் பல சின்னங்களின் யானையின் கும்பத்திலிருந்து பொற்காசுகள் விழுவதைப் போல மாற்றப்பட்டு இருக்கிறது). இது ஒரு காலத்தில் முத்திரையாகவும் பயன்படுத்தப்பட்டிருக்கலாம். பல காசுகளில் இந்த சின்னம் உண்டு. இன்று இதுவே பரிமாணம் கொண்டு லட்சுமி கையில் ஒரு காசுகள் கொண்ட பானை எடுத்து வருவது போல பிரேம் போட்ட படத்தை வீட்டு வாசலில் தொங்கவிடுவதைக் காணலாம்.

இந்த கஜலட்சுமி சின்னம் சமணம் பௌத்தம் ஆசீவகம் சாக்தம் (சக்தி மார்க்கம் ) மற்றும் சில மதங்களுக்கு பொதுவாக இருக்கிறது. பௌத்தர்கள் இதைப் புத்தரின் தாய் என்றும் சைனர்கள் இதைத் திரிபுரசுந்தரி என்றும் இந்துக்கள் இதை கஜலட்சுமி என்றும் அவரவர் விருப்பம் போல் கூறுகின்றனர்.ஆனால் நம் சித்தர்கள் பத்து வயது உடைய பெண்ணை வாலை என்றும் அவளைச் சக்தி வடிவமாகக் கருதி வணங்கியதை

"வாலையின் அட்சரம் மூன்றாகும் அதை
வாய் கொண்டு சொல்பவர் யார் காணும்
மேல் ஒன்றும் கீழ் ஒன்றும் மத்திமமுங்கூட்டி
விரைந்து பாரடி ஞானப் பெண்ணே!"

என வாலைக் கும்மி நூலில்18 சித்தர்களில் ஒருவரான கொங்கணார் பாடுகிறார். இன்று எந்த அம்மன் கோயில்களுக்குச் சென்றாலும் இந்த கஜலட்சுமியின் உருவத்தைப் பார்க்க முடியும்.

ஒரு மதம் மற்ற மதத்தை வீழ்த்தும்போது அந்த மதத்தில் இருக்கும் சில நல்ல கருத்துக்களை தன் மதத்திற்காக தன்னுடையது என்று பல புராணக் கதைகள் கூறி பயன்படுத்திக் கொள்வது வரலாறு. மேரு மலையைக் கடைந்த போது வந்தவள் லட்சுமி என்றும் புராணக்கதை உண்டு. ஆசீவகத்தையும் சமணத்தையும் பௌத்த மலர்ச்சியின் போது அசோகர் அடியோடு வேரறுத்தாலும் கூட உருவங்களும் கதைகளும் மாறி வேறு பெயரால் மக்கள் வழிபாட்டுக்கு உட்பட்டு அவை ஒன்றோடு ஒன்றாக பிணைந்து நிற்கிறது.

காலங்கள் ஓட ஆசீவகம் சமணத்தோடு ஒன்றிவிட்ட பல காலங்களுக்குப் பிறகு சைவ மலர்ச்சி காலத்தில் சமணர்களைக் கொல்வது என்பது சைவ நெறியில் சரி என்றே பார்க்கப்பட்டிருந்தது .

ஆசீவகத்தின் சின்னம் இன்றும் கூட தமிழகத்தின் பல பெண்களின் தாலியில் தாலி காசாகவும் இறைவழிபாட்டின் முக்கிய அம்சமான காமாட்சி விளக்கிலும் நிலைத்து நிற்கிறது. சில பிரிவு செட்டியார் பெண்களின் தாலியில் இடது வலப்புறம் கட்டாயமாக இரு லட்சுமி காசு இருப்பதைக் காண முடியும். இலங்கைத் தமிழர்களிடமும் இது போன்ற தாலி உண்டு.



இன்று சுத்த சைவமாக இருக்கும் நகரத்தார்களின் தொன்மையை ஆராய்ந்தால் சமண தொடர்பு இருப்பதை நம்மால் காண முடிகிறது. ஒரு வர்த்தகம் நடைபெற முக்கியமான ஒன்று அரசின் ஒத்துழைப்பு. அரசை எதிர்த்துக்கொண்டு எந்த ஒரு வணிகமும் செய்வது என்பது நடவாத செயல். என்பதாலேயே நகரத்தார்கள் அரசு எந்த மதம் ஆதரிக்கிறதோ அதையே ஏற்று வணிகம் நடத்த வேண்டி இருந்தது. "அரசர் எவ்வழியோ மக்கள் அவ்வழி" எனும் பழமொழியை நாம் நினைவு கூற வேண்டும்.

குறிப்பாகத் தொண்டை மண்டலத்தைக் கைப்பற்றிய ஆதொண்டைமான் சைவத்தை ஆதரித்தமையால் வணிகப் பழங்குடிகள் சமணத்தை விடுத்து சைவத்தை ஏற்றும் கோவில்களுக்குத் தொண்டுகள் செய்தும் பொருள் தந்தும் வணிகம் செய்ய வேண்டிய கட்டாயம் இருந்தது. தொண்டை மண்டல வரலாறு கூறும் பொன் விளைந்த களத்தூர் கதையை வைத்து அக்காலச் சூழலைத் தெரிந்து கொள்ள முடியும். பூர்வீகத்தில் இந்த ஊர் களத்தூர் என அழைக்கப்பட்டது. புழல் குறும்ப அரசர்களின் இரண்டாவது கோட்டையாக இது இருந்தது.

ஆதொண்டைமானால் குறும்பர்கள் போரில் தோற்கடிக்கப்பட்ட பின் கொண்டைக்கட்டி வெள்ளாழர்கள் தொண்டை நாட்டு மண்டலதிபதியாக பொறுப்பேற்று இந்தக் கோட்டையைச் செயல்படுத்தி வந்தனர். இவர்கள் அரசுக்கு அடக்கமாகத் தேயத்தை நடத்தி வந்தனர். அந்நாட்களில் இவ் ஊரில் சோதிடர் ஒருவர் இருந்தார். அவர் திருவாலீஸ்வரர் தேவஸ்தானத்தில் ஜோதிடம் சொல்லிப் பிழைப்பை நடத்தி வந்தார். வரும் சம்பாத்தியம் எதற்கும் போதாமையால் களத்தூரில் இருக்கும் வெள்ளாழ பிரபுவிடம் ஒரு காணி நிலம் வாங்கி அதைப் பயிரிட நினைத்து இறைவனிடம் சொல்ல, இறைவனும் நீ விதைக்கும் பொழுது எனக்குச் சொல் என்று கூற ஜோதிடரும் புழுதியாக்கி விதைக்கும் பொழுது இறைவனிடம் கூறும் போது திருவாலீஸ்வரர் ரிஷப வாகனமுடன் எழுந்தருளி தன்னுடைய கைகளினால் ஒரு கை விதையை வாங்கி இரைத்து மாயமாய் மறைந்தார் இந்த விதை மற்ற விதைகளைக் காட்டிலும் மிக வீரியமாகவும் செழித்தும் வளர்ந்தது. சோதிடரின் கதிர்கள் மட்டும் அதிக காலம் எடுத்து வளர்ந்தது மற்றவர்கள் அறுவடை செய்துவிட ஜோதிடரின் வயல்கள் மட்டும் அறுவடை செய்யாமல் கதிருக்காகக் காத்திருந்தது. ஒருவராலும் எட்டி கூட பார்க்க முடியாத உயரமாய் இந்த கதிர்கள் வளர்ந்து விட்டன இதைக் கண்டு துயர் கொண்ட சோதிடர் பசிக்கு உதவாத பயிராக இது வளர்ந்து விட்டது என எண்ணி மிகவும் மனம் நொந்தார். இதைக் கவனித்த வெள்ளாளன் ஒருவன். உன் பயிர்கள் வளரவில்லையா என்று விசாரித்து ஒரு பயிரைச் சாய்ந்து பிளந்து பார்த்தான். அப்போது அதில் பொன் கதிர்கள் காணப்பட்டது. பலத்த பேராசை கொண்ட வெள்ளாளன் எனது வயலில் விளைந்த பயிர்களை நீ அறுத்துச் சாப்பிடு உனது வயல்களில் வளர்ந்த பயிரை நான் எடுத்துக் கொள்கிறேன் என்று கூற.. சோதிடனும் ஏமாந்து அதன்படியே செய்தான். பல நாள் கழித்து சோதிடனின் பயிர் கதிர் வீசத் தொடங்கியது கதிர் முத்த முத்த ஆகாசமெல்லாம் சொர்ண நிறமாக மாறியது. அந்த நாளிலிருந்த ஹரிஹராயர் படைகளை அனுப்பி பொன்னை அளந்து தேசத்துக்குப் பிரித்து எடுத்துக்கொண்டார்.

இதனாலே இந்த ஊர் பொன்விளைந்த களத்தூர் என அழைக்கப்பட்டது. பூர்வ குடிகளான வெள்ளாழர் கிருஷ்ணதேவராயர் காலம் வரை இந்த கோட்டையினை ஆண்டு வந்துள்ளனர். கிருஷ்ணதேவராய ஆகோபால மடத்தின் சந்நியாசியின் போதனைப்படி இந்த கோட்டையினை அக்கிரகாரமாக மாற்ற வேண்டும் என வலியுறுத்த கிருஷ்ணதேவராயரின் கோரிக்கையை அவர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை . எனவே அங்கிருந்த சமணக் கோயில்களை இடித்து, ஆறு மாதங்கள் கொண்டைக்கட்டி வெள்ளாழர் மீது போர் தொடுத்து, கோட்டையை இடித்து, அவ்விடத்தில் அக்கிரகாரம் கட்டினார்கள்.

இங்கு நாம் உற்று நோக்க வேண்டிய விடயம் 'நெற்கதிரில் பொன் விளைந்ததா இல்லையா என்பது அல்ல.' எப்படி கிருஷ்ணதேவராயர் வெள்ளாழர்களை விரட்டி வைணவத்தைப் பரப்பினாரோ முற்காலத்திலும் அதே போல்

ஆதொண்டைமான் சமண குறும்பர்களை விரட்டி சைவத்தை நிறுவியுள்ளார். அதுமட்டுமின்றி இந்த இடம் பொன் கொழிக்கும் பூமியாக இருந்திருக்கிறது. இது வணிகத்தை குறித்தனவாகவே இருந்திருக்க வேண்டும்.

நம் நாட்டு நெல்லுக்கு மேலை நாடுகள் பொன் கொடுத்து வாங்கி சென்றதைப் பட்டினப்பாலை கூறுகிறது. இன்று உலகின் பொன் விளையும் பூமியாக உள்ளது சீனம். அதிக அரசி உற்பத்தியில் அவர்கள் முதன்மை வகிக்கிறார்கள் என்பதும் குறிப்பிடத்தக்கது. ஆதொண்டைமான் இவ்விடத்தை ஆட்சிக்கு உட்படுத்திய பிறகு சிவலிங்கத்தை நிறுவ, பின் நாட்களில் நெற்கதிரில் பொன் விளைந்ததாகப் புராணக் கதைகள் உருவாகி இருக்க வேண்டும்.



தங்க முட்டையிடும் வாத்து கதையை எவ்வாறு நம்மால் உண்மையிலேயே இப்படி ஒரு வாத்து இருந்தது என்று ஏற்றுக்கொள்ள முடியவில்லையோ அது போன்று கதிரில் தங்கம் விளையும் என்பதும் ஏற்புடையதாக இல்லை. பணம் என்ன மரத்திலா காய்கிறது எனப் பேச்சு வழக்கில் நாம் கேட்பதுண்டு. ஆக, பணமோ தங்கமோ மரத்திலோ கதிரிலோ காய்க்காது என்பது நாம் அறிந்ததே. இறை நம்பிக்கையை வளர்க்கும் பொருட்டே இப்புராணக் கதைகள் கதைகள் கூறப்பட்டு வருகின்றன.

ஆனால் கோவில்களில் எப்பொழுதும் இரண்டு கதைகள் இருக்கும் ஒன்று தலபுராணக்கதை மற்றொன்று வரலாறு. வரலாறு தான் தொன்மையையும் உண்மையையும் ஒளியூட்டி சரியான பாதையில் நடக்க வழிகாட்டும்.

காஞ்சியைக் குறிப்பிடும் பொழுது சைனக்காஞ்சி என்று குறிப்பிடுவதுண்டு. பழங்குடிகளின் சமண இடத்தை அடுத்தடுத்த மதங்கள் எடுத்துக் கொண்டாலும். தொண்டை மண்டல பழங்குடிகள் சமணர்களாக இருந்ததும் காஞ்சியில் அதிக வர்த்தகம் நடந்ததால் பொன் விளைந்ததும் யாராலும் மறுக்க முடியாத உண்மை.

நகரத்தார்களும் குறும்பர்களும் வணிகம் செய்ய கட்டிய பல கோட்டைகள் பற்றின தரவுகளை நமக்குத் தந்த மெக்கன்சி சுவடுகள் மேலும் சில தகவல்களைத் தருகின்றன. அதில் படுவூர் குறும்ப வரலாறும் ஒன்று. காலத்தால் இன்றி அமையாத ஒன்று.

படுவூரில் நெடுங்காலம் தொட்டு கொண்டைக்கட்டி வெள்ளாளர்களும் குறும்பர்களும் சமண மதத்தைத் தழுவி வாழ்ந்து வந்தனர். பாண்டி தேவர் எனும் சமண மதத்தைச் சார்ந்த அரசரால் படுவூர் சமண கோயிலுக்குத் தானமாகக் கொடுக்கப்பட்டதைச் சமணக் கோயில் கல்வெட்டு ஒன்று தெரிவிக்கிறது. பல காலமாகக் கோயிலுக்குத் தானமாக இருந்த இடத்தை ஆதொண்டைமான் போருக்குப் பிறகு பார்ப்பனர் அறிவுரையை ஏற்று சமணர்களைக் கொன்று குவித்தார். பின்பு இந்த ஊர் ... கோயில் தானத்திலிருந்து விடுவிக்கப்பட்டது. முற்காலத்தில் வயதாகித் தளர்ந்து போகும் மனிதர்களை அவர்கள் இறக்கும் வரை வீட்டில் வைக்காமல் அவர்களுக்குத் தேவையான உணவுப் பொருட்களுடன் பெரிய பானையில் வைத்து இந்த படுவூரில் கொண்டு வந்து வைப்பார்கள். சில நாள்களில் அவர்கள் இறந்து போவார்கள். இந்தப் பானைகள் மதமகசால்கள் என்று அழைக்கப்பட்டன (ஈமத்தாழிகள்). இந்த ஊரைச் சுற்றி நிறைய பட்டினங்கள் இருந்ததால் அனைவரும் இந்த இடத்தினை இடுகாடாக்கி அதனுள் ஈமத்தாழிகள் வைத்துள்ளனர் .

பாண்டி தேவர் வம்சத்தினரை இங்கு சமாதி வைத்தமையால். இவ்விடம் பாண்டு குழி என்றும், சிலர் உயிரோடு இங்குப் புதைக்கப்பட்டுப் பாடுபடுவதால் இவ்விடம் பாடு குழி அல்லது பாடைக்குழி என்றும் பெயர் பெற்றன. இத்தகைய பாடு குழிகள் நிறைந்திருந்ததால் இவ்விடம் படுவூர் எனப் பெயர் கொண்டது .

ஆதொண்டைமான் காலத்தில் இவ்விடத்தில் இரண்டு சிவலிங்கங்கள் அமைக்கப்பட்டு சமண சிலைகளும் கோவில்களும் அழிக்கப்பட்டது. மீதம் இருந்த கோவில்களும் கிருஷ்ணதேவராயர் காலத்தில் விஷ்ணு கோவில்களாக மாற்றப்பட்டது. 75க்கு மேற்பட்ட ஈமத்தாழிகள் இங்கு கண்டெடுக்கப்பட்டன. இவ்வூர் சென்னையின் மிக முக்கிய நகரமான திருப்போரூரில் உள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

வரலாற்றில் இது போல் நகரத்தார்கள் பல மாறுதலுக்கு உட்பட்டு. பல பழங்குடி இனங்கள் அழிந்தும் பல இழப்புகளுக்கு மேல் கட்டமைக்கப்பட்டதுதான் இன்றைய தொண்டைமண்டலம்.

மேலும் தொடரும்...

# தை பிறந்தது

***ஜெயலெட்சுமி ராஜாமணி*,**
*மதுரை*



*காணும் கடவுளாகக் காட்சியளிக்கும் அருணன்*
*பேணும் உயிர்கட்குப் பெருந்துணையே அவன்*
*பூணும் விழாக்கோலம் தைப்பொங்கல் நன்னாளில்*
*வானும் மண்ணும் வணங்க வலம் வரும் ஞாயிரோன்*

*இவ்வாறு சிறப்பிக்கப்படும் கதிரவனுக்கு நன்றி கூறும் வகையில் தைத் திங்கள் பிறந்த முதல் நாளை பொங்கல் பண்டிகைத் திருநாளாக நாம் கொண்டாடுகின்றோம்.*

*இதுவரை (சென்ற ஆடி மாதம் முதல் மார்கழி வரை ) தட்சிணாயனம் எனக் கூறப்படும் தென் திசைப் பாதையில் உலா வந்த கதிரவன் தன் பயணத்தை வடதிசை நோக்கித் திரும்ப (அறிவியல் ரீதியாகவும்) இன்றிலிருந்து அடுத்த ஆனி மாதம் வரையிலான இந்தக் காலம் உத்தராயணப் புண்ணிய காலமாகப் போற்றப்படுகிறது!*

*மகா பாரதப் பிதாமகர் பீஷ்மர் உத்தராயண காலத்தில்தான் தன் உடலை விட்டு உயிர் நீங்கவேண்டுமென்று மார்கழி மாதம் முழுவதும் அம்புப் படுக்கையில் காத்திருந்து உயிர் நீத்தார், மரணத்திற்கும் கூட உத்தராயண காலம் சிறப்பாகக் கூறப்படுகிறது.*

*'மகா சங்கராந்தி' என்றும் 'தைப் பொங்கல்' என்றும் கூறப்படும் இத்திருநாள் போகி, பொங்கல், மாட்டுப் பொங்கல், காணும் பொங்கல் என நான்கு நாள் விழாவாகக் கொண்டாடப்படுகிறது.*

***போகி :-***

*இந்நாள் மார்கழி மாதக் கடைசி நாளில் கொண்டாடப்படுகிறது, பழையன கழிதலும் புதியன புகுதலு மென்பதற் கிணங்க வீட்டில் உள்ள வேண்டாத பொருட்களை மட்டுமல்லாது, நம் மனதில் படிந்துள்ள வேண்டாத தீய எண்ணங்களையும் ஒழித்து நற்சிந்தனைகளுடன் வீடு வாசலைத் தூய்மைப்படுத்தி, இறைவனை வணங்கி, மறுநாள் வரவிருக்கும் தைப் பொங்கலை வரவேற்கும் இனிய நாள் போகி! வட இந்தியாவில் இந்நாளை இந்திரனுக்கு உகந்ததாக இந்திரவிழா எனக் கொண்டாடுகிறார்கள்.*

***பொங்கல் நாள், சூரிய வழிபாடு :-***

அலைமகளும் கலைமகளும் வீற்றிருக்கும் தாமரை மலரும், தன் பெயரினையே 'சூரியகாந்தி' என சூடிக்கொண்ட மலரும், ஆதவனைக் கண்டதும், . இதழ் விரித்து மலர்வது போல, செங்கதிரோன் மார்கழிக் குளிர் நீக்கப் பிறக்கிறது தை!

அன்று அதிகாலையிலேயே நீராடித் தூய்மையுடன் புத்தாடைகள் அணிந்து, உற்றார் உறவினர் ஒருவருக்கொருவர் பொங்கல் வாழ்த்துக்களைப் பகிர்ந்தும், ''பால் பொங்கிற்றா'' என விசாரித்தும் அடையும் மகிழ்ச்சிக்கு ஈடுண்டோ? இணையுண்டோ?



அன்று சூரிய ஒளிபடும் (திறந்தவெளியில்) இடத்தில் சுற்றிலும் செம்மண் கரையுடன் தேர்க் கோலமும் நடுவில் சூரியனின் உருவமும் வரைவர். அக் கோலத்தின் முன் புதுப் பானை அல்லது வெண்கலப் பானையை மஞ்சள் குங்குமம், மஞ்சள் கொத்து, மலர்களால் அலங்கரித்து, விறகடுப்பில் ஏற்றி அதில் பொங்கல் சமைப்பார்கள். பொங்கல் பானையில் முதலில் ஊற்றப்படும் பால் பொங்கி வருகையில் 'பொங்கலோ பொங்கல்' என்று வீட்டில் உள்ள அனைவரும் ஒன்றுகூடி கூவி மகிழ்வார்கள். பால் பொங்கியவுடன் அதில் புத்தரிசி, பாசிப் பருப்பிடுவர். அது நன்கு குழைந்து வெந்ததும் வெல்லமும் நெய்யும் சேர்ப்பார்கள். பொங்கல் பதமானதும் ஏலப் பொடி, வறுத்த முந்திரி, திராட்சையையும் சேர்க்கச் சுவையான பொங்கல் தயாராகிவிடும். இப் பொங்கலுடன் தேங்காய், வெற்றிலை, பாக்கு, பழங்கள், செங்கரும்பு

ஆக்கியவற்றைச் சூரிய தேவனின் முன்பு படைத்து மலர்கள் தூவி வழிபாடு செய்து மன நிறைவடைவர்.

***மாட்டுப் பொங்கல் :-***

"உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம் தொழுதுண்டு பின் செல்பவர்" என்று தெய்வப்புலவர் வள்ளுவரும், "உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்" என்று மகாகவி பாரதியும் உழவர் பெருமக்களையும், உழவுத் தொழிலையும் முதன்மைப் படுத்தியதை நாம் இங்கு நினைவு கூறல் வேண்டும். மாட்டுப் பொங்கல் நன்னாள் உழவர் திருநாளாகும். உழவுத் தொழிலுக்கு ஆதாரமான நீர், நிலம், காற்று, நெருப்பு, ஆகாயம் எனும் ஐம்பூதங்களாலான இயற்கையையும் கொண்டாடும் நாளாகவும் இந்நாள் போற்றப்படுகிறது.



மற்றுமொரு சிறப்பு யாதெனில், பெண்கள் தங்கள் சகோதரர்களின் நலம் வேண்டிச் செய்யும் 'கனுப்பிடி வழிபாடு', இதற்குப் பிறந்த வீட்டிலிருந்து சீதனமாகப் பொங்கல் பணம் அனுப்புவதும் உண்டு. அன்று அதிகாலையில் பெண்கள் வீட்டுப் பெரியோர்களிடம் தங்கள் நெற்றியில் மஞ்சள் குங்குமத் திலகம் இடச்செய்து, திறந்த வெளியில் மஞ்சள் கொத்து இலைகளை வரிசையாக விரித்து முதல் நாள் செய்த பச்சரிசிச் சாதத்தையும், பொங்கலையும் சிறு சிறு உருண்டைகளாக உருட்டி வைத்து அவற்றிற்கும் மஞ்சள் குங்குமமிட்டு, வெற்றிலை பாக்கு பழம் கரும்புத் துண்டங்களுடன் ஆராதனை செய்து, காக்கைக் கூட்டம் போல் எங்கள் கூட்டமும் என்றும் ஒற்றுமையாக அன்பான உறவுகளாக

இருக்கவேண்டுமென்றும், தம் சகோதரர்கள் நீண்ட ஆயுளுடனும் ஆரோக்கியத்துடனும் நலமாக வாழவேண்டுமென்றும் பிரார்த்தனை செய்வர்.

இத்துடன், ஆடி மாதம் விதைத்த நெல், தை மாதம் அறுவடை செய்யப்படுவதை மன நிறைவுடன் வரவேற்கும் உழவர் திருநாளான இந்நாளில் அவர்களுக்கும். வீட்டுப் பணியாளர் யாவருக்குமே புத்தாடைகளும், பொங்கல் காசு என்று பணமாகவும் கொடுத்து அவர்களைப் பெருமைப் படுத்துவர்.

இன்றைய தினத்தின் தலையாய நிகழ்வு 'ஜல்லிக்கட்டு' எனும் வீர விளையாட்டாகும்! முற்காலத்தில் முரட்டுக் காளைகளை மடக்கிப் பிடித்து அடக்கும் வீரர்களுக்குத் தங்கள் மகளையே பரிசாக மணமுடித்துக் கொடுப்பார்கள். காலப் போக்கில் எத்தனையோ மாற்றங்கள் வந்திருந்தாலும் இந்த ஜல்லிக்கட்டு (சல்லிக்கட்டு) மட்டும் தமிழர்களின் வீர விளையாட்டாக இன்றும் ஆங்காங்கு நடைபெற்றுக் கொண்டிருக்கிறது.

வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்ட நாடன்றோ நம் தமிழகம்? அதனால் தமிழர் திருநாளாம் பொங்கல் பண்டிகையின் பொழுது 'வள்ளுவர் தினமென்றும்' மாட்டுப் பொங்கல் நன்னாள் கொண்டாடப்படுகிறது. அன்று ஆங்காங்கு திருக்குறள் சொற்பொழிவுகள் நடத்தியும் பள்ளி, கல்லூரி மாணவருக்கு குறள் ஒப்புவித்தல், கட்டுரை, பேச்சுப் போட்டிகள் நடத்தியும் வள்ளுவரையும், வள்ளுவத்தையும் கொண்டாடி மகிழ்கின்றோம்!

**காணும் பொங்கல் :-**

அன்று பல வகையான சித்திரான்னங்கள் செய்து, ஆறு நதிக்கரைகளில் உற்றார் உறவினருடன் ஒன்றுகூடி உண்டு ஆடிப் பாடி அக மகிழ்வார்கள். சங்கக் கால இலக்கியங்களிலும் தைப் பொங்கல் பற்றிய குறிப்புகள் காணப்படுவதால் அக்காலம் முதலே பொங்கல் பண்டிகை சிறப்பாகக் கொண்டாடப்படுவது தெரியவருகின்றது.

தை மாதத்தின் மற்றொரு புண்ணிய தினமானது ரதசப்தமி! இன்றுதான் கதிரவன் தன் வடக்கு நோக்கியப் பயணத்தைத் துவங்குகிறான். அன்று காலையில் நீராடுகையில் ஐந்து அல்லது ஏழு எருக்கம் இலைகளை எடுத்து அதில் சிறிதளவு மஞ்சள் கலந்த அரிசியையும், சிறிது பசுஞ் சாணத்தையும் வைத்து அதைத் தலைமேல் வைத்துக் கொண்டு. "ஒவ்வொரு நாளும் கடமை தவறாது உலகைச் சூழ்ந்துள்ள இருளை அகற்றி ஒளிதரும் சூரியக் கடவுளே! எங்கள் மன இருளையும் அகற்றி நாங்களும் எங்கள் கடமைகளைத் தவறாது நல்லபடி செய்து வர எங்களுக்குப் புத்துணர்வு அளிக்க வேண்டும்" என வேண்டி நீராடல் வேண்டும். சூரியனின் ஒளிக் கதிர்கள் ஏழு நரம்புகளை உடைய எருக்கம் இலையின் ஊடே உடலில் சென்று நமக்கு உடல் ஆரோக்கியத்தை அளிக்கிறது

என்பதே இதன் உட்பொருள்! அருக்கன் என்று அழைக்கப்படும் ஆதவனுக்கு உரிய மலரல்லவா எருக்கம்பூ!

‘தை அமாவாசை’ தை மாதத்தின் இன்னுமொரு சிறப்பான தினம்! மாதம் தோறும் வரும் அமாவாசை தினத்தை விட ‘தை அமாவாசை’ மிக முக்கியமானது! இன்று நம் முன்னோர்களை நினைத்து வழிபாடு செய்வது, அவர்களின் ஆசி நமக்கும் நமது அடுத்த தலைமுறைகளுக்கும் கூட நன்மை அளிக்கும் என்பதே இதன் சிறப்பு!

திருக்கடவூர் அபிராமி அன்னையின் பக்தருக்கு அருளிய தினம் தை அமாவாசை! திருக்கடவூரில் வாழ்ந்து வந்த சுப்பிரமணிய அய்யர் அன்னை அபிராமியிடம் அளவில்லாத பக்தியும். அன்பும் கொண்டவர்! பஞ்சாங்கம் பார்த்து நாள், திதி, நல்ல நேரம் கணித்துக் கூறுவதே தொழிலாகக் கொண்டவர்! ஒரு சமயம் தஞ்சை இரண்டாம் சரபோஜி மன்னர் அபிராமியம்மை கோயிலுக்கு வருகை புரிந்த போது அவரைக் கவனியாது தன்னுள் மூழ்கி கண்மூடி அமர்ந்திருந்த அந்தப் பக்தரைக் கண்டு வியந்த மன்னர், அவரிடம் “இன்று என்ன திதி” என்று கேட்டார், அச்சமயம் அருளே வடிவான பிரகாசமான ரூபத்துடன் அம்பிகையை தன்னுள் தரிசித்து மகிழ்ந்து கொண்டிருந்த அந்த பக்தர், சட்டென்று பௌர்ணமி என்று கூறி விட்டார்! ஆனால் அன்று அமாவாசை! மன்னர் “ உன் சொற்படி வானில் இன்று முழு நிலவு வராவிடில் உனக்குத் தண்டனை அளிப்பேன்,” என்று கூற, அப்பொழுதுதான் (பிற்காலத்தில் அபிராமி பட்டர் என்று பெயர் பெற்ற) அவர் சூழ்நிலையை உணர்ந்தார்.

“ தாயே! உன் கோடி சூர்ய பிரகாசத்தில் ஆழ்ந்திருந்த நான் பௌர்ணமி என்று கூறியது உன் வாக்கே! அதை நீ தான் மெய்ப்பிக்க வேண்டும். இல்லையேல் நான் உயிர் வாழேன்!” என்று கூறி அன்னையின் புகழை, அருளை, பெருமையை அபிராமி அந்தாதியாக மனமுருகப் படலானார்! நூறு பாடல் கொண்ட அத்தொகுதியில் 79வது பாடலான “விழிக்கே அருளுண்டு” என்று தொடங்கும் பாடலை அவர் பாடியதும் அபிராமையம்மை மனமகிழ்ந்து தன் தாடங்கத்தை (செவியின் ஆபரணத்தை) விண்ணில் வீசினாள். அது தகதகவென ஒளிவீசி வானில் பிரகாசிக்க அமாவாசை பௌர்ணமியானது! மன்னர் மட்டுமல்ல, உலகோரே அபிராமி பட்டரின் பெருமையை உணர்ந்து அவரைப் போற்றி வணங்கினர்! தேனூறும் பொருள் செறிவுடன் அபிராமி பட்டர் இயற்றிய அபிராமி அந்தாதியும். அபிராமி பதிகமும் மக்களின் வேத மந்திரமாகவே இன்றளவும் விளங்குகிறது!

தைப் பூசம்! முருகக் கடவுளுக்குரிய இந்நாளில் அறுபடை வீடுகளில் மட்டுமன்றி அனைத்து வைணவ, சிவ ஆலயங்களிலுமே தைப் பூச விழா தெப்போற்சவமாக மிகச் சிறப்பாகக் கொண்டாடப்படும். முருக பக்தர்கள் எங்கெங்கிருந்தோ பாத யாத்திரையாக, பால் காவடி, புஷ்பக் காவடி, அன்னக் காவடி என்று சுமந்து

*கொண்டும் வந்து வள்ளி தேவசேனாபதியாக முருகனின் அபிஷேகம் அலங்காரம் ஆராதனைகளைக் கண்டு களித்து மகிழ்கிறார்கள். இவ்விழா இலங்கை, மலேசியா, சிங்கப்பூர் நாடுகளிலும் மிகச் சிறப்பாக நடைபெறுகிறது!*



*'வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடினேன்' என்று இயற்கையில் இறைமையைக் கண்டு மனமுருகி மெய் மறந்து பாடிப் பரவி இறைவனை ஒளி வடிவமாகவே பூசித்தவர் வள்ளலார் சுவாமிகள், 1872-ம் ஆண்டு, தைப் பூச நாளில் ஒளி வடிவமாகவே இறைவனுடன் கலந்தார் வள்ளலார்! வடலூரில் இன்றும் அருட்பெரும் ஜோதியாக, கருணைக் கடலாக தைப் பூசமன்று வள்ளலாரைக் கொண்டாடி வழிபடுகின்றனர் அவர்தம் அடியவர்கள். தைப் பூசத்தன்று மட்டுமே வள்ளலார் நிறுவிய ஞான சபையில் ஏழு திரைகள் விலகிய நிலையில் ஜோதி தரிசனம் காணலாம்.*

*அது போன்று மற்றுமொரு ஜோதி தரிசனம் சபரிமலையில் தை மாதம் முதல் நாள் காணப்படும் மகரஜோதி தரிசனமாகும்! ஆண்டு தோறும் ஐயப்ப பக்தர்கள் மாலை அணிந்து விரதமிருந்து 'சுவாமியே சரணம் ஐயப்பா!'' என்று மனமுருகிக் கூவி மகரஜோதியைத் தரிசித்த பின் தங்கள் விரதத்தை நிறைவு செய்வர். ஆக, நம் பண்டைய கலாசாரத்திற்கும். இறை வழிபாட்டிற்கும் வழி வகுக்கும் தைத் திங்களை இரு கரம் கூப்பி வரவேற்போம் ! வணங்குவோம்!*

# இந்திரனே சாலுங் கரி”

**முனைவர் சிவ. இளங்கோ,**

*6, கவிஞர் புதுவைச் சிவம் வீதி,*
*வெங்கட்ட நகர், புதுச்சேரி – 605 011.*
*பேசி: 99940 78907.*
*Mail ID: ilangosiva57@gmail.com*



*மேற்குறிப்பிட்ட தலைப்புக்கு ‘இந்திரனே தக்க சான்று’ என்று பொருள் கொள்கின்றனர் உரையாசிரியர்கள். அப்படியானால், ‘இந்திரன்’ என்பவன் யார்? என்ற கேள்வி எழுகிறது. வேதத்தில் சொல்லப்பட்டு, வைதீக வழி முப்பத்து முக்கோடி தேவர்களின் தலைவனாகச் சுட்டப்படும் இந்திரனைத்தான் வள்ளுவர் கூறுவதாகப் பொருள் கொள்கின்றனர். அதைத்தான் ‘அகல் விசும்புளார் கோமான்’ (அகன்ற வான் உலகத்தார்க்குத் தலைவன்) என்று குறிப்பிட்டுள்ளதாக வேதகால இந்திரனை நிறுவச் சான்றாகக் கொள்கின்றனர். எப்படிப்பட்ட இந்திரனாக, வேதகால இந்திரனை நிறுவ முற்படுகிறார்கள் என்றறிய வள்ளுவரின் அந்தக் குறளைக் காண்போம்.*

> *“ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான்*
>
> *இந்திரனே சாலுங் கரி” (குறள் - 325)*

*(இதன் பொருள்: ஐம்பொறிகளையும் (மெய், வாய், கண், மூக்கு, செவி) அடக்கினவனது வல்லமைக்கு, அகன்ற வானுலகத்தார்க்குத் தலைவனான இந்திரனே தக்க சான்றாகும் – புலவர் குழந்தை உரை).*

*திருக்குறளில் பாயிரமாகக் கொள்ளப்படும் முதல் நான்கு அதிகாரங்களுள், மூன்றாவதில் நீத்தார் பெருமை எனும் அதிகாரத்தில் ஐந்தாவது பாடலாக இக்குறள் இடம் பெற்றுள்ளது. இதில் சான்றாகக் கொள்ளப்படும் இந்திரன் யாரென்றால் அவன் வேதகால இந்திரன் என்றும், அவனே ஐம்பொறிகளை அடக்கினவன் என்றும் பெரும்பாலானோர் கருத்துரைக்கின்றனர்.*

*வேதத்தின் வழியும், புராண இதிகாசங்களின் படியும் இந்திரன் இந்தியா முழுமையும், தமிழ் மக்களுக்கும் சேர்த்து நன்கு அறிமுகமானவன் தான். ஆனால் ஐம்புலன்களையும் அடக்கிய ஒருவனுக்கு இந்திரனே சான்றாவான் என்றால் அனைவருமே நகைப்பை அடக்க நீண்ட நேரமாகும். ஒரு புலனைக் கூட அடக்காத ஒருவனை ஐந்து புலன்களையும் அடக்கிய ஒருவனுக்குச் சான்றாகச் சொல்ல முடியுமா? அதையும் வள்ளுவரே சொல்லுகிறார் என்றால் அவர் எப்படிப் பொய்யில் புலவர் ஆவார்?*

வேதகால இந்திரனைப் பற்றிப் புராணங்களும், வேதங்களும் என்ன கூறுகிறதென்றால் அவன் சுராபானம் அருந்துபவன், தன் இந்திர தேசத்தில் அரம்பை, ஊர்வசி, இரதி போன்ற பேரழகிகளை ஆசைநாயகிகளாக மட்டுமல்ல, அவர்களை முனிவர்களின் தவத்தைக் கலைக்க ஏவிவிட்டுக் காரியம் சாதிப்பவன் என்றும் கூறுகின்றன. மேலும் பிற அழகிய பெண்கள், அவர்கள் வேறு உலகத்தில் இருந்தாலும் கூட அவர்களைத் தன் பதவி அதிகாரத்தால் அல்லது தந்திர வித்தையால் எப்படியும் அடைபவன் என்றும் கூறுகின்றன. இன்றைய இந்தியக் குற்றவியல் சட்டத்தின்படி பல்வேறு சட்டப்பிரிவுகளில் தண்டனை பெறும் அளவிற்கு அத்துணைக் காரியங்களையும் வேதகால இந்திரன் செய்துள்ளதாகவும் இந்தியாவின் பன்மொழிப் புராணங்களும் பெருமை பொங்கக் கூறுகின்றன.



அவற்றுள் ஒன்றுதான் கௌதம முனிவரின் மனைவி அகல்யா என்னும் பேரழகியை இந்திரன் சுகித்த கதை. தேவர்களும், அசுரர்களும் பாற்கடலைக் கடைந்தபோது வெளிப்பட்டவளே அகல்யா (தமிழில் அகலிகை). இவள் அழகு கண்டு பிரம்மனே பிரமித்து நிற்க, இந்திரனும், கௌதம முனிவரும் அவளை அடையத் தயாராகினர். இதனால் பிரம்மன் ஒரு போட்டியை வைக்க, அதில் வென்ற கௌதமர் அகலிகையை மணந்தார். ஆனாலும் அவளை மறக்க முடியாமல் கௌதமரின் ஆசிரமத்திற்கு நடுநிசியில் சென்ற இந்திரன், சேவலாக மாறிக் கூவவும், விடிந்துவிட்டது என்று நினைத்து கௌதமர் ஆற்றுக்குச் செல்ல, முனிவரின் உருவமாக மாறிய இந்திரன் அகலிகையை அடைந்தான். திரும்பிவந்த கௌதமர் இருவரையும் கண்டுச் சாபமிட அகலிகை கல்லானாள். இந்திரன் உடம்பெல்லாம் அவன் கொண்ட காமத்தின் அடையாளமாகப் பெண்குறிகளாக மாறின. இந்திரன் சாப விமோசனம் வேண்ட, பிறர் கண்களுக்கு அவை கண்களாகவே தெரியும் என்று கௌதமர் கூற, இந்திரன் ஆயிரங்கண்ணுடையான் என்ற பெயர் பெற்றான்.

இதேபோல இந்திரப் பட்டம் எய்திய நகுடனைப் பாம்பாக மாற்றிய அகத்தியரின் செய்கையையும், சியவனர் என்ற முனிவரோடு பகைகொண்டு இறுதியில் அசுவினி தேவதைகளுக்காக இரங்கித் தோற்றதையும், சம்வர்த்தனின் யாகத்தை எதிர்த்த இந்திரன், பின் அவரின் தவ வலிமைக்கு அடங்கிப் போனதையும், அகத்தியரின் பன்னிரண்டு ஆண்டு வேள்வியை எதிர்த்துப் பின், தலைமைப் பதவியைக் காக்க, அவரிடமே இந்திரன் சரணடைந்த கதையையும் மகாபாரதம் கூறுகிறது.

அதாவது, வேதங்களிலும், புராண, இதிகாசங்களிலும், உபநிடதங்களிலும் குறிப்பிடப்படும் வேதகால இந்திரன் ஐம்பொறிகளில் ஒன்றின் ஆசையைக் கூட அடக்காதவனாகவே அறியப்படுகிறான். இப்படிப்பட்ட இந்திரனை ஐம்பொறிகளையும் அடக்கியவனாக அடைமொழியுடன் கூற யாருக்குத் துணியும்? ஆனால் திருக்குறளுக்கு உரை எழுதிய பெரும்பாலான தமிழ்ப் புலவர்கள் அப்படித்தான் எழுதியுள்ளனர். ஆனால் வைதிகத்திற்கு ஆதரவாக நின்று, முழுமையான அறங்கூறும் திருக்குறளை முழுக்க முழுக்க வைதீகப் போர்வை போர்த்தி உரையெழுதிய பரிமேலழகர், இக்குறளில் உண்மையை ஒளிக்காமல் குறிப்பெழுதியுள்ளார். ஐம்புலன் அவியாது சாபம் பெற்றுக் கொண்டு, ஐம்புலன் அவித்தவனின் ஆற்றலை உணர்த்தியவன் இந்திரன் என்று கூறுகிறார். இங்கு, ஐம்புலன் அவித்தவனாக அவர் குறிப்பிடுவது கௌதம முனிவரைத்தான். ஆனால் அவரும் புலன்களை அடக்கியவர் அல்லர் என்பது அவர் அகலிகையை விரும்பி மனைவியாக ஏற்றார் என்பதில் இருந்தே விளங்கும்.

ஆனாலும் அவரை ஐந்தவித்தானாகக் கொள்ளலாம் என்றும், கௌதம முனிவரைப் போன்ற வானப்பிரஸ்தர்கள், மனைவியோடு ஓய்வுக்காலத்தில் கூடுவது காமத்திற்காக இல்லை என்றும் மகாபாரதத்தை (அனுசாசனபர்வம் - துணைப்பிரிவு) மேற்கோள் காட்டித் தமிழ் லெக்சிகன் தொகுத்தவர்களில் ஒருவரான பி.எஸ். சுப்பிரமணிய சாஸ்திரி என்பவர் (திருக்குறள் - அறத்துப்பால் - பாலருரை, 1939) தன் உரையில் கூறுகிறார். இப்படி எதனையாவது மேற்கோள் காட்டி ஆரிய தர்மத்தை உயர்த்திப் பிடிப்பதையே தொழிலாகக் கொண்டு ஆரிய பிராமணர்கள் நிறைய எழுதி வைத்துள்ளனர். நிறைய தமிழ்ப் புலவர்களும் அதை வழிமொழிந்து எழுதியுள்ளனர்.

ஆனால் பரிமேலழகருக்கும் முன்னதாக எழுதப்பட்ட பழைய உரைகளில் வைதிகம் உயர்த்திப் பிடிக்கப்படவில்லை. ஆனாலும் எதிர்ப்பு வன்மையாக இல்லை. வேறு ஒருவர் தவம் செய்தால் தன்னை மிஞ்சிவிடக் கூடும் என்று இந்திரன் அஞ்சினான் என்பதையே திருவள்ளுவர் இந்திரனைச் சான்றாகக் கூறியதன் விளக்கமாக மணக் குடவர் உரைக்கிறார். அப்படித் தவம் செய்பவரைத் திலோத்தமை போன்றோரை அனுப்பித் தவம் அழித்தவன் இந்திரன் என்பதால் அவனைச் சான்றாகக் கூறினார் என்று காலிங்கர் உரை கூறுகிறது. பதினான்காம் நூற்றாண்டின் முன் வரை திருக்குறளுக்குத் தருமர், மணக்குடவர், தாமத்தர், நச்சர், பருதி, பரிமேலழகர், திருமலையர், மல்லர், பரிப்பெருமாள், காலிங்கர் ஆகிய பத்துப் புலவர்கள் உரை எழுதியுள்ளனர். இவை பழைய உரைகள் எனப்படுகின்றன. இவற்றுள் மணக்குடவர், பருதி, பரிப்பெருமாள், காலிங்கர், பரிமேலழகர் ஆகியோர் எழுதிய உரைகளே அச்சில் வெளிவந்துள்ளன. (உ.வே.சா. தன்னுடைய பத்தொன்பதாம் நூற்றாண்டுத் தேடுதலில், பதினெட்டு உரைகளைக் கண்டதாகக் கூறுகிறார். மீதிப் பதின்மூன்று உரைகள் என்னவாயின

என்பது அவருக்கே வெளிச்சம். ஆனால் அவர் பழிசுமத்துவது வரகுண பாண்டியன் மீது).

1812-ஆம் ஆண்டில் எல்லீஸ் வெளியிட்ட திருக்குறள் நூலில் இந்திரனைப் பற்றிய கதையை அவர் வால்மீகி ராமாயணத்தின் பால காண்டத்தில் இருந்து எடுத்து மேற்கோள் காட்டுகிறார். அக் கதை கம்பராமாயணத்து பாலகாண்டத்தின் அகலிகைப் படலத்தில் சிறிது மாற்றம் பெறுவதையும் (ஆயிரம் மாதர்க்குள்ள அறிகுறி உனக்குண்டாக என்பது சாபம்) எல்லீஸ் சுட்டிக்காட்டுகிறார். இன்னும் இக்குறளுக்குத் தத்துவ போதசுவாமி, கவிராய பண்டிதர் கருத்துகளையெல்லாம் மேற்கோள் காட்டிய பின்னர், சமணர்களின் பார்வை இதிலிருந்து வேறுபட்டதாகக் கூறுகிறார் எல்லீஸ். நீத்தார் என்றும், துறவோர் என்றும் வள்ளுவர் குறிப்பிடுவது கௌதம முனியைப்போல் மனைவியோடு இல்லறம் நடத்துபவரை அல்ல என்பது சமணர் கருத்து. மேலும், அப்படியே கதைக்காக இருந்தாலும் கூட சாபங்கள் எதையும் அவர்கள் அளிக்க மாட்டார்கள். அதுவும் இதுபோன்று வக்கிரமான சாபங்களை நினைத்தும் பார்க்க மாட்டார்கள். இப்படியான ஒரு சாபக் கதையைக் கூறி ஐந்தவித்தவனுக்குச் சான்றாக வள்ளுவர் கூறியிருக்க வாய்ப்பேயில்லை என்ற சமணர்களின் கருத்தையும் பதிவு செய்கிறார் எல்லீஸ்.



திருவள்ளுவர் குறிப்பிட்ட இந்திரனை, வேதகால இந்திரனாகப் பெரும்பான்மை உரையாசிரியர்கள் கூறுவதால், தொன்மங்கள் எல்லாம் வரலாறாக மாறிவிட்டன. இந்திரன் தமிழ் நிலத்துத் தெய்வம் என்றும், புகார் நகரில் கொண்டாடப்பட்டதாகச் சிலப்பதிகாரம் குறிப்பிடும் இந்திர விழாவே அதற்குச் சான்று என்றும் தமிழ்ப் புலவர்கள் குறிப்பிட்டு வருகின்றனர். ஆனால் இந்திரன் என்பது தமிழ்ச் சொல் அல்ல, தமிழில் வேந்தன் என்பதைக் குறிக்க வடமொழியில் (பாலி) உருவாக்கப்பட்ட சொல். வேந்தன் மருதநிலத் தமிழ்த் தெய்வம். “வேந்தன் மேய தீம்புனல் உலகமும்” என்கிறார் தொல்காப்பியர் (தொல்.951). ஆகவே திருவள்ளுவர் குறிப்பிட்ட இந்திரன், வேதகால இந்திரன் அல்ல. அது வேறொருவர். திருவள்ளுவர் வேறொருவரை அல்லது வேறொரு கதையை மனதில் கொண்டு, இந்திரன் என்ற சொல்லாட்சியைப் பயன்படுத்தி இருக்க வேண்டும் என்று தேவநேயப் பாவாணர் தன் திருக்குறள் மரபுரையில் குறிப்பிடுகிறார்.

அப்படி யாராவது ‘இந்திரன்’ என்ற பெயருக்குப் புதிய விளக்கம் கொடுத்திருக்கிறார்களா என்றொரு வினா இதுவரை தேடலாகவே

இருந்துவந்தது. அந்த வினாவிற்கு விடை அளித்தவர் ஒரே ஒரு புலவர்தான். அவர்தான் பண்டிதர் அயோத்திதாசர்.



இந்திரன் என்பது புத்தரைக் குறிக்கும் பெயர் என்கிறார் அயோத்திதாசர். அவர் மேலும் கூறுவதாவது. புத்தரின் ஆயிரம் பெயர்களில் (சகஸ்திர நாமம்) இந்திரனும் ஒன்று. மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐம்பொறிகளின் ஆசையை அடக்கியவர்களையே ஐந்திரன் என்று குறிப்பிடுவர். வடமொழி அட்சர பேதத்தால் ஐ, இ ஆகத் திரிந்து, ஐந்திரன் என்பது இந்திரன் என வழங்கியது. இத்தேசமெங்கும் புத்தரையே இந்திரனெனப் பூசித்து அரச மரத்தடியிலும், அறப் பள்ளிகளிலும் இந்திர விழா கொண்டாடப்பட்டது. இந்திரனைக் கொண்டாடியவர்கள் இந்தியர். கொண்டாடுந் தேசம் இந்திய தேசம். இந்திரியத்தை வென்றான் என்ற பொருளில் ‘இந்தியத்தை வென்றான்’ என்று அருங்கலைச் செப்பு கூறுகிறது. ‘இந்தியக் குஞ்சரத்தை ஞானப் பெருங்கயிற்றினால் பூட்டியவர்’ என்று அறநெறிச் சாரம் கூறுகிறது. ‘‘இந்திரன் எனப்படும் இறைவன் நம் இறைவன்’ என்று மணிமேகலை கூறுகிறது. அனைத்து ஆசைகளையும், குறிப்பாகப் பெண்ணாசையை முற்றும் துறந்தவர்களே இந்திரர்களாக அறியப்படுவர் என்று சீவக சிந்தாமணியும் கூறுகிறது. ஆகவே இந்திரன் என்று வள்ளுவர் குறிப்பிடுவது கௌதம புத்தரையே.

அவரே ஐந்தவித்தவனின் ஆற்றலுக்கு எடுத்துக்காட்டானவர் என்று பண்டிதர் கூறுவதை ஏற்றால் காவிப் பிரச்சனை தீரும். இங்கு இன்னொன்றும்

கவனிக்கப்பட வேண்டியது. காவி நிறம் வைதிகத்தின் அடையாளம் அல்ல. அது புத்தர் உடுத்திய ஆடை நிறம். சமண, பௌத்தத்தின் கருத்துக்கள் தொடங்கி அனைத்தையும் கபளீகரம் செய்துகொண்ட வைதிகம் இன்று காவி வண்ணத்தில் புகுந்திருக்கலாம். ஆனால், அதற்குரியவர் புத்தர் என்ற முறையில் திருவள்ளுவருக்குக் காவி வண்ணம் அணிவிப்பது, அயோத்திதாசர் கூறுவதுபோல் திருவள்ளுவர் புத்த சமயத்தினர் என்று ஏற்றுக்கொள்வ தாகத்தான் பொருள்.



**துணை நின்ற நூல்கள்:**


*1. G.U. Pope, Thirukkural, 2018, சாரதா பதிப்பகம், சென்னை.*

*2. க. அயோத்திதாசப் பண்டிதர், திரிக்குறள்., 2015, மெத்தா பதிப்பகம், சென்னை.*

*3. ஞா. தேவநேயப் பாவாணர், திருக்குறள் தமிழ் மரபுரை, 2000, இந்து பப்ளிகேஷன்ஸ், சென்னை.*

*4. புலவர் குழந்தை, திருக்குறள், 2007, பூம்புகார் பதிப்பகம், சென்னை.*

*5. பி.எஸ். சுப்ரமணிய சாஸ்திரி, திருக்குறள்–அறத்துப்பால், 1939, திருச்சி.*

*6. திருக்குறள் மூலமும் பரிமேலழகருரையும், 1967, கழகம், சென்னை.*

*7. ப. மருதநாயகம், எல்லீசின் திருக்குறள் விளக்கக் கையெழுத்துப் பிரதி, 2009, சீதைப் பதிப்பகம், சென்னை.*

*8. திருக்குறள் பன்முக வாசிப்பு, 2009, மாற்று, சென்னை.*

*9. மருதமுத்து, திருக்குறள் – தமிழ்த் தேசிய அரசியல் நூல், 2013, போர்க்கொடி பதிப்பகம், சென்னை.*

*10. தமிழ் மரபு அறக்கட்டளை இணையதளம்.*

*தொடர் – 2*

# *நான் மனிதக் குருதி பேசுகிறேன்*

***R. ராஜலெட்சுமி M.Sc., M.Phil***

*புறக்குழு உறுப்பினர், அறிவியல் தமிழ் மன்றம்*



*இதுவரை நானும் திசுவும் இணைந்து எங்களைப் பற்றிச் சில விடயங்களைப் பேசிக் கொண்டிருந்தோம். இப்போது உடலில் நான் எப்படி ஓடி ஒவ்வொரு திசுவையும் அடைகிறேன்; உடல் முழுவதையும் எப்படிச் சுறுசுறுப்பாக வைத்துக்கொள்ள உதவுகிறேன்; நான் இன்றி உடலின் எந்த ஒரு அணுவும் செயல்பட முடியுமா என்பதைப் பற்றியும் பார்க்கலாம்.*

*மனிதனின் இருதய அமைப்பு இரத்த ஓட்ட மண்டலம் மற்றும் நிணநீர் மண்டலம் என இரண்டு முக்கியப் பகுதிகளாகப் பிரிக்கப்படுகிறது. இதில் ரத்த ஓட்ட மண்டலத்தில் இதயம் ஒரு காற்றமுத்த விசைக் குழாயாகச் (pump) செயல்பட்டு இரத்தக் குழாய்களின் வழியாக உடல் முழுவதும் பாய்வதற்குப் பயன்படுகிறது. இதே போன்று நிணநீர் மண்டலம் நிணநீர் முடிச்சுகளைப் பெற்று நிணநீர்க் குழாய்களின் வழியாக நிறமற்ற நிணநீரை ஓடச் செய்கிறது. இந்த இரண்டு மண்டலங்களும் ஒன்றோடு ஒன்று பேசிக்கொண்டு, நெருங்கிய தொடர்புடையவையாக, நெருக்கமாக இணைந்து, தங்களின் வேலைகளைச் செய்கின்றன.*

*உடற்கூறு உள்ளமைப்புப்படி வெவ்வேறு இரண்டு அமைப்புகளில் இதயம் இரத்தத்தைக் காற்றமுத்த விசைக் குழாய் மூலமாக இரத்த நாளங்களின் வழியே ஓடச் செய்கிறது.*

*1. நுரையீரல் சுழற்சி (The pulmonary circulation)*

*2. ஒழுங்குமுறைச் சுழற்சி (The systemic circulation)*

*இந்த நுரையீரல் சுழற்சி முறையில் நுரையீரலுக்கும் இதயத்திற்கும் இடையே பேச்சுவார்த்தை நடத்தப்படுகிறது. முடிவாக வாயுக்களை ஒன்றுக்கொன்று பரிமாற்றம் செய்து கொள்கிறது. அதாவது இதயம் ரத்தத்தின் வழியாக கரியமில வாயுவை (Carbon dioxide) நான் உனக்கு அனுப்புகிறேன்; நீ அதை வெளியேற்றிவிட்டு பரந்து விரிந்த வளிமண்டலத்தில் மிதந்து கொண்டிருக்கும் பிராணவாயுவை (Oxygen) உள்ளிழுத்து ரத்தத்திற்குள் கலந்து விடு என்று கூறியவுடன், நுரையீரலும் உதவுவது தானே நம் வேலை; அதை நாம் இணைந்து*

செய்வதற்கு நான் மறுப்பேனா? நிச்சயம் செய்வோம் நண்பா என்று இருவரும் கலந்துரையாடி பரிமாற்றம் செய்து கொள்கிறார்கள்.

இந்த இடத்தில் நெத்தியடிபோல் ஒரு திருக்குறளை நினைவூட்டலாம்;

செயற்கரிய யாவுள நட்பின் அதுபோல்
வினைக்கரிய யாவுள காப்பு.




இந்தக் குறள் ஒருவருக்குப் பாதுகாப்பு என்பது தம்மால் உருவாக்கிக் கொண்ட நல்ல நட்பினால் கிடைக்கும் என்பதை உணர்த்துகிறது. அதுபோல ஒரு வேலையைத் தனியாகச் செய்வதை விடக் குழுவாக இணைந்து புரிதலுடன் செய்தால் அந்த வேலை எளிதாகவும் இருக்கும். அதாவது கூடி வாழ்ந்தால் கோடி நன்மை என்பதும் விளங்குகிறது. பிராண வாயு இல்லாமல் இந்த உடல் இயங்காது. இதனை உள் இழுத்து சுத்தம் செய்து இதயத்திற்கு அனுப்பும் வேலையை நுரையீரல் செய்கிறது. உடல் முழுவதும் ஒவ்வொரு அணுவிலும் இருக்கும் கரியமில வாயுவைச் சேகரித்து நுரையீரலுக்கு அனுப்பும் வேலையை இதயம் செய்கிறது. இவற்றை நம் உடலின் முதலாளிகள் என்று கூறலாம். அவன் இன்றி ஓர் அணுவும் அசையாது என்பது போல் இவை இரண்டும் இல்லை எனில் எந்த அணுவும் அசைய முடியாது. இவை இரண்டும் சேர்ந்து நட்புடன் இணைந்து உன்னுடன் நான் பயணிக்கிறேன் என்பது போல் செயற்கரிய செயல்களைச் செய்து நம் உடலை இயக்குகின்றது.

ஒழுங்குமுறைச் சுழற்சியில் *(The systemic circulation)* இடதுபுற இதயம் இரத்தத்தை உடலின் மற்ற அனைத்துப் பகுதிகளுக்கும் அனுப்புகிறது. இங்குதான் உடலில் உள்ள அணுக்கள் தேவையான சத்துக்களையும், பிராண வாயுவையும் *(Oxygen)*

ரத்தத்திலிருந்து எடுத்துக்கொண்டு திசுக்களில் உள்ள கழிவுகளை வெளியேற்றுகிறது.

இரத்த ஓட்டச் சுழற்சி அமைப்பு உடலின் ஒவ்வொரு அணுவிற்கும் இரத்தம் தொடர்ச்சியாக சரியான முறையில் சென்று கொண்டிருக்கிறது என்பதை உறுதி செய்து கொள்ளும். மேலும் இதன் செயல்பாடு ஏதேனும் உடலில் மாற்றங்கள் காரணமாக சரிவர இரத்தப் பரிமாற்றம் நடைபெறவில்லை எனில், தானே போதுமான அளவு இரத்தம் சென்றடைவதற்கான சீர் அமைவைச் செய்து கொள்ளும். ஏதாவது சில அணுக்களுக்குப் பிராணவாயு மற்றும் ஊட்டச்சத்துக்கள் பற்றாக்குறை இருப்பின் திசுக்கள் சேதமடைந்து அணுக்கள் உயிரிழக்க நேரிடும்.




அறத்துக்கும் இதயத்திற்கும் நிறைய தொடர்பு உண்டு. தூய இதயம்தான் அறம் என்கிறார் திருவள்ளுவர். தூய இதயத்தின் பண்புகளாகப் பொறாமை, பேராசை, கோபம், வன்முறை இவற்றை விடுத்து நல்லொழுக்கம், விருந்தோம்பல், நட்பு, ஈகை இவற்றைக் கடைப்பிடித்து வாழ்வதே அறம் என்கிறார். இப்படிப்பட்ட இதயம் கொண்ட மனிதன் எப்போதுமே மகிழ்ச்சியாக இருப்பான்.

எடுத்துக்காட்டாக, புகழ் என்னும் அதிகாரத்தில்;

ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது

ஊதியம் இல்லை உயிர்க்கு.

இல்லாதவர்களுக்குக் கொடுத்து உதவுவதால் ஏற்படும் மகிழ்ச்சி, மனிதனை நோயின்றி வாழவும் வாழ்நாளை இந்த ஈகை என்னும் அறம் ஊதியமாக வழங்குகிறது என்று கூறலாம்.

***தொடர் - 6***
## ***தமிழ் இலக்கியங்கள் கூறும் வாழ்வியல் சிந்தனைகள்-***

# ***பைந்தமிழின் பின்சென்ற பச்சைப் பசுங்கொண்டல்***

***மு. பழநிச்சாமி, நூலகர், டில்லி.***



*பன்னிரு ஆழ்வார்களில் ஒருவர், திருமழிசைப்பிரான். நெஞ்சினிக்க - நாவினிக்க – நினைவெல்லாம் சேர்ந்தினிக்க – சந்தப்பாவைச் சொந்தங்கொண்டு பரந்தாமனைப் பாடிப் பரவும் பான்மையர். அவரது அன்புச் சீடன் கணிகண்ணன். இந்தக் கணிகண்ணன் – கவிபாடும் திறமும் வாக்குப் பலிதமும் வாய்க்கப் பெற்றவன்.*

*கவிஞர்கள், தங்களுக்கே உரிய தனித்ததொரு பண்புநலன் வாய்க்கப் பெற்றவர்கள்.வேறு விதமாகச் சொல்வதானால் அவர்கள் யாருக்கும் கட்டுப்பட்டுக் கட்டுத்தறியில் சிக்குண்டவர்கள் அல்லர். அவர்கள் சுதந்திரப் பறவைகள்.*

*கவிஞன் எந்த அரசனுக்கும் அடங்கினவன் அல்லன்; தன் நிலையில் அவன் தலைமையான ஒரு சக்கரவர்த்தியே- என்பார் எமர்சன். (*The poet is not permissive potentate, but is emperor in his own right.)

*குலோத்துங்க சோழனோடு கம்பருக்கு ஏற்பட்ட கருத்து வேறுபாட்டால்*

*`மன்னவனும் நீயோ வளநாடும் உன்னதோ*
*உன்னை அறிந்தோ தமிழை ஓதினேன்-- என்னை*
*விதந்தேற்றுக் கொள்ளா வேந்துண்டோ உண்டோ*
*குரங்கேற்றுக் கொள்ளாத கொம்பு' -*

*என்று வெகுண்டெழுந்துபாடி நாட்டை விட்டு அகன்று விட்டார்.*

*உயிருடன் இருக்கும் பொழுதே இரங்கற்பா (சரம சுலோகம்) பாட வற்புறுத்திய போஜராஜனின் வேண்டுகோளை- ஏற்க மறுத்து- மாறுபட்டு- மாறுவேடம் பூண்டு- விலகி வெளியேறியவர்தான் காளிதாசர். இங்கு நாம் பேச எடுத்துக் கொண்ட கணிகண்ணனுக்கும்- கவிஞர்களுக்கே உரிய இதுபோன்ற பெருமித உணர்வும் - அதன் எதிர்விளைவாக அரசகட்டளைக்கு ஆட்படும் அல்லல் நிலையும்தான் ஏற்பட்டது.*

காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்த அன்றைய பல்லவ மன்னன், தன்மீது ஒரு கவிபாடிப் பெருமைப் படுத்தும்படி - கணி கண்ணனிடம் வேண்டினான்.

'எம்பெருமான் திருமாலை ஏத்தும் என் நா – உம் பெருமை பேசென்றால் பேசுமா? – ஒருபோதும் பேசாது.' – என்று சொல்லி மறுத்து மொழிந்தான்.

சீறிச் சினந்த பல்லவ மன்னன் - நாட்டை விட்டு வெளியேற ஆணையிட்டான். அரச கட்டளையை மறுக்க முடியாத கணிகண்ணன் – அப்பொழுதே ஊரை விட்டு வெளியேறத் தொடங்கினான்.




தன் சீடனுக்கு நேர்ந்ததை அறிந்த திருமழிசைப்பிரான்- நெஞ்சம் நொந்து வருந்தினார். தன் சீடனைத் தொடர்ந்து - தானும் காஞ்சியைவிட்டு வெளியேற எண்ணினார். வெளியேறுவதற்கு முன்னர் – கோயிலுக்குச் சென்று - பெருமாள் சன்னிதியில் நின்று – தன் நெஞ்சக் குமுறலிலிருந்து வெளிவந்த உணர்வுகளைப் பாட்டாகப் பாடினார்.

அந்தப் பாடலில் – தனக்கும் இறைவனுக்கும் உள்ள உறவும் உரிமையும் நெருக்கமும் நேர்பட – நிமிர்வுடன் பேசுகிறார். அதிகாரத்தின் மேலெல்லையில் இருப்போர் –தன் கீழுள்ள அதிகாரிகளுக்கு ஆணையிடுவதுபோல் – அதிகாரம் கலந்த தொனி - அதில் ஒலிப்பதைக் காணலாம்.

"கணிகண்ணன் போகின்றான் காமருபூங் கச்சி
மணிவண்ணா! நீகிடக்கவேண்டா- துணிவுடைய
சென்னாப் புலவன்யான் செல்கின்றேன் நீயுமுன்றன்
பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்."

"என் சீடன் மணிவண்ணன் ஊரைவிட்டுப் போகிறான்; நானும் புறப்பட்டேன்; மணிவண்ணப் பெருமாளாகிய நீ - உன் பாம்புப் படுக்கையில் சுகமாகப் படுத்துக் கொண்டிருக்க வேண்டாம்; நீயும் – உன் பாம்புப் படுக்கையைப் - பாயைச் சுருட்டுவதுபோல் சுருட்டிக்கொண்டு என் பின் வா" –எனப் பொருள்படும்படி

அமைந்துள்ளது – இப்பாடல். (இதில் "செந்நாப் புலவன் யான்" – என்பது அவரின் resume).

இவ்வாறு ஆழ்வார் பாடிப் போகவே – திருமாலும் மலர்மகளோடு - அவர் பின் சென்றார். நேர்ந்ததை எண்ணி நெஞ்சம் வருந்திய அரசன் – சென்ற கணிகண்ணனைத் தேடிக் கண்டு தொழுது –பிழைபொறுத்து ஊருக்குத் திரும்ப வேண்டினான். வேண்டுதலை ஏற்று இவன் மீண்டு வந்தான்.

இதைப் பார்த்த ஆழ்வார் -சமாதானமடைந்து –

"கணிகண்ணன் போக்கொழிந்தான் காமருபூங்கச்சி
மணிவண்ணா நீ கிடக்கவேண்டும் துணிவுடைய
செந்நாப் புலவரும் செலவொழிந்தார் நீயுமுன்றன்
பைந்நாகப் பாய் படுத்துக்கொள்"

- எனும் இந்தப் பாடலைப் பாடி ஆழ்வார் வேண்ட – ஆழ்வாருடன் ஆண்டவனும் தேவியுடன் மீண்டு வந்து ஆலயத்துள் அமர்ந்தருளினார்.




இந்தப்பாடலும் அதன் அனுபவப் பொருளும் குமரகுருபரரின் உயிரணுவைத் தொட்டு உலுக்கியிருக்க வேண்டும். இந்த நிகழ்வை மீனாட்சி அம்மை பிள்ளைத் தமிழில் சேர்த்து -தமிழுக்கு ஏற்றம் தரும் வகையிலும் -தமிழ்மீது திருமாலுக்கு உள்ள காதலை வெளிப்படுத்தும் வகையிலும் - நறை பழுத்த துறைத் தீந்தமிழில் உள்ளம் குளிர உயிர் குளிர மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் நூலில் பாடியுள்ளார்.

"பழமறைகள் முறையிடப் பைந்தமிழ்ப் பின்சென்ற
பச்சைப் பசுங் கொண்டலே."
என்பது அப்பாடல் வரிகள்.

பழைய மறைகளாகிய வேதங்கள்- நீ எம்மை மறந்து விட்டாயே எனப் புலம்பும் வண்ணம் - இனிய தமிழ்ப்பாடலின் மீது விருப்புற்று அதனைப் பாடும் புலவரைத் தொடர்ந்து பின் சென்ற பசுமை நிறம் வாய்ந்த மேக வண்ணனான திருமாலே!

என்பது இதன் பொருள்.

*இந்த நிகழ்வை நினைவிற்கொண்டு –*

*'ஆடவரத் தாழ்பாய லாளரை நீதானே தொடர்ந்தாயோ*
*சூழ்பாயோடு உன்னைத் தொடர்ந்தாரோ?'*

*- என்று சமத் காரமாகப் பாடுகிறார் தமிழ்விடுதூது பாடிய பாவலர். (தமிழ்விடு தூது)*

*முன்போம் புலவர்க்குப் பின்போன திருமாலின் இந்த நிகழ்வை -- கீழ்க்கண்டவாறு நினைந்து பேசுகிறது தொண்டமண்டல சதகம்.*

*'பின்போர் தமைக்கண்டு பாவித்ததோ அன்றிப் பின்பு வந்தோர்*
*தன்போல் நடக்கப் பணிப்பித்ததோ தமிழ்க்கே இரங்கி*
*முன்போம் புலவர்க்கு பின்போயினானும் முகுந்தனிது*
*வன்போ மனத்தினில் அன்போ சொல்வீர் தொண்ட மண்டலமே'.*
*(தொண்டமண்டல சதகம்-20)*

*தமிழ்ப் புலமை வாய்ந்த கணிகண்ணன் பின்னே – மணிவண்ணன் சென்றுள்ளதை - இன்னவாறு நூல்கள் வியந்து குறித்துள்ளன.*

*(பி.கு. பன்னிரு ஆழ்வார்களில் ஒருவரான திருமழிசைப்பிரான். இவர் நான்முகன் திருவந்தாதி என்னும் நூறு வெண்பாக்கள் கொண்ட நூலையும் திருச்சந்த விருத்தம் என்னும் 120 விருத்தங்களைக் கொண்ட நூலையும் இயற்றியுள்ளார். இது நாலாயிர திவ்ய பிரபந்தத் தொகுப்பில் இடம் பெற்றுள்ளது. இவரது காலம் 7 ஆம் நூற்றாண்டு என்பர்.)*

***ஆசிரியர் குறிப்பு:***

*மு. பழநிச்சாமி, நாகமலை. மதுரை*

*திரு, மு. பழநிச்சாமி, மதுரை மாவட்ட உசிலம்பட்டி வட்டம் வாலாந்தூர் கிராமத்தில் தெய்வத்திரு முத்துச் சிதம்பரம் - மீனாட்சியம்மாள் தம்பதியினர்க்கு மகனாக 1935-இல் பிறந்தவர். மதுரை அமெரிக்கன் கல்லூரியில் இன்டர்மீடியட் பயின்று, பின்னர் சென்னைப் பல்கலைக்கழகத்தில் நூலகவியல் பயிற்சி பெற்று, தமிழக அரசின் பொது நூலகத் துறையில் நூலக அதிகாரியாகப் பணியாற்றி ஓய்வு பெற்றவர். தொல்காப்பியம், சங்க இலக்கியம் மற்றும் பக்தி இலக்கியங்களைப் பயின்று அதில் ஆழங்காற் பட்டவர். இடைக்கால இலக்கியங்களில் தோய்வும் நவீன இலக்கியங்களில் நாட்டமும் கொண்டவர். காக்கைச் சிறகினிலே, காலச்சுவடு ஆகிய அச்சு இதழ்களிலும், கீற்று முதலான இணைய இதழ்களிலும் நூல்விமரிசனம் மற்றும் பல்சுவைக் கட்டுரைகள் எழுதி வருபவர்.*

# வழிபாட்டிற்கு வந்திருக்கும் தவ்வை கோயில்

**முனைவர் ப. தேவி அறிவுச் செல்வம்,**
*கோயில் கட்டிடக்கலை மற்றும் சிற்பத்துறை கள ஆய்வாளர்*



*தவ்வை கோயில்:*

*தவ்வை/ மூதேவி/ ஜேஷ்டா தேவி*
*இருப்பிடம் —திருப்பரங்குன்றம் அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் குடைவரைக் கோயில்*
*காலம் — கிபி 773*



*முருகன் கோயிலின் அர்த்த மண்டபத் தூணில் சதுர பாகத்தில் 14 வரிகள் கொண்ட கிரந்தம் கலந்த வட்டெழுத்து உள்ளது. அக் கல்வெட்டுச் சொல்லும் செய்தியானது கிபி 773 இல் மதுரையை ஆட்சி செய்த மாறன் சடைய பாண்டிய மன்னரின் ஆறாவது ஆட்சி ஆண்டில் முதலமைச்சராக இருந்த சாத்தன் கணபதி என்பவரின் மனைவி நக்கன் கொற்றி ஜேஷ்டா தேவி மற்றும் துர்க்கைக்குக் கோயில் எடுப்பித்ததாகத் தெரிவிக்கிறது. பல வருடங்களாக வழிபாட்டில் இல்லாமல் இருந்த இந்த ஜேஷ்டா தேவி, 21.12. 22 அன்று மாலை அங்கு இருக்கும் அர்ச்சகர்களைக் கொண்டு தீபாராதனை வழிபாடு செய்யப்பட்டது. மறுநாள் 22.12.22 அன்று காலை அர்ச்சகர்களைக் கொண்டு தேங்காய், பழம் உடைத்து எங்களது பாண்டியர் தேடி பயணம் குழுவால் வழிபாடு செய்யப்பட்டது. எங்களது இந்த முயற்சிக்குப் பின்பு பல ஆண்டுகளாகப் பொதுமக்களின் வழிபாட்டில் இல்லாத இக்கோயில் விரைவில் அதற்கான ஏற்பாடுகளுடன் பொதுமக்கள் வழிபாட்டிற்கு வர இருக்கிறது.*

***சிற்ப விவரம்:***

*குடைவரையில் தவ்வை புடைப்புச் சிற்பமாக அமர்ந்த நிலையில் இரண்டு கால்களையும் தொங்க விட்ட மாதிரியாக அமைக்கப்பட்டுள்ளார். வலது புறம் தன் மகன் மாந்தனுடனும் இடதுபுறம் மாந்தியுடனும் இருக்கிறார். வலது கையில் மலரையும், இடது கையைத் தன் மகளின் தொடை மீதும் வைத்த மாதிரி காட்டப்பட்டுள்ளது.*

***சான்றாதாரம்:***

*தென்னிந்தியக் கல்வெட்டு, தொகுதி 14, பக்கம் இரண்டு*

# சந்திரோதயம் பதிப்பகம், மதுரை

**3/422, Thiruvalluvar Street,**
**Dinamani Nagar, Madurai 625 018.**
**Mob: +91 7010997639**

| | **நூல்கள்** | **விலை (Rs.)** |
|---|---|---|
| *1.* | *திருவிளையாடல் புராணக் கதைகள் (எளிய உரைநடையில்)* | *200* |

**கவிஞர் முத்தமிழ் விரும்பியின் கவிதை நூல்கள்**

| | | |
|---|---|---|
| *1.* | *உன்னோடு உரையாடுதல்* | *100* |
| *2.* | *காதல் மொழி* | *200* |
| *3.* | *பார்வையில் பூத்த நிலா* | *100* |
| *4.* | *தேனடையும் வரலாறு* | *100* |
| *5.* | *நுண்கலை மருத்துவன்* | *200* |
| *6.* | *தொடரும் புழுதிக்கால்கள்* | *100* |

**முனைவர் செ. இராஜேஸ்வரியின்**

**எம்.ஜி.ஆர். பற்றிய நூல்கள்**

| | | |
|---|---|---|
| *1.* | *வெற்றித்திருமகன் எம்.ஜி.ஆர்.* | *200* |
| *2.* | *எம்.ஜி.ஆர். நிழல் நிஜம் நிரந்தரம்* | *200* |
| *3.* | *சிக்கு மங்கு சிக்கு மங்கு சச்ச பப்பா (எம்.ஜி.ஆர். கற்பிக்கும் குழந்தை வளர்ப்பு முறைகள்)* | *200* |
| *4.* | *வீரமகன் போராட வெற்றி மகள் பூச்சூட* | *200* |
| *5.* | *மகளிர் போற்றும் மக்கள் தலைவர் எம்.ஜி.ஆர்.* | *200* |
| *6.* | *எம்.ஜி.ஆர். ஒரு ஜீவ நதி* | *200* |
| *7.* | *எம்.ஜி.ஆர். ஒரு கலியுகப்போராளி* | *200* |
| *8.* | *ஒளி விளக்கு எம்.ஜி.ஆர்.* | *200* |
| *9.* | *வெற்றிப் படிக்கட்டில் நாடோடி மன்னன் – I* | *200* |
| *10.* | *நீங்க நல்லா இருக்கணும் [எம்.ஜி.ஆரின் திரைப்படப் பாடல்கள் -I]* | *200* |
| *11.* | *பாட்டுடைத் தலைவன் எம்.ஜி.ஆர். [எம்.ஜி.ஆரின் திரைப்படப் பாடல்கள் - II]* | *200* |
| *12.* | *இரசிகர்களின் இதய தெய்வம் எம்.ஜி.ஆர்.* | *200* |
| *13.* | *முத்தமிழ்க் காவியம் மதுரை வீரன்* | *200* |
| *14.* | *இரட்டை வேடத்தில் ஜொலிக்கும் எம்.ஜி.ஆர்.* | *200* |
| *15.* | *எம்.ஜி.ஆர். படங்களில் அறிவியல் புனைவு* | *200* |
| *16.* | *படகோட்டி, மீனவ நண்பன் ஓர் ஒப்பீடு* | *200* |
| *17.* | Unique Fandom of MGR | *200* |
| *18.* | *எம்.ஜி.ஆர். படங்களில் தொழில் தர்மம்* | *200* |
| *19.* | *எம்ஜிஆர் படத்தில் சண்டைக்காட்சிகளின் சுவாரஸ்யங்கள்–I* | *200* |

| | | |
|---|---|---|
| *20.* | *எங்க வீட்டுப்பிள்ளை* | *200* |
| *21.* | *எம்.ஜி.ஆர். வீடும் விருந்தும்* | *200* |

**முனைவர் சந்திரிகா சுப்பிரமணியன் நூல்கள்**

| | | |
|---|---|---|
| *1.* | *தலைமை பொறுப்பேற்கலாம்* | *120* |
| *2.* | *இணையத் தமிழ்* | *150* |
| *3.* | *ஊடகச் சட்டங்கள்* | *250* |
| *4.* | *ஆஸ்திரேலியாவில் அருந்தமிழ்* | *200* |
| *5.* | *கொசு வீட்டில் பாயாசம் (சிறுவர் நூல்)* | *200* |
| *6.* | *மாயோன் வீட்டுத் தோட்டத்தில் (சிறுவர் நூல்)* | *200* |

**முனைவர் செ. இராஜேஸ்வரியின்**
**சமூகப்பண்பாட்டு ஆய்வு நூல்கள்**

| | | |
|---|---|---|
| *1.* | *பண்பாட்டு நகர்வுகள் – தமிழ் நாட்டில் இருந்து ஜப்பானுக்கு* | *200* |
| *2.* | *பெண் தெய்வ வழிபாடு* | *200* |
| *3.* | *தேவேந்திரன்* | *200* |
| *4.* | *மருதநிலப் பெண் தெய்வங்கள் (வராகி, பிடாரி, தவ்வை)* | *200* |
| *5.* | *இரு நிலத்தில் திருமுருகன்* | *200* |
| *6.* | *முன்னோர் வழிபாடு (கதிரவன், காலதேவன், நாகர் வழிபாடும்)* | *200* |
| *7.* | *வேளாண்மரபில் விதைப்பும் பூப்பும்* | *200* |
| *8.* | *யானைக்கடவுள்* | *200* |
| *9.* | *பெண் பூப்பின் புனித வழிபாடு* | *200* |

## முனைவர் செ. இராஜேஸ்வரியின்
**கவிதைத் திறனாய்வு நூல்கள்**

| | | |
|---|---|---|
| *1.* | *பாடுபொருளும் பாசப்பொருளும்* | *250* |
| *2.* | *“பூ மர நிழலி”ன் களமும் காலமும்* | *200* |
| *3.* | *“2020 தைமாதத்தில் இன்று” கவிதையில் அடிக்கருத்தியல் ஆய்வு* | *100* |
| *4.* | *கவிஞர் முத்தமிழ் விரும்பியின் **கவிதையில் காதல்*** | *100* |
| *5.* | *கவிஞர் முத்தமிழ் விரும்பியின் பயணக் கவிதைகள்* | *200* |

## ஆங்கிலக் கவிதைகளின் தமிழ் மொழி பெயர்ப்பு
**முனைவர் செ. இராஜேஸ்வரி**

| | | |
|---|---|---|
| *1.* | *எட்டுத்திக் கும் செல்வீர்* | *200* |
| *2.* | *அவன் கடவுளுக்கு நிகரானவன்* | *200* |
| *3.* | *செக்கச் சிவந்த ரோஜா* | *200* |
| *4.* | *கலீல் ஜிப்ரா னின் “மணலும் நுரையும்”* | *200* |
| *5.* | *கலீல் ஜிப்ரானின் “பாடல்கள் 14”* | *200* |

## Tamil Classics in English – (Dr. C. Rajeswari)

| | | |
|---|---|---|
| *1.* | Kurunthokai | *200* |
| *2.* | Agananooru | *200* |
| *3.* | Purananooru | *200* |
| *4.* | Naaladiyaar | *200* |
| *5.* | Aasaarakkovai | *200* |

6. Thiru Kutraala Kuravanji 200

**தற்காலத் தமிழில் சங்க இலக்கிய நூல் வரிசை**

1. குறுந்தொகைக் கவிதைகள் 200

**மொழிபெயர்ப்பு ஆய்வு நூல்கள் – முனைவர் செ. இராஜேஸ்வரி**

1. மொழிபெயர்ப்பியல் ஆய்வு (ஆய்வு நூல்) 200
2. கவிதை மொழிபெயர்ப்பு 200
3. நவீன மொழிபெயர்ப்பு உத்திகள் (Co-author) 200
4. மொழிபெயர்ப்பில் பெயரும் பொருளும் 200

**தமிழ் இலக்கண நூல்**

1. தமிழில் வேற்றுமை உருபுகள் 200

**சிறு கதை, கவிதை**

1. அமராவதியின் காதல் - சத்யப்பிரபா 200
2. ரோஜா மொட்டு (சித்திரக் கவிதைகள்) - சத்யப்பிரபா 200

**மாத இதழ்கள்**

1. தமிழணங்கு மாத இதழ் 200
2. Love Thamizh 500

**பேராசிரியர் முனைவர் தே. ஞானசேகரனின் நூல்கள்**
**ஆங்கிலத்தில் – முனைவர் செ. இராஜேஸ்வரி**

**Moonstone Publication, Madurai**

1. Emerging Mallarism 200
2. Festival of lord Indra 200
3. Role of Devendirar's in Indian war of Independence (Sundaralingam Kudumbanar) 200
4. Re reading of Pallu literature 200
5. Mallariyan Literature 200
6. Frontyard without My Dad (Poem) 200

**Poems of Er.Poet Muththamizh Virumbi - In English Dr. C. Rajeswari**

**[Moonstone Publication]**

1. Therapist of the Finest Art 200
2. Following Dusty Feet 200

**Other Books**

1. Concepts of Constitution - Dr.S. Kalai Arasu 300
2. Aranyani By Vijeni (English Novel Part I & Part II) 200



# உலகத்தரத்தில் ஒருங்கிணைந்த மாற்று மருத்துவம்



## ஆத்மா ஒருங்கிணைந்த மருத்துவ மையம்

## AATHMA INTEGRATED MEDICAL CENTRE

நமது பாரம்பரிய முறைப்படி, காய்ச்சல் முதல் கேன்சர் வரை, உடலின் அனைத்து பாகங்களிலும் உள்ள பிரச்சனைகளுக்கு நிரந்தர தீர்வு. முதல் சிகிச்சையிலேயே முன்னேற்றத்தை உணரலாம்.

ஆயுர்வேதம் ✸ சித்த மருத்துவம் ✸ ஹோமியோபதி ✸ யோகா ✸ நேச்சுரோபதி
எலக்ட்ரோபதி ✸ கொரிய நாட்டு ராஜ வம்ச அக்குபங்க்சர் ✸ வர்மம்

பாரம்பரிய கேரள ஆயுர்வேத பஞ்சகர்மா சிகிச்சை அளிக்கப்படும்

**சிறப்பு பிரிவு**

- மூளை
- கண் / காது / மூக்கு
- இதயம்
- கல்லீரல்
- பித்தப்பை
- மன்னீரல்
- தோல்
- முதுகு தண்டு
- சிறுநீரகம்

**சிறப்பு சிகிச்சைகள்**

- மாதவிடாய் பிரச்சனைகள்
- குழந்தையின்மை
- ஆண்மைக் குறைபாடு
- சர்க்கரை
- மூட்டு வலி / உடல் வலி
- முகம் / உடல் அழகு
- வயிற்றுக் கோளறுகள்
- புற்றுநோய் / கட்டிகள்
- சிறுநீரகக் கல் / கட்டி
- சினைப்பை நீர்க்கட்டி
- சளி / இருமல் / காய்ச்சல்
- சைனஸ் / அலர்ஜி
- உடல் பருமன்
- தைராய்டு
- வாத நோய்கள்
- ஆஸ்துமா
- சொரியாசிஸ்
- தண்டுவட சீரமைப்பு
- இதய நோய் / வலி
- அஜீரணம் / கேஸ்
- கர்ப்பப்பை கட்டிகள்
- மூலம் / பௌத்திரம்
- தூக்கமின்மை
- வெரிகோஸ் வெயின்

அறுவை சிகிச்சை செய்ய வேண்டும் எனும் வியாதிகளுக்கு அறுவை சிகிச்சையே இல்லாமல், பக்க விளைவுகள் இல்லாமல் பூரண குணம் அளிக்கப்படும்.

**சிறப்பு சிகிச்சை முறைகள்**

ராஜ வைத்திய பஞ்சகர்மா, காஸா சிகிச்சை,
டார்ன் – முதுகெலும்பு மற்றும் மூட்டுகள் சிகிச்சை,
சிறப்பு முக அழகு மற்றும் உடல் அழகு மேம்பாட்டு சிகிச்சை, ஹிஜாமா,
முழு உடல் ஆயுர்வேத மருத்துவ மசாஜ், நச்சு / கழிவு நீக்க சிகிச்சை

**பார்வை நேரம் :**

காலை 9.00 முதல் 2.00 மணி வரை மாலை 4.00 முதல் 8 மணி வரை
பிரதி வியாழன் விடுமுறை

# 76/91, காமாட்சியம்மன் திருமண மண்டபம் வீதி, பழைய பேருந்து நிலையம் பின்புறம், திருப்பூர் – 4. செல் : **9159 211 311** www.aimchospital.com



**தமிழணங்கு மாத இதழை வெளியிடுவோர்:** இ. சதீஷ் ராஜ்குமார் (அட்வகேட்), இயக்குனர், சந்திரோதயம் அறக்கட்டளை, 3/422, தினமணி நகர், மதுரை 625 018, Ph: +91 7871123226